12807



உ
சிவமயம்

# கோவிலூர்

## திருக்குட நீராட்டு மலர்



1978

உ

சிவமயம்

30-1

# கோவிலூர்

## அருள்தரு திருநெல்லைநாயகி உடனுறை

## அருள்மிகு கொற்றவாள் ஈசுவரர் கோவில்

# திருக்குட நீராட்டு மலர்

பதிப்பாசிரியர்

**'சோமலெ'**




**கோவிலூர் மடாலய ஆண்டவர் மன்றம்**

**கோவிலூர் 623-307**

இராமநாதபுர மாவட்டம்

30-1

# முன்னுரை

அருள்தரு திருநெல்லை நாயகி அம்மனுடன் கூடிய அருள்மிகு கொற்றவாள் ஈசுவரர் கோவில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா 21-4-1978-ல் சீரும் சிறப்புமாக நிகழ்ந்தது. அதன் நினைவாக வெளிவருவது இம்மலர்.

இவ்வெளியீட்டில் இக்கோவிலைப் பற்றியும், கோவிலூர் ஆதீனத்தைப் பற்றியும் விவரங்கள் உள்ளன. கோவிலூர் ஆதீனத்தைப் பற்றி ஒரு நூலை நான் உருவாக்க வேண்டுமென்று ஆதீனகர்த்தா ஸ்ரீ-ல-ஸ்ரீ இராமநாத ஞானதேசிகர் அவர்கள் 1972-ல் பணித்தார்கள். ஆனால் எதுவும் பருவத்தால் அன்றிப்பழா.

வெறும் சொற்கோவிலொடு நின்று விடாது, கற்கோவிலைப் புதுக்கியும் இப்பணி நிறைவேற வேண்டுமென்பது இறையருள் போலும்.

இந்நூலில் அடங்கிய செய்திகள் அனைத்தையும் நான் பல நூல்களிலிருந்தும் பெரியவர்கள், துறவிகள் ஆகிய பலருடன் உரையாடியும் சேகரித்துள்ளேன். ஆதீன கர்த்தர் அவர்கள் பல நாட்களை எனக்கு ஒதுக்கி, நல்வழி காட்டியிருக்கிறார்கள். ஒவ்வொரு நாளும் 'திருக்களர்ப் புராணம்' பார்த்தாயிற்றா? 'மீனாட்சி சுந்தரம் பிள்ளை கோவிலூர்ப் புராணம் தெரியுமே'? 'டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் கருத்துக்கள் இடம் பெற்று விட்டனவா'? 'சேவு பழநியப்ப ஐயா பாடல்களைச் சேர்த்து விட்டீர்களா'? என்றெல்லாம் கேட்டு, விரிந்த எண்ணங்களை விதைத்து வந்தார்கள். சிறந்த எழுத்தாளராகவும் நீண்ட பல ஆண்டுகள பத்திரிகைத் துறையில் தொடர்பு உடையவர்களாகவும், ஆதீனத்து வரலாற்றை நுணுகி அறிந்தவர்களுமான அவர்கள் வழங்கிய அறிவுரையும், கருணையுடன் காட்டிய ஆதரவும் அடியேனை உழைப்பில் ஆழ்த்தின. இந்நூலில் கண்டுள்ள தகவல்களுக்கு யானே பொறுப்பு என்பதையும் பணிவுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

முன்னைய ஆதீன கர்த்தர்களில் சிலர், மடாதிபதிகளில் சிலர், கிளை மடங்கள் சில—பற்றிச் சரியான அல்லது முழுமையான விவரம் கிடைக்கவில்லை. கிடைத்த அளவில் மட்டுமே வெளியிட நேர்ந்துள்ளது. தகவல் கிடைக்காத காரணத்தால், அந்த அமைப்புகளின் பெருமையை நாங்கள் குறைத்ததாகக் கருதலாகாது.

ஸ்ரீமத் குட்டையைய சுவாமிகள் மடாலயம் என்ற கட்டுரையைப் படித்துவிட்டு, அன்பர்கள் மதுரை மீனாட்சி யம்மன் திருக்கோயிலுக்கு ஒருமுறை செல்ல வேண்டுகிறோம்.

கோவிலூர் ஆதீன பரம்பரை மாணாக்கர் பெயர்கள் ஓரளவு, தெரிந்த வரையில் குறிக்கப் பெற்றுள்ளன. இன்னும் ஏராளமானவர்கள் ஆங்காங்கு தம்மை வெளிப் படுத்திக் கொள்ளாமல் வைராக்கிய புருஷர்களாக நிஷ்டாபரர் களாக இருந்து வருகின்றனர்.

நகரத்தார் பலர் ஞானமார்க்கத்திலும் தலை சிறந்து விளங்கி, தமிழ் நாட்டில சமயக் கல்வித் துறையில் தங்கள் முத்திரையைப் பொறித்துள்ளனர் என்பது இவ் வெளி யீட்டால் புலனாகும்.

சைவ ஆகம மற்றும் வேதாந்தப் பாடங்கள் என்ற வகையால் சிலர் நெஞ்சத்தில் நிலவும் சிக்கல்களைத் தெளி வாக்க உதவும் கட்டுரையையும் இவ்வெளியீட்டில் சேர்த் துள்ளேன்.

ஆதீன கர்த்தர் அவர்களுக்கு என்னுடைய வணக்கம் என்றும் உரியது. இதனை வெளியிடும் கோவிலூர் மடாலயத்து ஆண்டவர் மன்றத்தார்க்கு என் நன்றியைப் புலப்படுத்திக் கொள்ளுகிறேன்.

இவ்வெளியீடு அச்சு வடிவம் பெற உதவிய பெருமை கோட்டையூர் அ. க. அ. சித. அழ. சிதம்பரம் செட்டியார் அவர்களுக்கும், காரைக்குடி அ. சொ. அண்ணாமலைச் செட்டியார் அவர்களுக்கும் உரியது.

இவ்வெளியீடு உருவாக உறுதுணையாக இருந்தவர்கள் நூற்றுக்கு மேற்பட்டவர்கள். குறிப்பாகச் சிலரைச் சுட்ட லாம்.

30-1

கம்பன் அடிப்பொடி சா. கணேசன் அவர்கள் காரைக்குடி

மு. மெ. முத்துராமன் செட்டியார் அவர்கள் காரைக்குடி

ஏ. கே. செட்டியார் அவர்கள், சென்னை

மறைமலையடிகளார் நூலகம் நூலகர் முத்துக் குமார சாமி அவர்கள், சென்னை.

கி. கரு. ராம. சாமிநாதன் செட்டியார் அவர்கள், தேவ கோட்டை.

கட்டுரையாளர்கள்

ஸ்ரீ தேவி கமர்சியல் இன்ஸ்டிட்டியூட் திரு. வி. சுப்பிரமணியம்

திருச்சி வானொலி நிலையத்தார்

நேர்முக வருணனையாளர்கள்

ஃபோட்டோ எடுத்துத் தந்த காரைக்குடி சுந்தரம் ஸ்டுடியோ.

மூவேந்தர் அச்சகத்தார்

இவர்கள் அனைவரும் கோவிலூர்க் கிராம தேவதை யான ஐயுளி அம்மன் அருளாலும், திருநெல்லை நாயகி அம்மனுடன் கூடிய கொற்றவாள் ஈசுவரர் திருவருளாலும் கோவிலூர் ஆதீன கர்த்தர் அவர்களுடைய ஆசியாலும் எல்லா நலங்களும் பெற்று வாழ்வார்களாக!

சாஸ்திரி நகர் அஞ்சலகக் கட்டிடம்
சென்னை – 600020
5—6—1978

சோமலெ
பதிப்பாசிரியர்.

# பொருளடக்கம்

## ஐயுளி அம்மன் என்ற பஞ்சாட்சர நாயகி

இது கழனிவாசல் கிராமத்துக்கு உரிய கிராமத்தேவதை. கோவிலூர் ஆண்டவர், இந்த அம்மனுக்குக் கற்கோவில் கட்டிப் பின்வரும் பாடலையும் பாடியுள்ளார்கள்.

### நேரிசை கட்டளைக் கலித்துறை

கண்ட பொருளல்ல காணுப் பொருளல்ல

கண்ட பொருள்

மண்டுமிருளல்ல

மாயுமொளியல்ல மன்னுமொளி

பண்டென்பது மல்லவின் றென்பதல்ல பராபரமா

மண்டமடங்க வடங்காப் பெரு வெளியையுளியே.

கொற்றவாள் ஈசுவரர்கோவில் குருக்கள் இங்குச் சென்று காலை 9 மணி அளவில் ஒரு காலப் பூசை செய்து வருகிறார்.

ஆடிப் பூரத் திருவிழாவுக்கு ஐயுளி அம்மன் கோவிலுக்குக் கொற்றவாள் ஈசுவரர் திருநெல்லை நாயகி அம்மன் கோவிலிருந்து ஐயுளி அம்மனின் உற்சவ விக்கிரகம் எழுந்தருளி, திரும்பி வந்து மறுநாள் கொடி ஏற்றம் நடைபெறுவது வழக்கம்.

இக்கோவிலுக்கு 15-4-1978 (பங்குனி 30ல்) கும்பாபிஷேகம் செய்யப் பெற்றது.

சிவமயம்

# அருள் தரும் திருநெல்லை அம்மனுடன் கூடிய அருள் மிகு கொற்றவாள் ஈசுவரர்

# கோயில் வரலாறு

## தலம்

பாண்டி நாட்டில் காரைக்குடி என்னும் நகரின் மேற்கு எல்லையாக உள்ள இச் சிற்றூர், தொன்மையாகப் புகழ் பெற்றது. இவ்வூர் 18-ம் நூற்றாண்டுவரை கழனி, கழனி நகர், சமிவனம் என்ற பெயர்களால் விளங்கி வந்தது.

இன்றும் அரசினர் கணக்குகளிலும் சிவகங்கை தேவஸ்தானத்துப் பதிவேடு களிலும் இவ்வூர் 'கழனிவாசல்' என்றே குறிப்பிடப் பெறுகிறது. கோவிலூர் ஆதீனத்துக் கட்டிடங்களுக்கும் காரைக் குடி - குன்றக்குடிச் சாலைக்கும் இடையே ஓடும் தேனாற்றைத் தென் எல்லையாகக் கொண்டது இவ்வூர். சுவேதன் என்னும் மன்னன் அன்னதானம் செய்யாப் பாவம் நீங்கக் கோவிலூரில் குடியேறிக் காடு வெட்டிக் கழனியாக்கினான். எனவே இவ் வூருக்குச் சாலிவாடி என்னும் பெயர் உண்டாயிற்று என்றும் கூறுவர்.

கழனி - வயல். இந்நாளிலும் இப்பகுதி வயல்கள் சூழவே காணப்படுகிறது.

சமிவனம் என்பது, இங்கு இருந்த காட்டின் பெயர் ஆகும்.

சமி - வன்னி. வன்னி மரங்கள் அந் நாளில் மிகுதியாக இருந்திருக்க வேண்டும். காரைச்செடி நிறைந்த ஊர் காரைக்குடி எனப் பெயர் பெற்றது போல, வன்னி மரங்கள் நிறைந்த வனத்தால் புகழ் பெற்ற தலத்தைச் சமிவன க்ஷேத்திரம் என வட நூல் வல்லார் கூறினர்.

இந்தக் காட்டினூடே சுயம்பு லிங்கம் ஒன்று இருந்தது.

12-ம் நூற்றாண்டு வரை கூரைக் கொட்டகையிலும் அதன் பின்னர் செம்பூ ரான் கற்களாலானதுமான கோவிலிலும் சிவபெருமானின் திருவுருவமும் அம்பிகை யின் திருவுருவமும் இருந்தன என்பர்.

## ஊர்ப்பெயர்

19-ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இங்கு வந்த காரைக்குடி (பிற்காலத்தில் கோவிலூர் ஆண்டவர் என்று பெரும் புகழ் பெற்ற ஞானியாகிய) முத்துராமலிங்கம் என்ற பெரியவர்கள் இக்கோவிலைக் கருங் கல் திருப்பணியாக்கினார்கள் புதிததாகக் கயிலாசநாதர், நித்திய கல்யாணி அம்மன், அகஸ்தீசுவரர் ஆகிய இறை உருவங்களை இங்கு நிலை நாட்டினார்கள். கோவிலுக்கு முன்னால் திருக்குளமும் கோவிலைச் சுற்றிச் சத்திரங்கள், மடங்கள், வீடுகள் ஆகிய வற்றையும் உண்டாக்கினார்கள். இவ் வாறாக, கோவிலை ஒட்டி உண்டான ஊர், மக்கள் நாவில் கோவிலூர் எனப் பெயர் பெறுவதாயிற்று.

## காரைக்குடியும் கோவிலூரும்

காரைக்குடியிலிருந்து இவ்வூர் வழியே திருப்புகழ் பெற்ற குன்றக்குடி, தேவாரம் பெற்ற திருப்பத்தூர் முதலிய ஊர்களுக் குச் செல்லும் சாலை கோவிலூர்ச்சாலை என்றே வழங்கி வருவது, காரைக்குடி வாழ்நரின் வாழ்க்கையில் இவ்வூர் பெற்ற தனிச்சிறப்பினைப் புலப்படுத்தும். அந் நாளில் காரைக்குடியில் சிவன் கோவில் இல்லை என்பதும் குறிப்பிடத்தக்கது. காட்டுக்குள் கோவில் கொண்டிருக்கும் (மூலவரான) கொப்புடைய அம்மனின் உற்சவ விக்கிரகத்துக்குக் கல்லுக்கட்டி யின் கரையில் கட்டப் பெற்றிருக்கும் கோவிலே சிறப்புப் பெற்றிருக்கிறது.

## சுயம்பு

கோவிலூரில் கோவில் கொண்டுள்ள இறையுருவம் எக்காலத்தில் ஏற்பட்டது

என்பது தெரியவில்லை. இச்சிவலிங்கம், தானே தோன்றியது (சுயம்பு) என்ற கருத்துப் பல நூற்றாண்டாக நிலவி வருகிறது.

இச் சிவலிங்கத்தின் வாயிலாக, வீரசேகர பாண்டியன் என்ற பாண்டிய மன்னன் கொற்றவாள் (ராஜ கடகம்) என்ற அதிசய வாள் ஒன்றினைப் பெற்றதாக, வாழையடி வாழையாகச் செவி வழிச் செய்தி வழங்கி வருகிறது. இந்நிகழ்ச்சியாலேயே, இந்த இறைவனுக்குக் கொற்றவாள் ஈசுவரர் என்ற பெயர் நிலவுகிறது.

## கோவிலூர் ஆதீனம்

இக்கோவில் கடந்த 200 ஆண்டுகளாகக் கோவிலூர் ஆதீன கர்த்தர்களுடைய ஈடுபாட்டால், அவர்களைக் குரு தேவர்களாக ஏற்றுக் கொண்டுள்ள நகரத்தார்களுடைய திருப்பணிகளால் நாளும் வளர்ந்து, அலை கடலுக்கு அப்பாலும் புகழ் பெற்றுத் திகழ்கிறது.

இந்த அளவுக்கு இக்கோவிலுக்குச் சிறப்பு உண்டாக்கியதோடு நகரத்தார்களைக் கல் திருப்பணி ்ள் செய்வதில் ஈடுபடுத்திய பெருமையும் ஆண்டவர் ஸ்ரீ முத்துராமலிங்க ஞான தேசிகர் அவர்களுக்கு உரியது. விவரம் ஆண்டவர் அவர்களைப் பற்றிய கட்டுரையில் காண்க.

ஆண்டவருக்குப் பிறகு பட்டத்துக்கு வந்த துறவு சுவாமிகளும் தொடர்ந்து இக்கோவிலின் வளர்ச்சியில் கண்ணும் கருத்துமாக இருந்தார்கள்.

சிதம்பர ஐயா என்ற கருணாநிதி சுவாமிகள் காலத்தில் (1890) திருக்குளத்தை ஆளோடி வைத்து அழகான மைய மண்டபம் கட்டி, அந்நாளில் எழுபதாயிரம் ரூபாய் வரை செலவு செய்து மாற்றூர்க் கோவில நகரத்தாருக்கு உரிமை ஆக்கினர்.

நான்காவது பட்டம் ஸ்ரீ இராமசாமி ஞான தேசிகர் அவர்கள் காலத்தில் அஷ்ட லட்சுமி மண்டபம் கட்டப்பெற்றது

ஐந்தாவது ஆதீன கர்த்தராக இருந்த திருக்களர் ஆண்டவர் என்ற வீரப்பஞான தேசிக சுவாமிகள் அவர்களின் காலம் கோவிலூரின் பொற்காலமாகும். அடையாளம் தெரியாதபடி, கோவிலும் கோவிலூரும் மாறிப் பொலிவு பெற்றன. அணிவெட்டுக்கால் நிறுத்திய சொற்கேட்டான் மண்டபமும் திருவிழாக்கள் நடத்துவதற்கு ஏற்ற உற்சவ மண்டபமும் ஆனந்தத் தாண்டவம் ஆடும் நடராசப் பெருமானுக்குச் சபாமண்டபமும் தீர்த்த மண்டபமும் கொடி மரமும் அமைத்தார்கள். திருநெல்லை அம்மனுக்குத் கருங்கல்லால் இழைந்த கருவறையும் அர்த்த மண்டபங்களும் நவரத்தினங்கள் இழைந்த தொத்த நாறபக்கப் பிரகாரமும் மகாமண்டபமும் விமான கோபுரமும் மடைப் பள்ளியும் திருமதில்களும் வன்னி விநாயகர் கோயிலும் கட்டினார்கள்.

இராச கோபுரத்தைப் புதுப்பித்தார்கள். மட வளாக வீதியும் அந்தணர் வீதியும் நடராசப் பெருமான் சந்நிதியின் வெளியில் ஆனந்த நிர்த்தன வில்லும் ரதம் போன்ற கொட்டகைகளும் அமைத்தார்கள். தங்கத்திலும் வெள்ளியிலும் அங்கிகளும் நவரத்தினத் திருமுடிகள், பதக்கம் முதலியன இழைத்த ஆபரணங்கள், வெள்ளியில் செய்த அலங்கார தீப சோட சோப உபசாரப் பூசா பாத்திரங்கள், வெள்ளி இடபங்கள், வெள்ளிவிமானங்கள் காமதேனு முதலிய வாகனங்கள் சுருட்டி முதலிய விருதுகள் ஆகியவற்றையும் கண்டவர் வியக்கும்படி வீரசேகர ஞான தேசிக சுவாமிகள் வழங்கினார்கள்.

மறை ஓதல், ஆராதனை செய்தல், வாத்தியங்கள் முழங்கல். பாராயணம் செய்தல் ஆகியவற்றுக்கும் முறை வகுத்தார்கள். ஆடிப்பூரத் திருவிழாவையும் ஏற்பாடு செய்தார்கள்.

மிகச் சிறப்பான முறையில் குடநீராட்டு விழாவை 1908 கீலக சித்திரை 11-ல் நடத்தி வைத்தார்கள். சிருங்கேரியிலிருந்து 33-வது பட்டம் சங்கராச்சாரிய சுவாமிகளும் அவ்விழாவிற்கு வந்திருந்தார்கள்.

திருநெல்லை அம்மன் திருப்பணிகளுக்காக மலாயா நாட்டில் நகரத்தார் தொழில்களில் வேலை செய்துவந்தவர்கள் எல்லோரும் ஒரு மாதச் சம்பளத்தை நன்கொடையாக வழங்கினர். கோட்டையூர் அழகாபுரி ராம. ப. அரு. அருணாசலம்செட்டியார் புதுவயல் நச்சரக்கு விற்கும் அ.மு. வீர. வீரப்ப செட்டியார், ஆருவயல் உ.வீர. சேவுகன் செட்டியார், காரைக்குடி முரு.வீர

வீரப்ப செட்டியார் ஆகிய நால்வரும் வீர சேகர ஞான தேசிகரின் ஆணைப்படி இதற்காகப் பின்னங்கு சென்று பணம் வசூலித்தனர்.

### ஆட்சி

இக்கோயில் சிவகங்கை மன்னர் உயர் திரு கார்த்திகேய வெங்கடாசலபதி அவர்களின் ஆளுகைக்கு உட்பட்ட கோவில்களுள் ஒன்று. அவர்களுடைய இசைவு பெற்று 1976 முதல் காரைக்குடி திரு. மு மெ முத்துராமன் அவர்கள் கௌரவக் கண் காணிப்பாளராக இருந்து கோவில் அலுவல்களைச் சிறப்பாகக் கவனித்து வருகிறார்கள்.

திருநெல்லை நாயகியுடன் கூடிய கொற்றவாள் ஈசுவரர் கோவிலில் இரு பெரும் விழாக்கள் நிகழ்கின்றன.

### 1. ஆடிப்பூரம்

இது ஆடி மாதத்தில் 12 நாட்களுக்கு நடைபெறும். ஆறும் திருநாளில் வெள்ளி இடபவாகனம் நிகழும். ஒன்பதாம் நாளில் தேர்வடம் பிடிக்கப்படும். பத்தாம் நாள்-தபசு; அன்றுமாலைமாற்றும் காட்சி காணத் தக்கது. பதினொராம் நாள் காலையில் திருக் கல்யாணமும் இரவில் ஐம் பெருங்கடவுளர் வீதி உலாவும் நடைபெறும்.

### 2. நவராத்திரி

கோவிலூரில் நடைபெறும் திருவிழாக்களில் நவராத்திரி சிறப்புமிக்கது. விஜய தசமி எனப்படும் மகார் நோன்பு நாளில், திருநெல்லைநாயகி அம்மன் அதிகாலையிலேயே கோவிலூரிலிருந்து வெள்ளி ரிஷப வாகனத்தில் புறப்பட்டு காரைக்குடி மகார் நோன்பு அக்ரஹாரத்தில் அமைந்துள்ள மண்டபத்திற்கு எழுந்தருளும்.

மாலையில் குதிரை வாகனத்தில் எழுந்தருளி, பின்கண்ட வரிசைப்படி, முதலில் திருநெல்லை நாயகி அம்மனும் இரண்டாவதாகக் கொப்புடைய நாயகி அம்மனும், மூன்றுவதாகக் காரைக்குடிச் சிவன்கோவில் இறைவனும், நான்காவதாகக் காரைக்குடிப் பெருமாள்கோவில் இறைவனும் மகார்நோன்புப் பொட்டலுக்குள் வந்து சேர்ந்த பிறகு மேற்கண்ட வரிசை முறைப்படியே அம்புபோடும் நிகழ்ச்சி நடைபெறும் பின்னர் அவை அனைத்துக்கும் ஏக காலத்தில் தீப ஆராதனை காட்டப்பெறும்.

திருவிழா முடிந்த பின்னர், முதலில் பெருமாள் கோவில் சுவாமியும், பிறகு சிவன்கோவில் சுவாமியும் அவரவர் கோவிலுக்குச் சென்றபிறகு கொப்புடையம்மையும் சேர்க்கைக்குச் செல்லும். இவ்வாறு மூன்று கடவுளராலும் வழியனுப்பப் பெற்ற பிறகு கோவிலூருக்குத் திருநெல்லை நாயகி அம்மன் வந்துசேரும். காரைக்குடி மகார்நோன்பு விழாவில் கோவிலூர் திருநெல்லை அம்பிகை முதன்மை பெற்று விளங்குவது குறிப்பிடத் தக்கது.

### பூசை நேரங்கள்

| | |
|---|---|
| திருவனந்தல் | காலை 6 முதல் 6. 30 வரை |
| காலசந்தி | காலை 8 முதல் 9 வரை |
| உச்சிக்காலம் | காலை 11. 30 முதல் 12.மணி வரை |
| சாயரட்சை | மாலை 5. 30 முதல் 6. 30வரை |
| அர்த்தசாமம் | மாலை 7. 30 முதல் 8.30வரை |

### வாகனங்கள்

| | |
|---|---|
| வெள்ளி | ரிஷபம் (பெரிது) |
| வெள்ளி | பிரதோஷ ரிஷபம் (சிறிது) |
| வெள்ளி | கேடகம் |
| மரம் | கற்பக விருட்சம் |
| | காமதேனு |
| | சிம்மவாகனம் |
| | அன்ன வாகனம் |
| | கயிலாச வாகனம் |
| | மூஷிக வாகனம் |
| | மயில் வாகனம் |
| | யானை வாகனம் |
| | குதிரை வாகனம் |
| | பல்லக்கு |



உ

# கோயிலூர்ப் புராணம்

## கி. வா. ஜகந்நாதன்

சிவபெருமான் பாரத நாட்டில் எழுந்தருளியுள்ள தலங்கள் ஆயிரத்தெட்டு என்று பொதுவாக ஒரு கணக்குச் சொல்வதுண்டு. ஆனால் அவற்றைத் திட்டமாக இன்னவைதாம் என்று சுட்டிச் சொல்ல முடியாது. என்றாலும் காசி, கேதாரம் முதலிய வட நாட்டுத் தலங்களும், தில்லை, மதுரை முதலிய தென்னாட்டுத் தலங்களும் யாவராலும் போற்றப் பெறும் திருப்பதிகள்.

தென்னாட்டில்தான் சிவ வழிபாடும் சிவத் தலங்களும் மிகுதி. தேவாரம் பெற்ற தலங்கள் சிவத்தலங்களில் சிறப்புடையவை. திருநொடித்தான் மலை முதல் திருக்குற்றாலம் வரையில் பல தலங்கள் மூவரால் பாடப் பெற்றவை. அவை 274. அவற்றைப் பாடல்பெற்ற தலங்கள் என்று சொல்வது வழக்கு.

அவற்றில் சிலவற்றிற்குப் புராணங்களும் பிரபந்தங்களும் இருக்கின்றன. பாடல் பெற்ற தலங்களுக்கு அடுத்தபடியாகச் சிறப்பைப் பெற்று விளங்குபவை புராணம் பெற்ற தலங்கள். பல தலங்களுக்கு மூவர் பாடல்கள் இல்லாவிட்டாலும் புராணங்கள் இருக்கின்றன. காசி அத்தகையவற்றுள் ஒன்று. மேலைச் சிதம்பரம் என்று சிறப்பிக்கப் பெறும் பேரூருக்குத் தேவாரப் பதிகம் இல்லை; என்றாலும் அதற்கு ஓர் அழகிய புராணம் இருக்கிறது.

அந்த அந்தத் தலங்களில் வாழ்ந்த வடமொழி வாணர்கள் தல புராணங்களை இயற்றினர். பிறகு அவற்றைத் தமிழ்ப் புலவர்கள் தமிழ்ச் செய்யுள் வடிவத்தில் மொழி பெயர்த்தார்கள். வட மொழியில் உள்ள தல புராணங்களுக்கு இலக்கிய மதிப்பு இருப்பதில்லை. ஆனால் தமிழில் உள்ள தல புராணங்கள் பல, சிறந்த இலக்கியங்களாக நிலவுகின்றன. பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணம் இதற்குச் சிறந்த எடுத்துக் காட்டு. சுருக்கமான முறையில் பல தமிழ்ப் புராணங்கள் இருந்தாலும், திரிகூடராசப்பக் கவிராயர், சைவ எல்லப்ப நாவலர், சிவப்பிரகாச சுவாமிகள், சிவக்கொழுந்து தேசிகர், சிவஞான முனிவர், கச்சியப்ப முனிவர், உமாபதி சிவாசாரியார், புராணத் திருமலை நாதர், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை முதலிய பெரும் புலவர்கள் பாடிய புராணங்கள் இலக்கியச் சுவை மிகுந்தனவாய், நாட்டுச் சிறப்பு, நகரச் சிறப்பு, சைவ சமயச் சிறப்பு முதலியவற்றைக் கூறுவனவாய் விளங்குகின்றன. ஒரே தலத்துக்கு ஒன்றுக்கு மேற்பட்ட புராணங்கள் உள்ளன. மதுரை, சிதம்பரம், மாயூரம், திருப்பெருந்துறை போன்ற தலங்களுக்கு வெவ்வேறு கவிஞர்கள் இயற்றிய வேறுவேறு புராணங்கள் இருக்கின்றன.

புராணம் பாடிய கவிஞர்களுள் அதிகமான புராணங்களைப் பாடியவர் திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை. அவர் இருபத்திரண்டு புராணங்களைப் பாடியிருக்கிறார். தலங்களுக்குப் பழைய புராணங்கள் இருந்தாலும் பிள்ளையவர்களைக் கொண்டு புதிய புராணம் பாடச் செய்வதில் அக்காலத்துத் தமிழ் மக்கள் ஆர்வங் காட்டினர். நாட்டுச் சிறப்பு, நகரச் சிறப்பு, துதிகள், வருணனைகள், சைவ சமயக் கருத்துக்கள் ஆகியவற்றை அப்புலவர் அமைத்துப் பாடுவதில் வல்லவராக இருந்தமையால் அவரைக் கொண்டு புராணங்களை இயற்றுவித்தனர்.

மாயூரம், திருப்பெருந்துறை முதலிய தலங்களுக்குப் பழைய புராணங்கள் இருந்தாலும் புதிய புராணங்களைப் பிள்ளையவர்கள் இயற்றினார். அவரை, "புராணம் பாடும் புலவன்" என்று ஒருவர் பாராட்டியிருக்கிறார்.

பிள்ளையவர்கள் பாடிய புராணங்களுள் ஒன்று கோயிலூர்ப் புராணம். செட்டி நாட்டிலுள்ள பல தலங்களுக்கு அவர் புராணம் பாடியிருக்கிறார்; அப்படிப் பாடியதால் அவருக்குப் பொருள் வருவாய் கிடைத்தது.

கோயிலூரில் உள்ள வேதாந்த மடத்தை நிறுவியவரும் முதல் ஞானசிரியருமாகிய முத்திராமலிங்க தேசிகர் அத்தலத்துத் திருக்கோயிலைப் புதுப்பித்துத் திருப்பணி செய்து விரிவாக அமைத்தார்; அதுமுதல் அவ்வாலயம் செவ்வனே பரிபாலிக்கப்பட்டு வருகிறது. அவருக்குப்பின் ஆதீனத் தலைவராக எழுந்தருளியிருந்தவர் அருணாசல தேசிகர். அவருக்குப்பின் ஞானசிரியராக வந்தவர் சிதம்பர தேசிகர். அவர் காலத்தில்தான் கோயிலூர்ப் புராணம் இயற்றி அரங்கேற்றப் பெற்றது.

மகாமகோ பாத்தியாய டாக்டர் ஐயரவர்கள் தாம் எழுதிய "மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரத்"தில் இந்தத் தலத்தின் புராணம் தோன்றிய வரலாற்றை எழுதியிருக்கிறார்கள். அது வருமாறு:

'அடிக்கடி நேரும் பொருள் முட்டுப்பாட்டினால் இவர் வருந்துவதை இவரிடம் பாடம் கேட்டு வந்த தேவிகோட்டை நாராயண செட்டியாரென்பவர் அறிந்து, இவருக்கு எவ்வண்ணமேனும் பொருள் வருவாய் செய்விக்க வேண்டுமென எண்ணினார். பாண்டிய நாட்டில் நகர வட்டகையிலுள்ள சிவஸ்தலங்கள் சிலவற்றிற்கு இவரைக் கொண்டு புராணம் இயற்றுவிக்கலாமென்றும், அங்கங்கேயுள்ள பிரபுக்கள் மூலம் அவை காரணமாக இவருக்குத் தக்க பரிசில்கள் கொடுக்கச் செய்யலாமென்றும் நிச்சயித்து, அதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்து வருவாராயினர். நகர வைசியப் பிரபுக்கள் இக்கவிஞர் கோமானது பெரும் புகழை அறிந்திருந்தவர்களாதலின், நாராயண செட்டியாருடைய முயற்சிகள் பயனுற்றன. கோயிலூர் வேதாந்த மடத்துத் தலைவராக இருந்த ஸ்ரீ சிதம்பர ஐயாவின் விருப்பப்படி கோயிலூர்ப் புராணம் இவராற் பாடப் பெற்றது. இவரைக் கோயிலூருக்கு வருவித்துத் தக்கவர்கள் கூடிய சபையில் அந்நூலை அரங்கேற்றுவித்து ஸ்ரீ சிதம்பர ஐயா இவருக்கு உயர்ந்த சம்மானம் செய்ததன்றிப் பல வகையான உதவிகளும் செய்வித்தார்...... சிதம்பர ஐயாவின் விருப்பத்தின்படி வடமொழியில் உள்ளவாறே அந்நூலுள் வேதாந்த விஷயங்கள் அங்கங்கே பலவகையில் அமைக்கப் பெற்றன.'*

கோயிலூர், காரைக்குடிக்கு அருகில் உள்ளது. அங்குள்ள வேதாந்த மடாலயம் மிகச் சிறப்புற்றது; வேதாந்த நூல்களை முறைப்படி பாடம் சொல்லி வந்தமையால், அங்கே பயின்ற பல துறவிகள் தமிழ் நாடு முழுவதும் அக்காலத்தில் இருந்தார்கள்.

கோயிலூர்ப் புராணம் பாயிரம், திருநாட்டுப் படலம், திருநகரப் படலம், நைமிசப் படலம், தல விசேடப் படலம், வீர பாண்டியன் சமிவனம் அடைந்த படலம், மாயப்புலி நீங்கிய படலம், கொற்ற வாளீசப் படலம், உபநிடதப் பொருளுரைத்த படலம், மதுப்பிரியர் துதியுரைத்த படலம், சுவேதராசப் படலம், அன்னதான மகிமை உரைத்த படலம், சுதன்மை அருள் பெறு படலம், தீர்த்த மகிமைப் படலம், சாபவிமோசனப் படலம் ஆகிய பதினைந்து படலங்களையும் 849 செய்யுட்களையும் உடையது.

கோயிலூருக்கு இந்தப் புராண வாயிலாக சமிவனம், வன்னிவனம், சாலிவாடிபுரம், கழனி ஸ்ரீ வல்லபம் என்றபெயர்கள் உண்டென்று தெரியவருகிறது. வரலாற்றின் மூலமாக, கழனிவாயில், ஏழகப் பெருந்திரு, வீரபாண்டியபுரம், மருதேந்திரபுரம் என்ற பெயர்கள் இத்தலத்திற்கு அமைந்தன என்பதை அறிகிறோம்.

* * *

கோயிலூர்ப் புராணத்தில் வரும் வரலாறுகளின் சுருக்கம் வருமாறு :

பாண்டி நாட்டில் உள்ள திருக்கானப் பேராகிய காளையார் கோயிலில் வீர

*மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் சரித்திரம், பாகம் 1, ப. 242-4.

பாண்டியன் என்னும் அரசன் ஆண்டு வந்தான். அவன் அத்தலத்தில் எழுந்தருளிய காளீசரை வழிபட்டு ஒரு வாளைப் பெற்றான். அந்த வாளைக் கொண்டு போரில் பகைவரை வென்றான். அதனால் அது கொற்றவாள் என்ற சிறப்புடன் விளங்கியது.

ஒரு நாள் வீரபாண்டியன் வேட்டையாடும் பொருட்டு வடக்கே உள்ள காட்டுக்குப் போய்ப் பல விலங்குகளை வேட்டையாடினான், அப்போது அவன் முன் ஒரு மான் எதிர்ப்பட்டது. அது அவன் கைக்கு அகப்படாமல் தப்பியோட, அரசன் தன் கைவாளோடு அதைத் துரத்திக் கொண்டு சென்றான். அது சமிவனம் என்ற இடத்திற்குச் சென்று மறைந்து விட்டது.

பாண்டியன் அங்கிருந்த பொய்கையில் நீராடிக் கனிகளை உண்டு ஒரு மரத்தின் நிழலில் படுத்து உறங்கலானான், அங்கே ஓரிடத்தில் சிவலிங்க வடிவில் எழுந்தருளியிருந்த திரிபுவனேசன் அரசனுடைய வடிவாளைக் கவர்ந்தருளினான். ஒரு புலியையும் அது உண்ணுவதற்காகத் துரத்திவரும் மறையவன் ஒருவனையும் இறைவன் தோற்றுவித்தான். மறையவன் புலிக்குப் பயந்து பாண்டியனுக் கருகில் வந்து, "அபயம்! அபயம்!" என்று கூக்குரலிட்டான்.

பாண்டியன் துயிலுணர்ந்து தன் வாளைப் பார்த்தான். காணவில்லை. அதைத் தேடுவதை விட்டு மறையவனைக் காப்பாற்றப் புகுந்தான். புலியைப் பார்த்து, "இந்த மறையவன் உணவின்றி எலும்பும்தோலுமாக இருக்கிறான். இவனை ன்றி எலும்பும்தோலுமாக இருக்கிறான். இவனை உண்டால் உன் பசி தீராது. இவன் எலும்புகளைக் கடித்தால் உன் பல்தான் நொறுங்கும். நான் நன்றாக உணவு உண்டு கொழுத்திருக்கிறேன். இவனை விட்டுவிட்டு என்னை உண்டு பசியாறு" என்றான் பாண்டியன். "நீ பலரைக் காப்பாற்றுகிறவன். உன்னை நம்பிப் பலர் வாழ்கிறார்கள். இவனுக்கோ யாரும் இல்லை. ஆகையால் இவனையே உண்பேன்" என்று அந்த மாயப் புலி கூறிற்று. "என் வாள் இருந்தால் உன்னோடு பொருது வென்று இம் மறையவனை மீட்பேன். அது கிடைக்கவில்லை. இந்த மாய உடம்பினால் ஒரு பயனும் இல்லை, நீ மறுக்காமல் உண்" என்று மறுபடியும் அரசன் வற்புறுத்தினான். புலி அவன் சொன்னதைக் கேட்கவில்லை.

வேறு வழி ஒன்றும் தெரியாமல், பாண்டியன் திறந்திருந்த புலிவாயில் தன் தலையைக் கொடுத்தான். அந்தக் கணத்தில் புலி மறைய மறையவனும் மறைந்தான். பாண்டியன் தனியே நின்றான். புலியும் மறையவனும் மறைந்தது கண்டு வியப்படைந்து மயங்கி நின்றான்

அரசன் போன இடம் தெரியாமல், அவனுடன் வந்தவர்கள் அவனைத் தேடிக் கொண்டு சமிவனத்தையடைந்து அவன் தனியே நிற்பதைக் கண்டார்கள். அவனோடு உரையாடி மகிழ்ந்தார்கள்.

அப்போது அரசன், "இந்த வனத்தைச் சுற்றிப் பார்த்து ஏதேனும் அதிசயம் இருந்தால் அறிந்து வாருங்கள்" என்று அவர்களை விடுத்தான். அவர்கள் அவ்வாறே சென்றபோது ஒரு வன்னி மரத்தடியில் ஒரு சுயம்புலிங்கத்தையும் அதனருகில் வாளையும் கண்டனர். அங்கே கீழ்ப்பக்கத்தில் ஒரு பொய்கையும் இருந்தது. அவற்றைப் பார்த்துவிட்டு அரசனிடம் சென்று தாம் கண்டதைச் சொன்னார்கள், வீரர்கள்.

பாண்டியன் அவ்விடம் சென்று சிவலிங்கப் பெருமானைத் தரிசித்துப் போற்றினான். இறைவன் இடபாருடனாக அவனுக்குக் காட்சி கொடுத்தருளினான். "நாமே உனக்கு அகப்படாமல் வந்த மானையும் புலியையும் மறையவனையும் தோற்றுவித்தோம். உன் வாளைச் கவர்ந்தோம். அதை நீ எடுத்துக்கொள்" என்று இறைவன் அருளினான். பாண்டியன் அந்தக் கொற்ற வாளை எடுத்துக் கொண்டு இறைவனைப் பணிந்தான். "இந்தத் தலத்துக்கு வன்னிவனம் என்ற பெயரும், தேவரீருக்குக் கொற்றவாளீசர் என்ற திருநாமமும் இனி வழங்கவேண்டும், தேவரீரைப் பணிந்து வழிபடுபவர்கள் தாம் வேண்டும் வரங்களையும் பெறவேண்டும்" என்று அரசன் வேண்டிக் கொள்ள இறைவன் "அவ்வாறே ஆகுக!" என்று அருள்புரிந்து இலிங்கத்துள் மறைந்தான்.

வீரபாண்டியன் அந்தக் காட்டை அழித்து ஆலயம் உண்டாக்கி, அதில் எல்லா வகையான சந்நிதிகளையும் அமைத்து, பூசை, விழாக்கள் நடத்த ஏற்பாடு செய்தான். அங்கே ஒரு நகரத்தையமைத்துப் பல வகையினரையும் குடியேற்றி வாழச் செய்தான்.

ஒரு சமயம் அகத்திய முனிவர் அங்கே எழுந்தருளினார். அவர் பாண்டியனுக்கு இந்தத் தலப் பெருமையை மிக விரிவாக எடுத்துரைத்தார்.

மதுப்பிரியன் என்ற முனிவன் இங்குள்ள பொய்கையில் மூழ்கித் தவம் செய்தான். அவன் தவத்தைக் கெடுக்க எண்ணிய இந்திரன் பெரு மழை பொழியும்படி செய்தான். முனிவன் கலங்காமல் தவம் செய்துகொண்டே இருந்தான். இந்திரன் பிரமதேவனிடம் சென்று முனிவன் தவம் செய்வதைச் சொன்னான். பிரமன், "அவன் எந்தப் பதவியையும். எண்ணித் தவம் செய்யவில்லை. நிட்காமியமாகவே அதைச் செய்கிறான்" என்று கூறி விட்டு திருமாலினிடமும், உருத்திரனிடமும் சென்று அவர்களை அழைத்துக் கொண்டு சமிவனம் வந்தான். அம் மூவரும் மதுப் பிரிய முனிவனை அணுகி, "உனக்கு வேண்டிய வரங்களை நாங்கள் கொடுப்போம்" என்றார்கள். முனிவனோ, "பரமசிவனை அறிவது தான் என் கருத்து. வேறு எதையும் வேண்டிலேன்" என்றான். மூவரும் அங்கிருந்து அகல, முனிவன் மீண்டும் தவத்தில் ஆழ்த்தான்.

அந்தத் தவக் கனல் எங்கும் பரவித் தகித்தது. அதனைப் பொறாத இந்திரன் பிரம தேவனிடம் சொல்ல, நான்முகன் சமிவனத்தை அடைந்து சிவலிங்கப் பெருமானைப் பணிந்து, "முனிவன் கருத்தை நிறைவேற்றியருள வேண்டும்" என்று வேண்டினான். அப்போது இறைவன், "நீயே சென்று அவனுக்குப் பிரம ஞானத்தைப் போதி" என்று பணித்தான். அப்படியே பிரமன் முனிவனை அணுகிச் சிவபெருமானுடைய கட்டளையைத் தெரிவித்து அவனுக்கு உபநிடதப் பொருளை விரிவாக உபதேசித்துத் தன்னுடைய இருப்பிடம் சென்றான்.

முனிவன் சிவபெருமானைப் பணிந்து வழிபட, அப்பெருமான் அவன்முன் தோன்றினான். இறைவனைத் தரிசித்த மதுப்பிரிய முனிவன் அப்பெருமானைத் துதி செய்யத் தொடங்கினான்.

அருள்க சிற்கன சொரூபதே சோமய அமல
அருள்க யாவைக்கும் சாட்சியாய் அமர் அகளங்க
அருள்க யாரும்சொல் எவைக்கும் மேலாகிய அமர
அருள்க பற்பல மூர்த்தியாய் அமரும்மா தேவ!

போற்றி சந்திர சேகர, புனற்சடா டவியாய்,
போற்றி முக்கண் நாற் புயம்பொலி பூரண புராண
போற்றி மான்மழு ஏந்துபொற் றுமரைக் கரத்தாய்
போற்றி பத்தர்குற் றமும்குண மாய்க்கொண்டு பொறுப்போய்

முனிவன் துதித்ததைக் கேட்ட சிவபெருமான் திருவுள்ளம் மகிழ்ந்து, "உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்" என்றான். "எப்போதும் எனக்குத் தேவரீர் அருள்வேண்டும். சமிவனத்தில் பஞ்சாக்கர விமானத்தில் திரிபுவனேசன் என்னும் பெயரோடு தேவரீர் விளங்க வேண்டும். அம்மை திரிபுவனேசை என்னும் திரு நாமத்தோடு எழுந்தருளியிருக்கவேண்டும். தெற்கே ஓடும் நதிக்கு மதுநதி என்ற பெயரும் நதிக்குக் கிழக்கே உள்ள தீர்த்தத்துக்கு மதுபுட்கரிணி என்ற பெயரும் வழங்கவேண்டும். இத் தலத்திற்கு வந்து வழிபட்டவர்கள் விருப்பமெல்லாம் நிறைவேறவேண்டும்" என்று முனிவன் வேண்டினான். இறைவன் அவன் கேட்டவரங்களை அருளி இலிங்கத்துக்குள் மறைந்தான்.

ஃ ஃ ஃ

சுதேவன் என்னும் அரசனுடைய புத்திரன் சுவேதன், சோதிடர்கள், "நீ அற்ப ஆயுளை உடையவன்" என்று சொன்னதைக் கேட்டுத் தன் மகனுக்கு முடிசூட்டிவிட்டு வனத்துக்குச் சென்றான். தண்டகவனத்தில் தவம் செய்து அதன் பயனாகப் பிரமனுடைய சத்தியவுலகம் சென்றான். அங்கே சென்ற அவனுக்கு மிகுதியான பசியெடுத்தது. அதனால் வாடியவன் தன் வருத்தத்தை நான்முகனிடம் கூறினான். "நீ செய்த தவத்தால் இவ்வுலகத்துக்கு வந்தாய். ஆயினும் உன் உடம்பைப் பேணினாயேயன்றி அன்னதானம் செய்யவில்லை. அதனால் இந்தப் பசிப்பிணி வந்தது. நீ இறந்தபோது காட்டில் விட்ட உடம்பு அங்கே இருக்கிறது. அதைப் போய் உண்ணுக" என்ற பிரமன் பணித்தான். அப்படியே சுவேதன் அங்கே சென்று தன் பிணத்தையே உண்டான். அது குறையாமல் விளங்கியது. பசித்தபோதெல்லாம் தண்டகவனம் சென்று அதை உண்டு வந்தான்.

அங்கே வாழ்ந்த தண்டகன் என்னும் அரக்கன் அங்கிருந்த பிருகுமுனிவரின் மகளை விரும்பினான். அதையறிந்த முனிவன் சாபமிட

அந்த வனம் எரிந்து பாலையாகிவிட்டது. அங்கே அகத்திய முனிவர் சென்று மீண்டும் காடு ஆக்கினார்.

அப்போது சுவேதன் பிணத்தை உண்ண வந்தான். "ஏன் இப்படிச் செய்கிறாய்?" என்று அகத்திய முனிவர் கேட்க, அவன் நிகழ்ந்த வற்றைச் சொல்லி, அம் முனிவரைப் பணிந்து போற்றினான். பிறகு தன் கழுத்திலிருந்த முத்து மாலையை முனிவருக்குக் கொடுத்தான். அகத்தியர் அதைக் கையில் வாங்கினவுடனே சுவேதனுடைய பாவமும் பசியும் போயின; பிரேதமும் அழிந்தது.

அந்தச் சுவேதனுடைய மகனுக்கும் சுவேத னென்றே பெயர். அவன் அகத்திய முனிவர் ஆசிரமத்தை அடைந்து அவரைப் பணிந்து எழுந்தான். முனிவர், "உன் தந்தை அன்ன னம் செய்யாமையால் துன்புற்றான்" என்று கூற, அரசன், "எந்தத் தலத்தில் அன்னதானம் செய்வது சிறப்பு?" என்று கேட்க, "சமிவனமே சிறந்தது" என்று அகத்தியர் கூறி அத்தலத் தின் சிறப்பையும் அன்னதானத்தின் பெருமை யையும் எடுத்துரைத்தார்.

அந்த அரசன் வன்னிவனம் (சமி-வன்னி) சென்று வன்னி விநாயகரைத் தரிசித்துத் திரிபுவனேசனையும் வணங்கினான். அங்கே விரி வாக நெல்வயல்களை அமைத்து, ஏரி, கால்வாய் ஆகியவற்றை உண்டாக்கினான். நெல் நன்றாக வளர்ந்தது. அதனால் அத்தலம் சாலிவாடி என்ற பெயரைப் பெற்றது. அரசன் அங்கே இருந்து அன்னதானம் செய்து,இறுதியில் சிவபதம் பெற் றான். அது முதல் அத்தலத்துக்கு வன்னிவனம், சமிவனம் என்ற பெயர்களோடு, சாலிவாடி, கழனி என்ற பெயர்களும் உண்டாயின.

சிவகுப்தன் என்னும் வணிகன் சாலிவாடி யில் வாழ்ந்தான். திருநீறும் உருத்திராக்கமும் பூண்டு திருவைந்தெழுத்தை ஓதி இறைவ னிடம் இடையீடில்லாத பக்திசெய்து வந்தான். அவன் மனைவி சுதன்மை திரிபுவனேசையிடம் அன்பு பூண்டு வழிபட்டு வந்தாள். அவர் களுக்கு ஒரு மகள் பிறக்க, அவளுக்கு அரதன வல்லி என்று பெயரிட்டு வளர்த்து வந்தார்கள்.

சிவகுப்தன் அம்பிகையின் திருக்கோயி லுக்குமுன் ஒரு பெரிய கழனியை உண்டாக்கி வேலியிடாமல் வளர்த்து வந்தான். அங்கே காவல் காக்கும் பொருட்டுத் தன் மகளாகிய அரதனவல்லியை ஏவினான். அவள் தோழி களுடன் புறப்பட்டுச் சென்றாள். ஆனால் கழனி யைக் காவாமல் சோலைகளிலும் பொய்கை யிலும் சென்று விளையாடிப் பொழுதைக் கழித் தாள்.

கழனிக்குக் காவலின்மையை உணர்ந்த திரிபுவனேசை, சுதன்மையின் பக்தியைக் கண்டு திருவுள்ளம் இரங்கி, தானே அரதன வல்லியைப் போலக் கோலங்கொண்டு அந்தக் கழனிக்குச் சென்று காவல் புரியலானாள் கரும்பின் அடியில் வரப்பில் அமர்ந்து காவல் புரிந்தாள்.

தன் மகள் பசியோடிருப்பாள் என்று எண்ணிய சுதன்மை உணவு கொண்டு வந்து அம்மைக்குப் பரிமாறினாள். அம்மையும் அவ் வுணவைச் சுவைத்து உண்டாள். சுதன்மை இல்லம் சென்றாள். அம்பிகை பிறகு கோயில் சென்று நிகழ்ந்தவற்றை இறைவனிடம் கூறி மகிழ்ந்து தன் சந்நிதிக்குச் சென்றாள்.

விளையாடிக் கொண்டிருந்த அரதனவல்லி வீட்டுக்கு வந்து, "பசிக்கிறது; சோறு போடு" என்று அன்னையிடம் கூறினாள். அன்னை, "இப்போதுதானே சோறு உண்பித்து வந்தேன்?" என்று கூற, மகள் தான் கழனிக்குச் செல்லாமல் விளையாடிவிட்டு வந்ததைச் சொன்னாள். சுதன்மை இறைவியே இந்தத் திருவிளையாட்டைச்செய்தாள் என்று உணர்ந்து வியந்து உருகினாள். யாவரும் இந்த அற்பு தத்தை அறிந்து அம்மையைத் துதித்தார்கள். சுதன்மை அம்பிகையைப் பரவலானாள்.

"மெய்யறி வின்ப ரூபம்
மேயபூ ரணியே போற்றி,
பொய்அகல் சிவத்தின் நீங்காப்
புண்ணியப் பொருளே போற்றி,
ஐயபல் சத்தி ஆகி
அடியாரைக் காப்பாய் போற்றி,
மையகல் அடியார் எண்ணம்
முடித்திட வல்லாய் போற்றி!"

"காமரு கூந்தல் போற்றி,
கவின்பொழி வதனம் போற்றி,

மாமரு விழிகள் போற்றி,
வண்தொடிக் கரங்கள் போற்றி,
தேமரு கொங்கை போற்றி,
சிறுகிய மருங்குல் போற்றி,
நாமரு புகழ்சால் நெல்லை
நாயகி திருத்தாள் போற்றி!''

நெல்லைக் காத்ததனால் அம்பிகைக்கு நெல்லை நாயகி என்ற திருநாமம் உண்டாயிற்று. சிவகுப்தனும் சுதன்மையும் இறுதியில் சிவ பதம் அடைந்தார்கள்.

ஃ ஃ ஃ

மதுராபுரியை ஆண்ட சூரதன்மா என்பவனுடைய மனைவி சுகுணை என்பவள். சமண சமயத்தினர் அங்கே வந்து அரசனைச் சமணன் ஆக்கினர் அவன் சைவத்தைப் புறக்கணித்துச் சமண சமயத்தைப் பரப்பலானான்; சமணர்களுக்கே ஆதரவு தந்தான். அதுகண்டு வருந்திய சுகுணை அவனுக்குப் பலவகையில் அறிவுரை புகன்றும் அவன் கேட்கவில்லை. அரசன் இறந்தான்; அவனுடன் சுகுணையும் உயிர் நீத்தாள்.

சுகுணை அகளங்கபுரத்து மன்னன் மகளாகப் பிறந்தாள். சூரதன்மா சாகலபுரத்து மன்னன் மகனாகப் பிறந்தான். அவனுக்கு முற்பிறவியிற் செய்த பாவத்தால் குட்ட நோய் வந்தது. மன்னன் மகளாகப் பிறந்த சுகுணைக்கு மணப் பருவம் வந்ததும், சுயம்வரம் நடைபெற்றது, பல தேசத்து அரச குமாரர்களும் வந்திருந்தனர். சாகலபுரத்து மன்னன் மகனாகப் பிறந்து குட்ட நோயால் வருந்திய சூரதன்மாவும் வந்தான். அவன் தன் முற்பிறவியில் கணவனாக இருந்தவன் என்பதை உணர்ந்த மன்னன் மகள் யாவரும் நகைக்கவும் மன்னன் வருந்தவும் அவனுக்கே மாலையிட்டாள். அவனும் அவளும் சாகலபுரத்தை அடைந்தார்கள். மருந்துகளால் அவனுடைய நோய் தீரவில்லை. அந்தப் பெண்மணி அவனுடன் தலயாத்திரையாகப் புறப்பட்டுக் காசி முதலிய ஊர்களுக்குச் சென்றும் நோய் தீரவில்லை. இறுதியில் சமிவனம் அடைந்து மதுபுஷ்கரிணியில் நீராடவே, அவனுடைய நோய் தீர்ந்தது.

காளிபுரத்தில் இருந்த வீரசேனன் என்னும் பாண்டியன் வேட்டையாடக் கானகம் சென்றான். அங்கே கண்வ முனிவர் ஆசிரமத்துக்கருகில் ஒரு கவரி மானைக் கண்டு அதன் மேல் அம்புவிட அது இறந்து போயிற்று. கண்வர் வளர்த்த மான் ஆதலால், முனிவர் அது இறந்ததை அறிந்து வருந்தி மன்னனைப் பார்த்துக் கோபத்துடன், ''நீ வேடனாகித் திரிக'' என்று சாபமிட்டார். உடனே அவன் வேடனாகி மிருகங்களை வேட்டையாடிக் கொண்டு காட்டில் திரிந்தான்.

மந்திரி முதலியோர் அரசன் வாராததை அறிந்து அவன் மகனாகிய இராசசேகரனை மன்னனாக்கினர்.

வேடனான அரசன் பல இடங்களில் திரிந்து சமிவனம் வந்தான். மது தீர்த்தத்துக்கு அருகில் ஒரு மர நிழலில் தங்கினான். அந்தத் தீர்த்தத்தில் இருந்த மீன்கள், ''இவன் நம்மைக் கொடியாகக் கொண்ட பாண்டியன்; இவன் பாவத்தைப் போக்குவோம்'' என்று தம்மில் பேசிக்கொண்டு, துள்ளிக் குதித்தன; அப்போது அந்த நீர் மேலே பட்டதும் அவனுக்குக் கொலை புரியும் எண்ணம் நீங்கியது; புண்ணிய நினைவு உண்டாயிற்று. அந்தத் தீர்த்தத்தில் மூழ்கி வேட்டுருவம் நீங்கி இறைவனையும் இறைவியையும் இறைஞ்சினான்.

காளிமாபுரத்திலுள்ளவர்கள் இதனை அறிந்து அவனை வந்து கண்டு தம் நகருக்கு அழைத்து ஏகினர். மகன் அரசாள, அவன் யோகம் துய்த்து வாழ்ந்தான். பிறகு சிவ பதம் அடைந்தான். அன்று முதல் மதுபுட்கரிணிக்குச் சாபவிமோசனம் என்ற பெயரும் அமைந்தது.

ஃ ஃ ஃ

இந்த வரலாறுகளையெல்லாம் அகத்திய முனிவர் வாயிலாகக் கேட்ட வீரபாண்டியன் திரிபுவனேசனை வழிபட்டான். அகத்தியர் அவனுக்குப் பிரம ஞானம் உபதேசித்தார். அவன் இறுதியில் விதேக முக்தியை அடைந்தான்.

சொற்சுவை, பொருட் சுவை மலிய இந்தப் புராணத்தை இயற்றியிருக்கிறார், பிள்ளை அவர்கள். வேதாந்த மடத்தைச் சார்ந்த கோயிலாதலின் அத்துவித வேதாந்தக் கருத்துக்களையும் பரிபாஷைகளையும் அங்கங்கே அமைத்திருக்கிறார். வருணனைகளும் ஐந்திணை இயல்புகளும் இருதுக்களின்

இயல்பும், துதிகளும் இப்புராணத்தில் வரு கின்றன.

பாயிரத்தில் கோயிலூர் வேதாந்த மடத் தின் முதல் ஞானசிரியரைப் போற்றுகிறார்.

மேயபெருங் கழனிநகர் கோயிலூர் எனும்பேர்
மேவஇறை ஆலயத்தை விரித்தஅருட்
பெரியோன்,
பாயபுனல் திரண்டாலி ஆயதெனச் சுத்த
பரப்பிரமம் இவ்வுருக்கொண் டுற்ற
தெனும் புரணன்,
ஆயபுகழ் வேதாந்த சிரவணம்செய் துலகில்
அளவிலர்சை தன்னியமா கப்புரிந்த
அறவோன்
தூயமுத்தி ராமலிங்க தேசிகன்என் றுரைக்கும்
சோதிலிங்க சொரூப னென்னும் சோதியை
ஏத் தெடுப்பாம்

இந்த நூலைச் செய்வித்த சிதம்பரதேசிக ரைப்பற்றி ஒரு செய்யுளில் சொல்கிறார்:

மேலாய துறவினுக்கோர் துணையாகி உள்ளான்,
விரிந்தபல புவனமும்கான் றிடுசோற்றிற்
கண்டோன்,
நாலாய மறைமுடியின் பொருள்விளங்க எடுத்து
நல்மாண வர்க்கருளித் தன்மயமாக்
கிடுவோன்;
பாலாய சிவதருமம் பற்றறப்பா லிப்போன்,
பரப்பிரம சுவாநு பூதியிற்சிறந்த மேலோன்,
நூலாய யாவும்உணர்ந் தவர்மனுவின் எடுத்து
நுவலுமொரு சிதம்பரதே சிகனெனும்மா
பெரியோன்

வேதாந்தக் கருத்துக்களை இவர் ஆளுவ தற்குச் சில உதாரணங்கள்:

'பளிங்குப் பாறையில் யானையின் வடிவத் தைக் கண்டு வேடர்கள் யானையென்றெண்ணி வேலை எறிந்து, பிறகு உண்மையை உணர்ந்து நாணுவார்கள். அவித்தையையுடையவர்கள் கற்பிதப் பிரபஞ்சத்தை உண்மையென்று' கருதி அழலிலிட்ட மெழுகு போல் உருகி, பின் உண்மை தெரிந்து அவா அற்று நாணுதல் போல இருக்கிறது இந்தக் காட்சி?' (நாட்டுப் படலம், 23)

'தத்துவமசி என்பதிலுள்ள மூன்று பதங் களின் உண்மையை முறையாக விசாரம் செய்து பிறகு நிஷ்டை கூடி, எல்லாவற்றையும் தாமாகக் கண்டு இருப்பவர்கள் பலர். அவர் களுக்குப் பணி செய்வதை மேற்கொண்டு நிற்கும் குழாங்கள் ஒருசாரி இருக்கும். (திருநகரம். 70)

சூதமுனிவனைச் சொல்லும்போது,

"சத்திய ஞான னந்தநிட் களமாய்த்
தற்பர சொரூபமாய் விபுவாய்
நித்திய நிமல நிரஞ்சன முதலாய்
நிறைவுறு பேரொளிப் பிழம்பாய்
மெத்திய உயிரின் அபேதமாய் என்றும்
விளங்கிடும் ஒருபர சிவமே
பொத்திய தான்என் றுணர்தரு துணிபோன்,
புகழ்மிகு சூதமா முனிவன்"

என்று பாராட்டுகிறார். சிவமே தான் என்றுணர்ந்தவன் என்பதில் அத்வைதக் கருத்து அமைந்திருக்கிறது.

உபநிடதப் பொருள் உரைத்த படலத் தால் முழுக்க முழுக்க அத்வைத வேதாந்தக் கருத்துக்களையே சொல்கிறார்.

பிரமத்தை உணரும் உபாயம் எதுவோ அதுவே பிரமவித்தை, அதைப்பற்றிய விரி வான கருத்துக்கள் இப்படலத்தில் வருகின் றன. 'பரிபூரணமாய், சச்சிதானந்த சொரூப மாய், பரம அத்துவிதப் பிரத்தியகபின்னமாய் ஒளிரும் பிரமத்தை உணர்தர முக்கியமாகச் சொல்லப்பட்ட உபாயமே பிரமவித்தை' (52) என்பது ஒருபாட்டின் பொருள்.

'கும்பம் முதலிய காரியங்கள் காரணமாகிய மண்ணே ஆவது போலவும், அரவு மாலை தடி முதலிய தோற்றங்கள் கடைசியில் கயிறாக முடிவது போலவும் ஜீவேசுவரஜகத்தாய்த் தோன்றும் நானாவித நாம ரூபஜகத்தென்பது வும் அகண்ட பரிபூரண சச்சிதானந்த சுத்த பரமாத்துவித பரமசிவ சொரூபமேயாம்' (73) என்று ஒரு பாட்டுச் சொல்கிறது.

இவ்வாறு கோயிலூர்ப் புராணம், மூர்த்தி தலம் தீர்த்தம் என்னும் மூன்றின் பெருமை யையும், இறைவனுக்கும் இறைவிக்கும் பல திருநாமங்கள் உண்டான வரலாற்றையும். இங்கே வழிபட்டுப் பேறு பெற்றவர் கதைகளை யும் சொல்கிறது. இடையே சிவபெருமான் துதியும், அம்பிகைதுதியும் வருகின்றன. நாடு, நகரம் ஆகியவற்றின் சிறப்பு, ஐந்திணைகளின் வருணனை முதலிய இலக்கிய அமைதியுள்ள பகுதிகளையும் இதில் காணலாம்.

# சிவ தருமம் பாலிப்போர்

சொக்கு சுப்பிரமணியன்

கோவிலூர்; கோமேவு வன்னிவனக் கொற்றவாளீசர் வாழும் தலம்; நேரறிவு மயமான நெல்லைநாயகி வளரும் திருக்கோயில்; ஞாலம் போற்றிடும் ஞானியர்கள் அருள் பாலித்த ஞானபீடம்; வெய்யவினை தீர்த்து அடியவர்கள் ஐயம் திரிபை அகற்றிய மெய்த்தவ நல்லாசிரியர்கள் நடம் பயின்ற கலைக் கோயில்; மேலாய துறவினுக்கோர் துணையாகி நின்ற மேன்மக்கள் வாழ்ந்த புண்ணிய பூமி. நூல் யாவும் உணர்ந்த நுண்ணறிவுமிக்க மேய்யன்பர் மால் அயனும் காணா மறை முதல்வன் புகழ்பாடும் இசை வளரும் நிலையம்; அறவொழுக்கம் வளர்த்திடவே துறவொழுக்கம் கடைப்பிடித்த தூயவர்கள் மறவொழுக்கம் கடிந்து நல்லறவொழுக்கம் வளர்த்த தமிழ்ப் பேரூர்; பாலாய சிவதருமம் பற்றறப் பாலிப்போர் இத்திருத்தலத்தில் அருள் பாலித்தார்கள்.

கோவிலூர்த் தலம் 'சமிவன க்ஷேத்திரம்' என்று அழைக்கப்பட்டது. தமிழில் 'வன்னிவனம்' என்பர். இந்த 'வன்னிவனத்' தலத்தின் வரலாற்றை வடமொழியில் ஸ்காந்த புராணத்திலிருந்து மொழிபெயர்த்து சமிவன க்ஷேத்திர மான்மிய வசனம் என்னும் நூல் ஒன்று வெளியாகி உள்ளது. கி. பி. 1928–இல் சுதான விபவ ஆண்டு கார்த்திகைத் திங்கள் வெளியான இந்த நூலைத் திருவிடைமருதூரைச் சேர்ந்த பிச்சு சாஸ்திரி சுவாமிகள் என்பவர் மொழி பெயர்த்திருக்கிறார். காரைக்குடி மேல மடத்தைச் சேர்ந்த சேவு. பழ. பழநியப்பய்யா குடும்பத்தார் சென்னையில் சூளையில் இருந்த ஸ்ரீ பாரதி அச்சியந்திர சாலையில் அச்சிட்டு வெளியிட்டுள்ளார்கள்.

தலங்களுக்குள் தலையான இந்தக் கோவிலூர்த் தலத்திற்குப் பல பெயர்கள் உண்டு என்பதும், கழனிவாசல் சாலிவாடி ஸ்ரீ வல்லபம் வன்னிவனம் என்பவை அவை என்பதும் இந்நூல் தெரிவிக்கும் முக்கிய செய்தியாகும். ஜீவர்களின் பஞ்சமா பாதகங்களைப் போக்கி நன்னெறி உய்விக்கும் ஆண்டவர் அருட்கோயில் கொண்டிருப்பதால் இத்தலம் மானுடப் பிறப்பெடுத்தோருக்கு எல்லாம் மறைமுதல்வனின் நற்பேற்றைப் பெற்றுத் தருவதாக அமைந்திருக்கிறது. இங்குள்ள மது புஷ்கரணி தீர்த்தம் வேண்டுவோர்க்கு வேண்டியதை அளிக்கும் வல்லமை பெற்றது என்பதையும் கோயிலூர்ப் புராணம் வெளிப்படுத்துகிறது.

சத்திய ஞானானந்தராய், சர்வ பரிபூரணராய், சர்வ சொரூபராய், சர்வ சக்தியுள்ளவராய், ஜனப் பிரியராய், சர்வ பலன் கொடுப்பவராய், சந்திரசேகரராய், மான் மழுதாரியாய் இத்தலத்தில் கோயில் கொண்டிருக்கும் திரிபுவனேசுவரர் தயா சமுத்திரம் என்று இந்த நூல் வருணிக்கிறது.

இந்தத் தலத்தில் எழுந்தருளியிருக்கும் நெல்லையம்மை சத்திய ஞானானந்த ரூபி என்றும், சர்வாத்ம சொரூபி என்றும், சமரச வடிவு என்றும், சர்வபூரணி என்றும், நிரஞ்சனை என்றும், நித்திய சுத்த புத்தமுத்த அகண்ட அத்துவித சொரூபி என்றும் இத்தக் கோயிலூர்ப் புராணம் குறிப்பிடுகிறது. நேரறிவு மயமான நெல்லைநாயகி அருளைச் சிறப்பிக்கின்றது.

கோவிலூர்த் தலத்தின் சிறப்பை விளக்கும் இந்நூல் ஒரு நல்ல புத்தகம் என்பதில் ஐயமில்லை. இதுபோன்ற நூல்கள் மக்கள் மன்றத்தில் பரவ அன்னையின் அருளைப் பாலிக்கும் அனைவரும் முயல வேண்டும். ★

# சிற்பச் சிறப்புமிக்க திருக்கோயில்

## கம்பன் அடிப்பொடி

கோவிலூர் என்பது வனப்பு மிக்க ஒரு சிற்றூர். கட்டிடக் கலையில் துறை போகிய வர்கள் எல்லாம் கண்டு மகிழ்ந்து வியந்து பாராட்டும் மேம்பாடு, நோக்கு மிடமெல்லாம் நீக்கமற நிறைந்திருக்கும். அழகும், சிற்பச் செறிவும் நிறைந்த திருக்கோயில்; கண்கவர் மைய மண்டபத்துடன் கூடிய, பேரழகு பிலிற்றும் திருக்குளம்; நேர்மையும், செம்மை யும் கூடிய மாட வீதிகள்; கட்டிடப் பொலிவின் ஒருமைப்பாட்டை உணர்த்தும் வகையில் நாற் புறமும் அமைக்கப் பெற்ற கட்டிடங்கள், அல்லது சுவர்கள். பற்றகன்ற பண்பினர் தங்கி, ஓதி அவனருள் நாடி, அமைதியுள் ஆழ்ந்து நற்றவம் புரி நன்மடம். இவை எல்லாம் சேர்ந்தது தான் கோவிலூர்.

இப்பொழுது உள்ள கோவிலூர் என்பது தமிழ் நாட்டில் 10—வது நூற்றுண்டில் மிகப் பிரபலமாக இருந்த கழனிவாயில் என்ற ஏழகப் பெருந் தெருவின் ஒரு பகுதியாகும். இந்த ஏழகப் பெருந்தெருவில் பல ஆலயங்கள் அன்று பிரபலமாக விளங்கின. அவற்றுள் கொற்ற வாள் ஈசர் கோயில் என்னும் ஆலயமும் ஒன்று. மற்றொன்று ஏழகப் பெருமாள் விண்ணகரம்.

இவை அல்லாமல் கொற்றவை கோயில்கள் சிலவும் இங்கு இருந்தன. இன்றைய தினம் பிரபலமாக உள்ள காரைக்குடி நகரம் இதனுடைய ஒரு பகுதியே ஆகும்.

இன்று வரலாற்றுப் பெருமை மிக்கதும், மிக்க வீரம் செறிந்ததுமான ஏழகப் பெரும் படை இங்குதான் இருந்தது. அந்தப் பெரும் படைதான் மூன்றும் குலோத்துங்க சோழ னுக்கும் குலேசகர பாண்டியனுக்கும் நடை பெற்ற பெரும் போரில் சதுர்வேதமங்கலம் என்று இன்று வழங்கும் மட்டியூருக்குப் பக்கத் தில் பொருதி சோழப் படைக்குப் பெருஞ் சேதத்தை உண்டாக்கியதாகும். இந்தப் படை அக்காலத்து முறைப்படி தனவணிகர்களைச் சார்ந்து அவர்களால் பேணிப் பரிபாலிக்கப் பட்ட படையாகும்.*

இவ்வாறு வரலாற்றுப் பெருமைமிக்க ஊரில் ஏற்கெனவே இருந்த சிவபெரு மானுக்குப் பத்தாம் நூற்றுண்டில் இருந்த வீர பாண்டியன் என்னும் மாவீரம் மிக்க மன்னன் தன்னுடைய கொற்றவாள் தொலைந்து போனது பிறகு கிடைக்க அருள் புரிந்ததற்காக ஓர் ஆலயம் எடுப்பித்து அந்தப் பெருமா னுக்குக் கொற்றவாள் ஈசர் என்று பெயர் சூட்டி மகிழ்ந்தான்.

அந்தச் சிறு ஆலயம் பலவகையில் பழுது பட்டிருந்ததை எண்ணி மனம் வருந்திய கோவிலூர் ஆண்டவர் என்று புகழ் பெற்ற ஸ்ரீ—ல—ஸ்ரீ முத்துராமலிங்க ஞான தேசிக சுவாமிகள் மிக்க சிரத்தை எடுத்துக் கொண்டு அற்புதமான இந்த ஆலயத்தை அமைப்பதற்கு அடிக்கோலி ஏராளமான பொருட் செலவில் ஒரு பகுதியை நிறைவேற்றி முற்றிலும் நிறை வேறுமுன் அவர்கள் விதேக முக்தி அடைந் தார்கள்.

அவர்களுக்குப் பிறகு பீடாதிபதிகளாக வந்த ஸ்ரீ—ல—ஸ்ரீ துறவு சுவாமிகளும்

---

* இடைஇரு வகையோர் அல்லது
படை வகை பெறுர் என்மனுர் புலவர்.
—தொல்காப்பியம்

க்ஷத்திரியர், நாட்டைக் காக்கும் பொறுப்பு ஏற்றுப் படை வைத்துக் கொள்ளுவர்; வைசியர், தங்களுடைய வாணிகத்தைக் காக்க, படை வைத்துக் கொள்ளுவர்; நாட்டுக்கு அபாயம் விளைந்தால் அப்போது இரு படைகளும் நாட்டைக் காக்க ஒன்றுபட்டுப் போரிட வேண்டும்.

ஸ்ரீ—ல—ஸ்ரீ கருணாநிதி சுவாமிகளும் தொடர்ந்து திருப்பணியை நடத்தி வந்தார்கள்.

திருக்களர் ஆண்டவர் என்று பாராட்டப் பெறும் ஸ்ரீ—ல—ஸ்ரீ வீரப்ப ஞான தேசிக சுவாமிகள் மேலும் திருப்பணியை விரித்துத் திருக்குளம், மைய மண்டபம், திருவீதிகள், ரதமேருக்கள், ரத கூடங்கள் ஆகியவற்றையும் அமைத்து பிற்காலத் திருப்பணிக்கு ஓர் எடுத்துக் காட்டாக இக்கோயிலை நிர்மாணித் தார்கள். அவர்கள் காலத்தில் அதாவது 1908—ல் மிகக் கோலாகலமாகத் திருக்குட நீராட்டு விழா நடைபெற்றது.

வேதம், உபநிடதம் முதலான வைதிக சமய நூல்களை எல்லாம் சிக்கறத் தெளிந்து, அத்துவித உண்மைகளை அற்புதமாக உணர்த்தும் வேதாந்த சாத்திரங்களில் எல்லாம் மேதா விலாசம் பெற்று, தேவாராதி தோத்திரப் பனுவல்களில் தோய்ந்து, அன்பும் அறிவும் செறிந்து குளிர்ச்சி மிக்க ஒளியான தண்கதிர் பரப்பிய ஞான பானுவாகத் திகழ்ந்த வர்கள் திருக்களர் ஆண்டவர் அவர்கள்.

தத்துவ, சாத்திர, தோத்திரக் கடலில் மட்டுமின்றி பயிர்க்கலை, தொழிற்கலை, கட்டிடக் கலை, சிற்பக் கலை முதலான பிற பல கலைகளில் எல்லாம் தோய்ந்து, முக்குளித்து, முத்தெடுக்கும் பேராற்றல் பெற்றுப் பல்கலைச் செம்மலாக ஒளிர்ந்த பெருமை திருக்களர் ஆண்டவர் அவர்களுக்கே உரியது. அந்த அறிவின் விளக்கமே கோவிலூரின் அமைப்பு.

திருக்களர் ஆண்டவருக்குப் பிறகு, தற் பொழுதுபீடாதிபதியாகவிளங்கும் ஸ்ரீ—ல—ஸ்ரீ இராமநாத ஞானதேசிக சுவாமிகளின் பெரு முயற்சியால் இக்கோயிலின் ஜீர்ணோத் தாரணத் திருப்பணி தொடங்கப் பெற்றது. தனவணிகர்கள் தாராளமாக அளித்த லட்சக் கணக்கான அறக்கொடையின் மூலமாக, கோயில், திருக்குளம் முதலிய அனைத்தும் முற் றிலும் பழுது பார்க்கப் பெற்று வண்ணம் பூசப் பெற்றுள்ளது. ஆகம சாஸ்திர ரீதியாக, சிறந்த சிவாசாரியார்கள் பலர் கூடி நான்கு நாள் ஆறுவேளை ஆகம பூஜை செய்து 21—4—1978 வெள்ளிக்கிழமை காலை சுமார் 10 மணிக்கு திருக்குட நீராட்டு விழா சம்பிரம மாக நடைபெற்றது.

பிற்காலக் கோயில்களில் இந்தக் கோயில் அமைப்பைப் போன்ற கோயில் தமிழகத் திலேயே கிடையாது. கோயிலுக்கு முன்னே யுள்ள திருக்குளத்தின் பொலிவும், அதிலுள்ள மைய மண்டபமும் இதற்கு நிகர் இதுவே என்று சொல்லத் தக்கவை.

அம்மன் திருவுண்ணாழியும் திருக்கல்யாண மண்டமும் பூரண சிற்பங்கள் அடங்கியனவாய் முழுதும் பாலிஷ் செய்யப்பட்டிருக்கின்றன. வரலாற்றுப் பெருமைமிக்க கொற்றவாளீ ஈசரும், கயிலாசநாதரும் திருநெல்லை அம்மனும் நித்திய கல்யாணி அம்மனும் உள்ளம் கவரும் மூர்த்திகளாகும்.

பிராகாரங்களுடன் திருமாளிகைப் பத்தி களும் கோயில் மண்டபங்களும் முற்றிலும் மயன்மதநூல் அடிப்படையில் அமைக்கப் பெற்றவை.

ராஜகோபுரங்கள் நாயக்கர் பாணியைச் சார்ந்தவை. தூண்களில் உள்ள போதிகை முதலியவை நகரத்தார் பாணியைச் சார்ந் தவை. ஒவ்வொரு தூணிலும் விநாயகர், சுப்பிரமணியர், மீனாட்சி திருக்கல்யாணம் நடராச தாண்டவம், காளி நர்த்தனம் முதலிய பல சிற்பங்கள் இங்கு உள்ளன. அத்துடன் முன்னாளில் கோயில் எழுப்பிய வீரபாண்டியன் உருநாட்டும், பிற்காலத்தில் இதை இவ்வளவு விரிவாக ஆக்கிய மகான் கோவிலூர் ஆண்டவர் உருநாட்டும் திருநெல்லை அம்மன் சந்நிதியில் தூண்களில் காணப் பெறுகின்றன.

ஒவ்வொரு கோட்டமும், கோட்டத்தில் உள்ள மாடங்கள், கூடுகள், பஞ்சரங்கள், கும்ப பஞ்சரங்கள் முதலியவையும் வேலைப்பாடுகள் மிக்கவை. அதிஷ்டானத்திலிருந்து கிரீவம் வரையிலும் மிக அழகிய நுணுக்கமான சிற்பத் திறனுடன்விளங்குகின்றன. இவற்றையெல்லாம் ஆற அமர்ந்து சென்று பார்த்தால் இக் கோயி லின் மதிப்பை இன்று இரண்டு கோடிக்கு மேல் கணிக்க வேண்டிய நிலை ஏற்படும்.

வேறு எந்தச் சிவன்கோயிலிலும் இல்லாத முறையில் ஆடவல்லான் என்னும் நடராசப் பெருமான் சந்நிதி சுமார் 200 அடி நீளமுள்ள மண்டபம் உடையதாகப் பெரு வீதியிலிருந்து முற்றும் காணத்தக்கவாறு அமைக்கப் பெற் றுள்ளது. திருமதிலுக்குவெளியே முகசாலையுடன் அமைந்ததும் வண்ணச்சுதையுடன் கூடியது மான அழகுமிக்க ராஜகோபுரத்துடனும் கூடிய அமைப்பை எவ்வளவு பாராட்டினாலும்தகும்.

# கோவிலூர் திருக்கோயிலின் அமைப்பு

வை. ஜானகிராம ஸ்தபதி, மாமல்லபுரம்

நாட்டுக்கோட்டை நகரத்தாரின் திருத் தலங்களில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டிய வற்றுள் கோவிலூர் திருத்தலமும் ஒன்றாகும்.

இங்கு அமைந்துள்ள ஸ்ரீ திருநெல்லை அம்பாள் உடனமர் கொற்ற வாளீசர் ஆலயம் சுவாமி சந்நிதி கருவறை நாட்டுக்கோட்டை நகர திருத்தலங்களில் மற்றெங்கும் இல்லாச் சிறப்புடையதாகும். கருவறை, முகமண்டபம் மஹா மண்டபம் இவை பிற்காலச் சோழர் பாணியை ஒத்த கட்டிடச் சிற்ப அமைப்பை உடையனவாகும்.

அதிஷ்டானம், பாதம், பிரஸ்தரம் இவை களின் வர்க்கங்கள் மிகுந்த வேலைப்பாடுடன், சகல விதமான அலங்கார பூஷணங்களுடன் அமைக்கப்பட்டுள்ளது.

கருவறை பிரஸ்தரமட்டம் வரை கருங்கற் களாலும், அதன்மேல் அமையப்பட்ட விமானம் செங்கல், சுண்ணும்பினுல் கட்டப்பெற்று 3 தளங்களுடன் கூடிய விமானம் அமைக்கப் பட்டு உன்னதமான தோற்றத்துடன் உள்ளது.

இரண்டு கருவறைகளைச் சுற்றிலும் நீராளிபத்தியுடன் கூடியதாக அமைக்கப் பட்டுள்ளது. கோடைகாலத்தில் இறைவன் இறைவியர்க்குக் குளிர்ச்சியூட்டுவதற்காக இந்த ஏற்பாடு உளது.

திருநெல்லை அம்பாள் ஆலயம், சோமாஸ் கந்தர் ஆலயம், இவற்றின் கருவறை மேல்மட்ட மான பிரஸ்தரம் வரை கருங்கற்களினுல் பூரண வேலைப்பாடுகளுடன் செய்யப்பட்டு முழு அளவு மெருகு ஏற்றப்பட்டுள்ளது. இவ்வாலயத்துச் சிறப்புக்களில் இது குறிப்பிடத்தக்கது.

சுவாமிஉள்ள கருவறையின் முன்புறமுள்ள மகாமண்டபத்தின் வடக்குப் பகுதியில் தெற்கு நோக்கிய வண்ணம் ஆடல் வல்லானின் திருவுருவம் அமையப் பெற்றுள்ளது. அதன் எதிரே தெற்கு நோக்கிய வண்ணம் 18 அணி ஒட்டித் தூண்களுடன் கூடிய மண்டபம் உள்ளது. இந்த 18 தூண்களிலும் சுண்டு பாதத் தின் முன்னே யாழிகளுடன் கூடிய தோற்றம் கண்ணையும் கருத்தையும் கவரவல்லது.

அம்பாள் சந்நிதியில் மகாமண்டபத்தின் முன்னே பிராகாரபத்தியின் அருகில் 10 தூண் கள் உள்ளன. இவற்றில் அமைக்கப்பட்ட சிற்பங்களாவன.

## வடக்கே உள்ள தூண்களில்

1. மார்க்கண்டேயர்
2. கங்காளநாதர்
3. வீரபத்திரர்
4. ஊர்த்துவதாண்டவ மூர்த்தி
5. உமையுடன் ரிஷபத்தின் மீதமர்ந்த சிவன்.
6. மயில்மீது அமர்ந்த வடிவத்தில் ஷண்முகம்
7. வீர சேகரபாண்டியரின் திருஉருவம்

## தெற்கே உள்ள தூண்களில்

1. மூஷிக வாகனத்தில் லக்ஷ்மி விநாய கர்.
2. கோவிலூர் ஆண்டவர் தரையில் படுத்து சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்வது.
3. மீனாக்ஷிகல்யாணத் தோற்றம்,
4. தில்லைக் காளியின் சிற்பம்,

5. மீனாக்ஷி திக்விஜய சிற்பம்,

6. சாரதாம்பாள், திருஉருவம்,

7. சரஸ்வதி சிற்பம்.

இந்த விக்கிரகங்கள் சப்த சுவரம் (ஏழு வகை ஓசைகள்) எழுப்பக் கூடிய கற்களைக் கொண்டு வடிக்கப்பட்டவை. மேற்குறிப்பிட்ட 14 சிற்பங்களும் மிகுந்த வேலைப்பாடுகளுடன் திருவுருவ அங்கங்களின் பரிமாணங்கள் மிகச் சிறப்பான முறையில் செதுக்கப்பட்டுள்ளன. இவை யாவும் நாயக்கர் பாணியில் உள்ளது இவ்வாலயத்தின் சிற்பச் சிறப்புக்கு எடுத்துக் காட்டாகும்.

நான்கு பக்கங்களிலும் அமைந்துள்ள நீண்ட பிராகாரங்களில் இரண்டு பக்கங்களிலும் அணி ஒட்டித் தூண்கள் உன்னத தோற்றத்துடன் உள்ளன.

மூலத்தானங்களுக்கும் பரிவார தேவதைகளுக்கும் 11 விமானங்களும், 2 சாலா ஹாரமும், கயிலாசநாதர் சந்நிதிமீது சாலா கோபுரமும், நடராசர் சந்நிதி, அம்மன் சந்நிதி, சுவாமி சந்நிதி மூன்றின்மீதும் கோபுரங்களும் அமைந்துள்ளன.

தெற்குப் பிராகாரத்தின் திருமதில் உட்புறத்தில் 63 நாயன்மார்கள் வண்ண ஓவியமாக தீட்டப்பட்டுள்ளனர்.

கோயிலின் முன்புறம் கிழக்குத் திக்கில் சதுரவடிவான தெப்பம் உள்ளது. அதன் மையப் பகுதியில் நீராளி மண்டபம் 8 பட்ட வடிவில் 16 தூண்களுடன் அமைக்கப்பட்டு அதன்மீது 3 அடுக்குகளுடன் கூடிய விமானம் அமைக்கப்பட்டுள்ளது. இம்மண்டபம் பண்டிகை விருத்த வடிவில் அமையப் பெற்றுள்ளது. மண்டபத்தின் சுற்றளவு 120 அடி இருக்கும். நீர் மட்டத்திற்கு மேல் மண்டபத்தின் உயரம் 45 அடி உளது. தெப்பக் குளத்தை வெளிப்புறமாகச் சுற்றி வந்தால் ஒரு கிலோ மீட்டர் நடந்ததற்குச் சமமாகும்.

நாட்டுக்கோட்டை நகர திருத்தலங்களிலே இங்கே ஊருணி நடுவே நீராளி மண்டபம் கவின்மிகு தோற்றத்துடன் அமைந்திருப்பது இவ்வாலய அழகுகளில் சிறப்புடையதாகும்.

ஆலயத்தின் வெளியே சுவாமி கோயிலின் முன்பு கிழக்கேயும் நடராஜர் சந்நிதியின் முன்பு தெற்கேயும் மண்டபங்கள் அமைத்து அதன்மீது சாலாஹாரம் அமைத்திருப்பது சிறந்த வேலைப்பாட்டை எடுத்துக் காட்டுவதாகும்.

விமானங்களிலும், கோபுரங்களிலும், சாலாஹாரங்களிலும், சிவமூர்த்தங்களும் சிவ புராணச் சிற்பங்களும் அமைக்கப்பட்டுள்ளது.

நடராசர் சந்நிதி மீதுள்ள வண்ணக் கோபுரம் தெற்குப் பார்த்து, காரைக்குடி—குன்றக்குடிச் சாலையில் செல்லுவோரி கவனத்தைத் ஈர்க்கிறது. தட்சணாமூர்த்தி, கோபுரம் தாங்கிகள், புதுமையான வேலைப்பாடுடன் செய்யப்பட்டுள—வாலி சுக்கிரீவன் போர்க் காட்சிகள் ஆகியவை கம்பீரமாக உள்ளன. கண்ணனின் லீலைகள் கவர்ச்சியான சுதைவேலைகளாக உள்ளன.

சாலாஹாரம் அமைக்கப்பட்டுள்ள மண்டபம் 26 தூண்களை உடையது. தூணின் உயரம் 12 அடி கொடுங்கை,கோபிகை முதலியவற்றின் உயரம் 2 அடி இருக்கும். மண்டபத்தின் பரப்பளவு 750 சதுர அடி. சாலஹாரத்தில் நடராசர், காளி, ரதி, மன்மதன் முதலிய சிற்பங்கள் கண்ணையும் கருத்தையும் ஈர்ப்பன.

ஏனைய கோபுரங்களுக்குச் சுதைசெம் பெயிண்டு செய்யப்பட்டுள்ளது. ○



## 1908—வெளியிடப் பெற்ற கும்பாபிஷேக அழைப்பு







உ

சிவமயம்

மகா கணபதி துணை

# சீர்திகழுஞ் சமிவனத்திற் செல்வமலிகோயில் கொண்ட, தார்திகழுந் திருநெல்லைத் தாய்கொற்றவாளீசர்க், கேர்திகழுங் கும்பாபிடேகமியற்றுஞ் சிறப்பைப் பார்திகழன்பர்கள் காணப் பகரவரும் பத்திரிகை

---

திருச்சிற்றம்பலம்

### ஸ்தல புராணம், வன்னி விநாயகர் துதி

*சீர்பூத்தமெய்யறிவின் புருவெனற்கோர் குறியீடுதெரித்தலேய்ப்பக்*
*கார்பூத்தவிருகவுருத் தெய்வவுருப் பூதவுருக்கலப்பத்தோன்றித்*
*தார்பூத்தநகையாலுந் தாங்கொடுத்தவரதி தாலுந்தணவாதென்று*
*மேர்பூத்தசமி நிழல்வாழ்வன்னி விநாயகர் மலர்த்தாளிறைஞ்சி வாழ்வாம்*

### கொற்றவாளீசர் துதி

*மாமேவுகோகனக மரும்பனமலருதல்குவிதன் மருவத்தோயாத்*
*தாமேவுபரிதியெனத்தன் முனர்முத்தொழினடப் பத்தோயாதான்றேர்*
*பாமேவுமிடங்கொள்வன்னி யிரண்டலமூன்றெனவமரர் பரவமேவுங்*
*கோமேவுவன்னி வனக்கொற்றவாளீசர் பதங்குறித்துவாழ்வாம்.*

## ஸ்தல மகிமை

தேடரியசமிவனத்திற் சருவபாவமு நிவர்த்திசெய் தெல்லார்க்கு
நாடரியதருமார்த்த காமமோக்கந் தருவானயந்துநாளும்
வீடரியபரமசிவன் பிரசன்னமாயிருந்து விளங்கலாலே
கூடரியவத்தல முட்கருதுநரு மெண்ணியவை கூடுவாரால்.

## திருஞான்சம்பந்த மூர்த்தி சுவாமிகள் தேவாரம்

வாழ்க வந்தணர் வானவ ரானினம்..........................
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக......................
ஆழ்க தீயதெ லாமர னாமமே.............................
சூழ்க வையக முந்துயர் தீர்கவே..........................

## ஸ்தல புராணம், திருநெல்லை நாயகி துதி

ஓரறிவு முதலாவையறிவுயிர் பம்பருசூழ்தழைய வொருங்கு காக்கும்
பேரறிவுவெளிப்படுப்பானூ றுணர்ச்சியு யிர்ப்பயிர்முன் பிறங்கக்காத்துக்
காரறிவுதபக்களைந்து காரண நோக்குறும் பெரியோர்கட்கானந்த
நேரறிவுமயமான நெல்லைநாயகி மலர்த்தாணிணைந்து வாழ்வாம்.

## அன்னதான மகிமை

பொருவிலத் தலத்தின்னங் கொடுப்பவ்ன்புசிப் போனென்று
மிருவரும்வயங்குமென் றூழ்மண்டலத்தினைப் பேதித்துக்
திருவம ரொளியிற் சென்று சத்தியவுலகஞ் சேர்ந்து
பருவரலொழிந்துபன் னாள்வாழ்குவார் பாராள்வேந்தே.

ஸ்ரீமதகண்ட பரிபூரண சச்சிதானந்த நித்திய நின்மல நிர்க்குண நிஷ்கள நிச்சல நிராமய நிராகார நிஷ்பிரபஞ்ச பரமாத்விதீய பரப்பி சயசொபரும் மகாகத்திருந்துவாதி பிரபுத்துவ முடையவரும் சர்வக்ஞ சர்வேசுர சர்வநியாமக சர்வசுந்தர சர்வவியாபக சர்வசக்தித்துவாதி கல்யாண குணலங்கிருதரும், சிருஷ்டியாதி பஞ்சகிருத்தியபரரும், அணிமாதி அஷ்ட ஐசுவரிய சம்பன்னரும், இன்னும் அசிந்தித மகிமையுள்ளவரும், சாம்பமூர்த்தியுமாய் விளங்கும் பரமசிவன் பாலினெய்போற் சேதனு சேதனப் பிரபஞ்ச முற்றிலும் நிறைந்து மறைந்திருத்தலின் அவ்வாறு மறைந்திருக்குந்தன்மையை ஆசிரியர் முகமாக ஆராய்ந்தறியும் பெரும் புண்ணிய சாலிகளுக்கன்றி சாமானிய ஜனங்களாலறிந்துய்வ தரிதெனத் திருவுளமிரங்கிப் பிரசித்த மான சிவலிங்காதி மூர்த்திகளிடமாக வெளிப்படத் தெரிசித்து சர்வான்மாக்களும் வழிபாடு செய்துய்யும் பொருட்டுப் பெருங்கருணையினாலே புண்ணிய பூமியாகிய பரதகண்டத்திலே எண்ணில்லாத புண்ணிய ஸ்தலங்களை ஸ்தாபித்து தமது தர்ம பத்தினியாரும் லோகமாதாவு மாகிய பராசத்தியாரோடும், ஸ்கந்த கணேசர்களாகிய திருக்குமாரர்களோடும், பரிவாரங்கள் சூழக், கோயில் கொண்டு கொலு வீற்றிருந்தருளுவர்.

அவ்வாறு கொலு வீற்றிருந்தருளும் புண்ணிய ஸ்தலங்கள் பல கோடிகளுள்ளன.

அவற்றுள் எந்நாட்டினும் சிறந்த நன்னாடாயிலங்கும் தென்னாடாகிய பாண்டி நாட்டின் கண்ணே மிகவும் உத்தமோத்தமமாய்ச் சிறந்த புராதன புண்ணிய சிவஸ்தலங்களுளொன்றுய தும், மதுப்பிரிய முனிவர் நெடுங்காலம் அருந்தவஞ்செய்ய, சிவபெருமான் அவர் தவத்திற் கிரங்கி ஞானோபதேசம் புரிவித்து பார்வதி சமேதராய்க் காட்சி கொடுத்து அம்முனிவர் வேண்டுகோளுக்கிசைந்து திரிபுவனேசுவரர் திரிபுவனேசுவரி என்னுந் திருநாமத்தோடு வீற்றிருக்கப்பெற்றதும், சைமினிமுனிவர் அகத்திய முனிவரிடம் இத்தல மகிமையைக் கேட்ட வாயிலாகச் சித்தகத்தியையும் பிரம ஞானத்தையும் பெற்றுய்யப்பெற்றதும், சுவேதராஜன் கும்ப முனிவராக்ஞையின்படி தன் புத்திரனுலன்ன தானஞ்செய்து கதியடையப் பெற்றதும் மதுபுஷ்கரணி மதுநதி பிரமதீர்த்தம் என்னும் இப்புண்ணிய தீர்த்தங்கள் வாய்க்கப் பெற்றதும், மதுப்பிரியருக்கு வரமளித்தபடி எப்போதும் மகான்கள் வசிக்கப் பெற்றதும், ஸ்ரீவல்லபம், சமிவனம், சாலிவாடிபுரம், கழனிவாயில் என்னும் சிறப்பு நாமங்களமையப் பெற்றதும், திருப்புத்தூர், திருமெய்யம், திருப்பெருந்துறை, கண்டதேவி, திருக்கானப்பேர்

முதலிய திவ்விய க்ஷேத்திரங்கள் சூழப்பெற்றதும், இன்னும் அநேக அற்புதங்களமையப் பெற்றதுமாகிய சமிவன க்ஷேத்திரமென்னுங் கோயிலூரில்,

திரிபுவனேசுவரர் வீரபாண்டியனது வாளையொளித்ததனால் கொற்றவாளீசுவரரென்றும் திரிபுவனேசுவாரியார் சுதன்மை என்னும் அம்மையார்க்கு நெற்காத்ததனால் திருநெல்லைநாயகி என்றும் திருநாமம் புனைந்து வீரபாண்டிய அரசனால் நிர்மாணஞ்செய்த திருக்கோயிலில் கொலுவீற்றிருந்தனர்.

அவ்வாலயம் வெகுகாலமாய் ஜீர்ணமாயிருந்ததனால் சாலிவாடீசுவரி என்னும் அம்மையார் ஆண்டவரென்னும் சிறப்பு நாமம் வாய்ந்த முத்துராமலிங்க சுவாமிகளென்னும் மகானுபாவர் முகமாக உத்தாரணஞ் செய்து கொள்ளத் திருவுளங்கொண்டு பிராமணக் கன்னிகை வடிவ திருக்கோலத்தோடு காரைக்குடியென்னும் திருநகரடைந்து அம்மகானு பாவரது தாயாரிடம் திருப்பணியைச் செய்து முடிக்குமாறு கட்டளையிட்டவாறே நகரத்தார்கள் கொடுத்த பெரும் பொருளுதவியால் முற்காலத்திற் கர்ப்பக் கிரகம் அர்த்த மண்டபம் மகாமண்டபம் பரிவார ஆலயம் இராஜ கோபுரங்களும், பிற்காலத்தில் சிதம்பர சுவாமிகளால் சோமாஸ்கந்தருக்கு கருங்கல்லாலிழைத்த ஆலயமும் கல்யாண மண்டபமும் திருக்குள மய்ய மண்டபமும், இக்காலத்தில் திருமாளிகைப்பத்தி அணியொட்டிக்கால் மண்டபமும் திருநெல்லையம்மையார்க்கு கருங்கல்லாலிழைத்த கர்ப்பக்கிரகமும் அர்த்தமண்டபமும் திருவருளால் நிறைவேறியிருத்தலால்,

சிவகெங்கை சமஸ்தானாதிபதி விஜயரெகுநாத சசிவர்ண பெரியவுடையார் தேவராகிய கௌரி வல்லபதுரைசிங்க மகாராஜா அவர்கள் அனுமதியும் பெற்று திருவருளை முன்னிட்டு,

ஙிலகஷு சித்திரைமீ யகஉ குருவாரம் சப்தமிதிதி உத்திராட நக்ஷத்திரமுங் கூடிய சுப முகூர்த்தத்தில் உதயாதி 11¼ நாழிகைக்கு மேல் 12¾ நாழிகைக்குள் மிதுன லக்னத்தில்,

ஸ்ரீ இராஜகட்க பரமேசுவரருக்கும் சாலிவாடீசுவரிக்கும் கயிலாசநாதருக்கும் நித்திய கல்யாணியம்மைக்கும் ஸ்கந்தர் கணேசாதி பரிவாரங்களுக்கும் மஹா சாந்திரூப அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேகமும் அன்றிரவு பஞ்சமூர்த்திகளும் திருவீதியில் திருவுலாக் கொண்டருளு தலாகிய மஹாமங்கள மஹாவைபவ மஹா ரிஷபப்பவனி மஹோத்சவமும் நிகழுமாதலால் சிவநேசச் செல்வர்கள் யாவரும் இஷ்டமித்திராளுடன் வந்து தெரிசனைந்தப் பெருவாழ்வு பெற்று இகபரமோக்ஷ சர்வாபீஷ்டங்களையுமெய்தி எந்நாளுமின்புற் றினிது வாழும்படி விரும்பு கின்றனம்.

## விசேஷ தினங்களின் விவரம்

| | | |
|---|---|---|
| ஙிலகஷு சித்திரைமீ | கஉ | அனுக்ஞை விக்னேசுவர பூஜை |
| ,, ,, | ருஉ | இரவு கட ஸ்தாபனம் |
| ,, ,, | யகஉ | மகா கும்பாபிஷேகம் |

## வாழ்த்து

இலங்கு புகழ்வன்னி வனம் வாழ்க வொளிர் கொற்றவாளீ சர்வாழ்க
கலங்குதறீர்த் தெனையாண்ட நெல்லைநாயகி பெரியகருணை வாழ்க
மலங்குதலிலத் தலத்து மன்னிவளர்மாதவர்கள் வாழ்க வாழ்க
கலங்குலவுமணிமன்றண்ட நவிலவெடுத்த பொற்றுணைளும் வாழ்க.

பிலவங்க ஷு
பங்குனிமீ கஉ

இங்ஙனம்

**கோயிலூர் மடாலயம் வீரசேகர ஞானதேசிகர்.**

மீனலோசனி பிரஸ், தேவகோட்டை–6,000.

# 1908-ல் நடந்த கும்பாபிஷேகம்

## தமிழ்க்கடல் இராய. சொ. அவர்கள்

### 1961-ல் எழுதியது

வீரசேகர ஞான தேசிக சுவாமிகள் அறுபத்து மூன்று ஆண்டுகள் இவ் உலகில் வாழ்ந்தார்கள். அவர்கள் திருக்களர் ஈசன் திருவடி நிழலை அடைந்தபோது எனக்கு வயது பதின்மூன்றே. எனவே அவர்களை நுணுகி அறியும் பருவம் இல்லையெனினும் அந்தச் சிறு வயதிலேயே அவர்கள் சிறப்பை ஓரளவு கண்டிருக்கிறேன்.

கோவிலூர்ச் சிவன் கோயிலை அழகுற அமைத்த பெருமை வீரசேகர ஞான தேசிகர்க்கே உரியது. கோயிலூர்க் கும்பாபிஷேகம், அந்த நாளில் பெருஞ் சிறப்புடன் சுவாமிகளால் நடத்தப் பெற்றது, எனக்கு இன்னும் நினைவிருக்கிறது. அந்த நாளில் இப்பகுதியில் மோட்டார் வசதி கிடையாது. காரைக்குடிக்கும் கோவிலூருக்கும் இடையிலுள்ள பாதைகள் வயல்கள் முழுதும் ஒரே மக்கட் காடாக இருந்தது.

கோவிலூர் பலவகைச் சிறப்பும் பெற்றது முத்துராமலிங்க ஞானதேசிகர் அவர்களால் என்றாலும், அது எல்லையற்ற வளர்ச்சியுற்று, அறிவொடு அழகும், தாண்டவம் ஆடப் பொலிவுற்றது, வீரசேகர ஞான தேசிகர் அவர்களாலேயேயாகும்.

வீரசேகர ஞான தேசிக சுவாமிகள், கடுந்துறவி மட்டுமல்ல; சிறந்த சிற்பி. துறவை ஒரு கண்ணாகவும் கலையை மற்றொரு கண்ணாகவும் கொண்டு வாழ்ந்த அரும்பாடு உடையவர்கள். மடாலயத்துக்கு அழகிய கட்டிடங்கள் பல எழுப்பினார்கள். பல்லாயிரம் பேர் அமரத்தக்க பிரமாண்டமான கயிலாசக் கொட்டகை என்று சொல்லப்பெறும் உயர்ந்த மண்டபம் ஒன்றைக் கட்டினார்கள். மடாலயத்தின் முகப்பு மன்னர்களின் அரண்மனையைப் போலவே தோற்றம் அளிக்கும். தேரோடும் வீதிகளில் உள்ள காலி இடங்கட்குக்கூட, கைப்பிடி சுவர் எழிலுற ஒரே படித்தாக எடுத்த கலைஞர் வீரசேகர சுவாமிகள்.

வீரப்ப சுவாமிகள் காலத்தில் கோவிலூர் ஆடிப்பூரத் திருவிழா என்று சொன்னால், காரைக்குடியே திரண்டு சென்று விடும். ஏனைய ஊர்களிலிருந்தும் ஏராளமான கூட்டம் வரும். அங்கு திருவிழா நடக்கும் அழகே தனி. சுவாமிகள், இறைவி திரு உலாவின் போது, முன்னே நடந்து சென்று கொண்டிருப்பார்கள். ஏதாவது ஆக வேண்டும் என்றால் திரும்பி ஒரு பார்வை பார்ப்பார்கள். உடனே கூட்டத்தில் பெரிய அதிர்ச்சி. அவர்கள் உள்ளக் குறிப்பின்படி யாவும் நடக்கும்.

> "நீறு மணக்கும் நெற்றியெலாம்,
> நெய்யே மணக்கும் கறிகள் எலாம்,
> சோறு மணக்கும் மடங்கள் எலாம்"

என்று மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள், சேக்கிழார் பிள்ளைத் தமிழில் பாடினார்கள். சுவாமிகள் ஆட்சி நாளில், கோவிலூர் மடத்தில் இவைகள் எல்லாம் மணந்தன.

சுவாமிகட்கு "வாக்குப் பலிக்கும்" என்று அந்த நாளில் பலரும் அஞ்சுவர். பிறர் குற்றம் கண்டுழிக் கடிந்து கூறுதல் உண்மையாமானால் அவர்களையே, "நிறைமொழி மாந்தர்" என்று சொல்வர் அறிஞர். நிர்வாகத் திறனும் சிறந்த ஆற்றலும், தவவேடமும், அதற்குரிய சீலமும், ஒருங்கே வாய்த்த மேதகை ஞானி திருக்களர் ஆண்டவர். நடையுறுப் பெருந்துறவியான வீரசேகர ஞான தேசிக சுவாமிகளின் சீரிய ஒழுக்கம் உலகெலாம் நிறைந்து ஓங்குக! ★




# கோவிலூர் ஆண்டவர்

என்ற

## ஸ்ரீ-ல-ஸ்ரீ முத்து ராமலிங்க ஞானதேசிகர் அவர்கள்




**துறவு ஆண்டவர்**

என்ற

**ஸ்ரீ-ல-ஸ்ரீ அருணசல ஞான தேசிகர் அவர்கள்**

# கீலக வருஷத்துக் கோவிலூர்க் கும்பாபிஷேகம்



கண்டனூர் நா. பெ. நா. மு. முத்துராம ஐயா



பூமிதன்னி லுயர்வான பாண்டி நாட்டிற் புனிதமுள
நாமம் பெற்ற கோவிலூர் நண்ணுங் கொற்ற வாளீசர்க்
கேம மானதிரு நெல்லை யம்மை யார்க்கு மினிதாகச்
சேமமான திருப்பணி முன் செய்தான் வீர பாண்டியனும்.

ஆகம சாலைக ளொருசா ரந்தணர் சாலைக ளொருசாரி
யாக சாலைக ளொருசார் ஞானிகள் சாலைக ளொருசார்
பாக சாலைக ளொருசார் பண்டித சாலைக ளொருசார்
தாக மதுத விர்த்தாளுந் தண்ணீர்ப் பந்தல்க ளொருசார்.

கல்வியினிற் சிறந்தோர்க்குங் காவியத்தாளுயர்ந்தோர்க்குங்
கவி சொல் வோர்க்குஞ், சொல்வேத வாக்கியர்க்குந் தொண்டு
செய்வோர் தங்களுக்குஞ் சுகம தாக, நல்குரவென் பதுகனவு
நாடாது பொருளதனை நயந்து நல்கிச் செல்வமுள வணிகர்கட்கு
விபூதிப்பை யதுங் கொடுத்துச் சிறக்க வாழ்ந்தார்.



உ

சிவமயம்

மஹாகணபதி துணை



# சிவகங்கை சமஸ்தானத்தைச் சார்ந்த கோவிலூர்

## அருள்தரு அன்னை திருநெல்லை உடனமர் அருள்மிகு கொற்றவாளீசர் திருக்கோயில்

# ஜீர்ணோத்தாரண, அஷ்டபந்தன, திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா.









**சீர்திகழும் சமிவனமாம் செழுங்கோவி லூர்உறையும்**
**தார்திகழும் திருநெல்லைத் தாய்கொற்ற வாளீசர்**
**ஏர்திகழும் கும்பாபி ஷேகம்அதன் எழில்காணப்**
**பார்திகழும் அன்பர்தமைப் பரிந்தழைக்கும் பத்திரிகை**

### சிதம்பர விநாயகர் வணக்கம்

முத்தே! என் சித்தத்து ஒளியாய் விளங்கும் சதாசுகமே!
பத்தே பிறந்து பிறந்தேஇந் நாள்வரைப் பட்டதுன்பக்
கொத்தே அகற்றும் குருவே! பிறக்கும் குணகுணிக்கும்
வித்தே! களனிச் சிதம்பரம் என்னும் விநாயகனே!

### கொற்றவாளீசர் வணக்கம்

கருக்குழியில் வீழ்ந்து, கசடர்உறவு ஆகிப்
பெருக்கமாம் பொய்ப்பொருளைப் பேணு-மருக்கமழும்
தென்களனி ஊரில் சிறந்தகொற்ற வாளீசர்
பொன்கமலத் தாள்இணையே போற்று!

### திருநெல்லையம்மை வணக்கம்

அருளொடு பரையாய்ச் சிவமயம் ஆகும் அம்மையே! எனதுஅகத்து இருந்து,
தெருளொடு மருளும் தியக்கறத் தெய்வமே! அன்பிலேன் உனது
திருவடி நிழலில திரிபுடி மறந்து திரமொடுஞ் சேரும்நாள் உளதோ?
இருள்அற விளங்கும் களனியம் பதிவாழ் ஏகமே! திருநெல்லை அம்மே!

### தலச் சிறப்பு

தேடரிய சமிவனத்தில் சருவபா வமும்நிவர்த்தி செய்துஎல் லார்க்கும்
நாடரிய தருமார்த்த காமமோக் கந்தருவான் நயந்து நாளும்
வீரிடய பரமசிவன் பிரசன்ன மாய்இருநது விளங்க லாலே
கூடரிய அத்தலம்உட் கருதுநரும் எண்ணியவை கூடுவாரால்.

பேரன்புடையீர் !

எந் நாட்டவர்க்கும் இறைவனும் தென்னாடு உடைய சிவபெருமான், அம்மையோடும் அமர்ந்து அருள் சுரக்கும் ஆலயங்கள் ஆயிரம் ஆயிரம் ஆம். அவற்றுள் சிவபிரான் தன் நாடு எனக்கொண்டது தென்பாண்டி நாடே ஆம். இந் நாட்டில், கிழக்கே திருப்பெருந்துறையும், தெற்கே திருக்கானப்பேரும், மேற்கே திருப்புத்தூரும், வடக்கே திருமெய்யமும் ஆன பாடல் பெற்ற திவ்வியத் தலங்கள் சூழ, நடுவே மூர்த்தி, தலம், தீர்த்தம் முதலிய சிறப்புகள் எல்லாம் நிரம்பப் பெற்றுத் திகழ்வது கோவிலூர் ஆகும்.

புராணப் பெருமையுடன் வரலாற்றுச் சிறப்பும் பெற்றுப் பிறங்குவது இப் புனிதப்பதி. "ஸ்ரீவல்லபம்", "சமிவன க்ஷேத்திரம்", "வன்னிவனம்" என்ற பெயர்களால் புராணங்கள் கோவிலூரைப் புகழும். "கழநிவாயில்", "ஏழகப் பெருந்தெரு", "வீரபாண்டியபுரம்" "மருதேந்திரபுரம்" என்ற பெயர்களால் வரலாற்று ஏடுகள் இதன் பெருமையைப் பேசி மகிழும். வீரமும், வெற்றியும், புகழும் செறிந்த பாண்டி நாட்டு ஏழகப் பெரும்படை இருந்த பெரும்பதியும் இதுவேயாம். இத்தகைய சிறப்புகள் மலிந்த இப்பதியில் பன்னூறு ஆண்டுகட்கு முன் பாண்டியர் காலத்துக் கடவுண்மங்கலம் செய்யப்பெற்ற ஆலயம், திருவுண்ணாழி (கர்ப்பக்கிருஹம்) மட்டிலும் செம்பாரங்கல்லால் கட்டப்பெற்று இருந்தது. அதுவும் பழுதுற்றுச் சுற்றிலும் செடி கொடிகளால் ஆன புதர் மண்டிக் கிடந்தது. கோவிலூர் ஆதீன முதற் குரவரும் "கோவிலூர் ஆண்டவர்" எனப் பரவப் பெறுபவர்களும் ஆன ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஞானதேசிக ஸ்வாமிகள் அவர்கள் இவற்றை எல்லாம் கண்டு உள்ளம் நைந்துருகி இவ் ஆலயத்தை எல்லா நலன்களோடும் பெருங்கோயிலாகத் திருப்பணி செய்யத் திருவுளம் பற்றினார்கள். ஸ்ரீமத் ஆண்டவர் அவர்களின் எண்ணம் நிறைவெய்த நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் தாராளமாகப் பொருள் உதவி செய்தனர். ஸ்ரீமத் ஆண்டவர் அவர்களின் திருக்கரத்தால் வரையப்பெற்று அடிக்கோலப் பெற்றதான திருக்கோயில், அடுத்த மடாதிபதிகளாக எழுந்தருளியிருந்த "கருணாநிதி" என்று போற்றப்பெறும் ஸ்ரீலஸ்ரீ சிதம்பர ஞானதேசிக ஸ்வாமிகள், "திருக்களர் ஆண்டவர்" எனப் போற்றப்பெறும் ஸ்ரீலஸ்ரீ வீரசேகர ஞான தேசிக ஸ்வாமிகள் ஆகிய மஹான்களால் தொடர்ந்து திருப்பணி செய்யப் பெற்று ஒப்பற்ற முறையில் வனப்பும், சிறப்புச் செழிப்பும் மிக்க பெருங்கோயிலாக எல்லா அங்க அமைதிகளுடனும் நிறைவு செய்யப் பெற்றது. கோயில் மட்டுமின்றிச் சுற்றுத் திருவீதிகள், திருக்குளம், மைய மண்டபம், நுழைவாயில் ரதகூடங்கள், வளைவுடன் கூடிய ரத மேருக்கள் முதலியனவும் அமைக்கப்பெற்று (கி. பி. 1908) கீலக ஆண்டு சித்திரைத் திங்கள் பதினோரும் நாள் வெள்ளிக்கிழமை மிகச் சிறப்பாகத் திருக்குட நீராட்டு விழா மூன்றாவது முறையாக நடைபெற்றது.

இன்றைக்குச் சரியாக எழுபது ஆண்டுகட்குப் பின், கோயிலில் ஏற்பட்டுள்ள பழுதுகளை முற்றும் களைந்து சீர்திருத்தி, விமானங்கள், கோபுரங்கள், திருக்குளம் உள்பட அனைத்தையும் புதுப்பித்து, வண்ணம் தீட்டிச் செம்மையாக்கித் திருக்குட நீராட்டுச் செய்ய வேண்டுமென்று இந்நாள் கோவிலூர் ஆதீனகர்த்தராக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீலஸ்ரீ இராமநாத ஞான தேசிக ஸ்வாமிகள் திருவுளங் கொண்டு அதற்கெனத் திருப்பணிக்குழு ஒன்றும் அமைத்தார்கள். இத்திருப்பணியை நகரத்தார்கள் பலரும் ஆர்வங் கொண்டு உபயமாகச் செய்துள்ளார்கள்.

இத் திருக்கோயிலின் பரம்பரை அறங்காவலர்களான சிவகங்கை மன்னர், ஸ்ரீ. து. கார்த்திகேய வேங்கடாசலபதி ராஜா அவர்களின் அனுமதியும் பெற்று திருவருள் துணையாலே,

காலயுக்தி ஆண்டு சித்திரைத் திங்கள் 8-ம் நாள் (21—4—1978) வெள்ளிக்கிழமை சதுர்த்தசி திதியும், அஸ்த நட்சத்திரமும், அமிர்தயோகமும் கூடிய நன்னாளில், காலை 9-30க்கு மேல் 10-30 மணியளவில் மிதுன லக்கினத்தில் திருக்குட நன்னீராட்டு விழா நடைபெறும்.

அன்பர்கள் அனைவரும் வந்து கண்டு வணங்கி வழிபட்டு, அருள்தரு திருநெல்லை அம்பிகை உடனுறை அருள்மிகு கொற்றவாளீசர் திருவருள் பெற்று இம்மை மறுமைப் பேறுகள் எய்தி இன்புற்று வாழ விரும்புகிறோம்.

# நிகழ்ச்சி நிரல்

| தேதி | கிழமை | நிகழ்ச்சி விவரம் |
|---|---|---|
| காலயுக்தி<br>சித்திரை-1<br>14—4—78 | வெள்ளி | காலை 7-55 க்கு மேல் 9-15 மணி அளவில் அனுக்ஞை, விக்னேஸ்வர பூஜை |
| சித்திரை-4<br>17—4—78 | திங்கள் | முற்பகல் 11-40 க்கு மேல் 12-30 மணி அளவில் தனபூஜை முதலியன<br>இரவு வாஸ்துசாந்தி, ம்ருத்ஸங்க்ருஹணம் |
| சித்திரை-5<br>18—4—78 | செவ்வாய் | இரவு 7க்கு மேல் 8 மணி அளவில், துலா லக்னத்தில் **கட ஸ்தாபனம்.**<br>யாக பூஜை ஆரம்பம், பூர்ணாஹுதி |
| சித்திரை-6<br>19—4—78 | புதன் | பகல் 12 மணி அளவில் யாகபூஜை, பூர்ணாஹுதி<br>இரவு 8-30 யாகபூஜை, பூர்ணாஹுதி |
| சித்திரை-7<br>20—4—78 | வியாழன் | பகல் 12 மணிக்கு யாகபூஜை, பூர்ணாஹுதி<br>இரவு 8-30 க்கு யாகபூஜை, பூர்ணாஹுதி |
| சித்திரை-8<br>21—4—78 | வெள்ளி | காலை 7 மணிக்கு யாக பூஜை, பூர்ணாஹுதி<br>காலை 9-30 க்கு மேல் 10-30 மணி அளவில் மிதுன லக்னத்தில்<br>**மஹா கும்பாபிஷேகம்**<br>பிற்பகல் 3 மணி அளவில் மஹாபிஷேகம்<br>இரவு 7 மணி அளவில் திருக்கல்யாணம், தெப்பத் திருவுலாவும் ஐம்பெருங் கடவுளர் திருவீதி உலாவும். |

யாகசாலை பூஜா காலங்களில் வேதபாராயணம், திருமுறை பாராயணம், விசேட நாதஸ்வர கச்சேரிகள் ஆகியன நடைபெறும்.

சமயச் சொற்பொழிவுகள், பட்டி மண்டபம் முதலிய நிகழ்ச்சிகளும் நிகழும்.

இங்ஙனம்,

**கோவிலூர் ஆதீனம்.**
**நாட்டுக்கோட்டை நகரத்தார்.**

# கோவிலூர் ஆதீனம் திருப்பணிக் குழுவினர்

| | | |
|---|---|---|
| புரவலர் | ஸ்ரீலஸ்ரீ இராமநாத ஞான தேசிகர், | கோவிலூர் ஆதீனம். |
| ,, | ஸ்ரீலஸ்ரீ தேவி பிரசன்ன சற்தரு | |
| ,, | ஸ்ரீ திருச்சி ஸ்வாமிகள், | பெங்களூர். |
| ,, | சிவகங்கை மன்னர் | |
| | ஸ்ரீ து. வேங்கடாசலபதி ராஜா அவர்கள், | சிவகங்கை. |
| தலைவர் | ஸ்ரீ அ. க. அ. சித. அழ. சிதம்பரம் செட்டியார், | கோட்டையூர். |
| உபதலைவர் | ஸ்ரீ சா. நா. அ. சொ. அண்ணாமலை செட்டியார், | காரைக்குடி. |
| ,, | ஸ்ரீ லெ. அழகுசுந்தரம் செட்டியார், | கண்டரமாணிக்கம். |
| ,, | ஸ்ரீ சா. கணேசன் (கம்பன் அடிப்பொடி), | காரைக்குடி. |
| ,, | ஸ்ரீ அரு. கி. கிருஷ்ணன் செட்டியார், | பாகனேரி. |
| ,, | ஸ்ரீ ப. வ. ராம. குழந்தையன் செட்டியார், | ராயவரம். |
| ,, | ஸ்ரீ மெ. செ. மெ. மெ. சொக்கலிங்கம் செட்டியார், | காரைக்குடி. |
| ,, | ஸ்ரீ லெ. நாராயணன் செட்டியார், | கண்டரமாணிக்கம். |
| ,, | ஸ்ரீ மு. சித. முத்தையா செட்டியார், | கானாடுகாத்தான். |
| ,, | ஸ்ரீ உ. மு. சுப. லெ. மெய்யப்ப செட்டியார், | தேவகோட்டை |
| செயலர் | ஸ்ரீ மு. மெ. முத்துராமன் செட்டியார், | காரைக்குடி. |
| ,, | ஸ்ரீ ப. சு. ராமநாதன் செட்டியார், | காரைக்குடி |
| ,, | ஸ்ரீ ராம. லெ. ராம. லெ. லெட்சுமணன் செட்டியார், | தேவகோட்டை. |
| பொருளாளர் | ஸ்ரீ ராம. முத்துப் பழநியப்ப செட்டியார், | பாகனேரி. |
| ,, | ஸ்ரீ அ. ராம. அ. லெ. முவீ. முத்துவீரப்ப செட்டியார், | தேவகோட்டை |
| உறுப்பினர் | ஸ்ரீ அழ. கரு. அடைக்கப்ப செட்டியார், | காரைக்குடி. |
| ,, | ஸ்ரீ தெ. நா. தெ. அண்ணாமலை செட்டியார், | குழிபிறை. |
| ,, | ஸ்ரீ ப. சு. ராம. அண்ணாமலை செட்டியார், | காரைக்குடி. |
| ,, | ஸ்ரீ கண. க. சொ. அருணகிரி செட்டியார், | நாட்டரசன்கோட்டை. |
| ,, | ஸ்ரீ அரு. மு. அரு. அருணாசலம் செட்டியார், | ராங்கியம். |
| ,, | ஸ்ரீ அ. அழ. அழகப்ப செட்டியார், | காரைக்குடி. |
| ,, | ஸ்ரீ உ. மு. சுப. லெ. அழகப்ப செட்டியார், | தேவகோட்டை. |
| ,, | ஸ்ரீ கதி. அழகப்ப செட்டியார், | பள்ளத்தூர். |
| ,, | ஸ்ரீ எம். எஸ். உடையப்ப செட்டியார், | பள்ளத்தூர். |
| ,, | ஸ்ரீ வெ. கண். கண்ணப்ப செட்டியார், | நாட்டரசன்கோட்டை. |
| ,, | ஸ்ரீ வெ. ராம. சோம். கருப்பஞ் செட்டியார், | அமராவதிபுதூர். |

| | | |
|---|---|---|
| உறுப்பினர் | ஸ்ரீ வயி. சண்முகம் செட்டியார், | நாச்சியாபுரம் |
| ,, | ஸ்ரீ கூ. அரு. க. அரு. சம்பத் செட்டியார், | கீழப்பூங்குடி. |
| ,, | ஸ்ரீ அ. செ. சு. ராம. சாமிநாதன் செட்டியார், | அரிமளம் |
| ,, | ஸ்ரீ மெ. நா. சித. சிதம்பரம் செட்டியார், | காரைக்குடி |
| ,, | ஸ்ரீ வ. நா. சித சிதம்பரம் செட்டியார், | ராங்கியம். |
| ,, | ஸ்ரீ வ. செ. சிவலிங்கம் செட்டியார், | பூலாங்குறிச்சி. |
| ,, | ஸ்ரீ சி. வெ. சி. சின்னக்கருப்பன் செட்டியார், | கொத்தமங்கலம். |
| ,, | ஸ்ரீ வ. ராம. சி. சின்னையா செட்டியார், | குழிபிறை |
| ,, | ஸ்ரீ ஏ. எல். சுப்பிரமணியன் செட்டியார், | காரைக்குடி. |
| ,, | ஸ்ரீ சு. மு. மு. சுப்பிரமணியன் செட்டியார், | தேவகோட்டை. |
| ,, | ஸ்ரீ நா. சுப. சுப்பிரமணியன் செட்டியார், | கண்டனூர். |
| ,, | ஸ்ரீ வெ. மு. வெ. சுப. சுப்பையா செட்டியார், | ராயவரம். |
| ,, | ஸ்ரீ பிச. அரு. அரு. செந்தில்நாதன் செட்டியார், | தேவகோட்டை. |
| ,, | ஸ்ரீ சா. நா. அ. அழ. சொக்கலிங்கம் செட்டியார், | காரைக்குடி. |
| ,, | ஸ்ரீ எல். சொக்கலிங்கம் செட்டியார் | தேவகோட்டை. |
| ,, | ஸ்ரீ சொ. மெ. பழ. சோமசுந்தரம் செட்டியார், | ,, |
| ,, | ஸ்ரீ பெ. ராம. லெ. சோமசுந்தரம் செட்டியார், | நச்சாந்துபட்டி |
| ,, | ஸ்ரீ அரு. நா. நடராஜன் செட்டியார், | வலையபட்டி |
| ,, | ஸ்ரீ சுப. அ. நடராஜன் செட்டியார், | பனையப்பட்டி. |
| ,, | ஸ்ரீ அபிஸீனியா பழ. நாச்சியப்ப செட்டியார், | காரைக்குடி. |
| ,, | ஸ்ரீ சோம. நாராயணன் செட்டியார், | தேவகோட்டை. |
| ,, | ஸ்ரீ லெ. சித. லெ. பழநியப்ப செட்டியார், | கண்டனூர். |
| ,, | ஸ்ரீ கும. நா. சுப. மாணிக்கம் செட்டியார் | செம்பனூர். |
| ,, | ஸ்ரீ தெ. வயி. சோம. மாணிக்கம் செட்டியார், | கல்லல். |
| ,, | ஸ்ரீ கருமுத்து மாணிக்கவாசகம் செட்டியார், | தெக்கூர். |
| ,, | ஸ்ரீ அ. முத்தையா செட்டியார், | தேவகோட்டை |
| ,, | ஸ்ரீ கு. நா. மெ. மெ. முத்தையா செட்டியார், | காரைக்குடி. |
| ,, | ஸ்ரீ டாக்டர் எம். ஆர். முத்தையா (மதுரை), | கோட்டையூர். |
| ,, | ஸ்ரீ முரு. ராம. முரு. முருகப்ப செட்டியார், | நடராஜபுரம். |
| ,, | ஸ்ரீ மெ. செ. ராம. மெய்யப்ப செட்டியார், | காரைக்குடி. |
| ,, | ஸ்ரீ நா. மெய்யப்ப செட்டியார், | காரைக்குடி. |
| ,, | ஸ்ரீ நாக. ராம. ராமசாமி செட்டியார், | புதுப்பட்டி. |
| ,, | ஸ்ரீ ராம. வீர. ராம. ராமசாமி செட்டியார், | காரைக்குடி. |
| ,, | ஸ்ரீ வெ. ராம. லெ. ராம. ராமசாமி செட்டியார், | காரைக்குடி. |
| ,, | ஸ்ரீ சி. க. அரு. க. அரு. சோம. ராமநாதன் செட்டியார், | ஒக்கூர். |
| ,, | ஸ்ரீ நா. சுப. ராம. ராமநாதன் செட்டியார், | உலகம்பட்டி. |
| ,, | ஸ்ரீ மு. வ. மு. ராமநாதன் செட்டியார், | வலையபட்டி. |
| ,, | ஸ்ரீ ராம. அழ. ராம. ராமநாதன் செட்டியார், | கோட்டையூர். |
| ,, | ஸ்ரீ எ. மு. விஸ்வநாதன் செட்டியார், | புதுவயல். |

இளங்கோ அச்சகம். 3, கான்பாளையம் 1-வது தெரு, மதுரை 625009

முக்கிய குறிப்பு: டபுள் கிரவுன் அளவில் இந்த அழைப்பு அச்சிடப் பெற்று கோயில் களிலும் நகர விடுதிகளிலும் நகரத்தார் சங்கங்களிலும் சுவரொட்டியாக ஒட்டுவதற்கு அனுப்பப்பட்டது. உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் உள்ள அன்பர்களுக்கு அனுப்பு வதற்காக 16 பக்கங்கள் கொண்ட சிறு நூலாக இந்த அழைப்பிதழ் அச்சிடப் பெற்றது.

உ

காரைக்குடியை அருகிலுள்ள

# கோவிலூர் கும்பாபிஷேகம்

21—4—78 வெள்ளிக்கிழமை

காலை 9-30 மணிக்கு

---

இரவு தெப்பமும்

ஐம்பெருங்கடவுளர் திருஉலாவும்

18—4—78 செவ்வாய் இரவு முதல்

யாக பூசை நடைபெறும்

எல்லோரும் வருக!

இறையருள் பெறுக!!

உ



# கோவிலூர் ஆதீனத்திலிருந்து எழுதிய

# திருமுகம்

கண்ணுதலும் செஞ்சடையும் கறைமிடறும்
தான்கரந்து கயிலை நீங்கி
எண்ணரிய முத்திரா மேந்திரய்யன்
எனும்நாமம் எங்கும் ஓங்க
மண்ணுலகில் அடியவர்க்கு முத்திநிலை
பிரமமென வகுக்க வந்த
வண்ணம்அளிக் கும்கழனி நகரினில்வாழ்
குருபரனை வணங்கி வாழ்வாம்.

மெய்யன்புடையீர் !

அகண்ட பரிபூரண சச்சிதானந்த சிவ சொரூபமாக விளங்கும் நமது "ஆண்டவர்" ஸ்ரீமத் முத்துராமலிங்க ஞான தேசிக ஸ்வாமிகள் அதிஷ்டான ஆலயத்தில், திருவருள் துணைகொண்டு,

வருகிற காலயுத்தி ஆண்டு, சித்திரைத் திங்கள், 8-ம் நாள் (21-4-1978) வெள்ளிக்கிழமை, திரயோதசி திதி, அஸ்த நட்சத்திரம், அமிர்தயோகம் கூடிய நன்னாளில், காலை 7-51க்கு மேல் 8-07 மணி அளவில் ரிஷப லக்னத்தில்

## அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேகம்

நடைபெற ஏற்பாடாகியுள்ளது.

அன்பர்கள் அனைவரும் வந்து, கண்டு, வணங்கி எல்லாப் பேறுகளும் எய்தி இன்புற்று வாழ விரும்புகிறோம்.

ஓம் தத் ஸத்
ஸ்ரீ சற்குருநாதன் திருவடி சரணம்

# கோவிலூர் கும்பாபிஷேகம்

மு. மெ. முத்துராமன்

கௌரவ மேற்பார்வையாளர், அருள்மிகு கொற்றவாளீசர் கோயில்

கோவிலூர்! எவ்வளவு அழகான பெயர். கோவிலைச் சுற்றி அமைந்த சிறு நகர் ஆனதால் கோவிலூர் என்றாயிற்று. ஊரே ஒரு கோவிலாக அமைந்து அழகு கொழிப்பதால் கோவிலூர் என்பது முற்றும் பொருத்தமே.

கோவிலூர் என்று பெயர் கொண்ட வேறு சில ஊர்களும் தமிழகத்தில் உள்ளன. என்றாலும் கோவிலூர் என்ற பெயருக்கு மிகவும் பொருத்தமானது இந்தக் கோவிலூரே! இது காரைக்குடியை ஒட்டி, காரைக்குடி—மதுரை பெருவழியில் உள்ளது; காரைக்குடியிலிருந்து ஒரு மைலே!

காரைக்குடியை கடந்து மேற்கெல்லையில் கால் வைத்ததுமே இரண்டு ரத கூடங்கள் நம்மைக் கவர்ந்து வரவேற்கும். அந்த ரத கூடங்களின் அழகை மாந்தி நாம் உள்ளே சென்றால், இருமருங்கிலும் அற்புதமான ரத மேருக்கள் நிலை பெற்ற ஒரு பெரிய வளைவு நம்மை நல்வரவு கூறிக் கம்பீரமாக நிற்கும்.

வளைவினுள்ளே நுழைந்து சென்றால், முதலில் நம் கண்களிற்படுவது கூத்தபிரான் திருமுற்ற மண்டபமும் அதன்மேல் உள்ள கோபுரமுமே! அதைக் கண்டு வணங்கிவிட்டு வலப்புறம் திரும்பினால் அழகே உருக் கொண்ட மைய மண்டபத்துடன் கூடிய மது புஷ்கரன் என்னும் திருக்குளம் தோன்றும். சென்ற மனத்தை மீட்க முடியாமல் சிறிது நேரம் அந்த அழகிலே மயங்கிச் சொக்கி விடுகிறோம்.

பிறகு எப்படியோ பறிகொடுத்த மனத்தை மீட்டுக் கொண்டு திருக்கோயிலை நோக்கு கிறோம். வியப்பு திகைப்பாய் மாறி அதன் அழகிலே ஈடுபட்டு மலைத்து நிற்கிறோம். எப்படியோ ஒருவாறாக தேறி உள்ளே சென்று பிராகாரங்களில், கோஷ்டங்களில், சந்நிதிகளில், மூர்த்திகளில், சிற்பங்களில், தூண்களில் காணப்படும் கட்டடக் கலை அருமைப்பாடுகளை சிறப்பை சிறப்பினை கண்களாற் பருகி இன்பக் கடலுள் மூழ்கி விடுகிறோம்.

இந்தக் கோவிலின் வரலாற்றை அறிய நம் மனம் அவாவுறுகிறது. நம்முடைய அதிர்ஷ்டம் விவரம் அறிந்த பெரியவர் ஒருவர் நம்மை நோக்கி வருகிறார். வகையாக வந்து நம்மிடம் சிக்கிக்கொண்டு விடுகிறார். கோவில் பற்றிய வரலாற்றைக் கேட்கிறோம்.

"வரலாற்று நெறிப்படி விளக்கவா? அல்லது புராண நெறிப்படி புலப்படுத்தவா?" என்று கேட்கிறார் அவர். நாம்சொல்லுகிறோம். "இருவழிப் பெருமையையும் அறிய ஆவலாயிருக்கிறோம்" என்று. "சரி அப்படியே ஆகட்டும், முதலில் புராண வரலாற்றைச் சிறிது கூறிவிட்டுப் பின்னர் வரலாற்று நிகழ்ச்சிகளைக் கூறுகிறேன்" என்கிறார்.

"ரொம்ப சரி ஐயா! மிக்க நன்றி!" என்று கூறிவிட்டு நாம் காதைத் தீட்டிக் கொண்டு கதை கேட்கத் தயாராகி விடுகிறோம். அவர் தொண்டையைக் கனைத்துக் கொண்டு கூறத் தொடங்கி விடுகிறார்.

"இந்த இடம் ஒரு காலத்தில் வன்னி மரங்கள், மண்டிய ஒரு பெருங்காடு. ஆதலால் இதை 'வன்னிவனம்', 'சமீவனக் க்ஷேத்திரம்' என்று கூறினர். நாற்புறமும், வளமான நெல் வயல் சூழ்ந்திருந்ததால், 'கழனி வாயில்', 'சாலிவாடி' என்னும் பெயர் பெற்றது. எல்லா வளங்களையும் ஏத்துவார் பெறுதலால் 'ஸ்ரீ வல்லபம்' என்ற பெயரும் இதற்குண்டு

இந்த ஆலயத்துப் பெருமானை, 'திரிபுவனேச்வரர்' என்றும் ராஜகட்க பரமேசவரர் என்றும் புராணம் கூறும். அதையே கொற்றவாளீசர்' என்பர். அம்மையை 'சாலிவரவீச்

வரி' என்றும் 'திருநெல்லையம்மன்' என்றும் போற்றுவர். எதிரேயுள்ள திருக்குளம் 'மது புஷ்கரணி' எனப் பெயர் பெறும்.

'மதுப்பிரியர் என்னும் ஒரு மகரிஷி பல காலம் இங்கே கடும் தவம் புரிந்து, அதன் பயனாக நான்முகனே வந்து தோன்றி அவருக்கு உபநிஷதங்களின் முழுப் பொருளையும் உபதேசித்ததாகப் புராணம் கூறுகிறது. இங்ஙனம் பிரமன் உபதேசித்த உபநிஷதங்கப் பொருள்களை பின்னர் அகஸ்தியர் மாமுனி சைமினி வழியாக உலகுக்குப் புலப்படுத்தினர். அதன் பயனாக மதுப்பிரியர் முதலான ரிஷிகள் இங்கு எழுந்தருளியுள்ள பெருமானை வணங்கி வழிபட்டு மோக்ஷ சாம்ராஜ்யத்தை அடைந்தனர். மதுபுஷ்கரணியில் முழுகி இறைவனை வழிபடுவோர் வேண்டிய பயனை அடைவர்' என்றும் அகஸ்தியர் கூறியுள்ளார்.

இவையெல்லாம் ஸ்கந்த புராணத்தின் க்ஷேத்ர காண்டத்தில் 'சமீவன மான்மியம்' என்ற பகுதியில் விரித்துரைக்கப் பெற்றுள்ளன.

"சௌனகாதி ரிஷிகள் கூடியிருந்து வேண்ட சூதக மாமுனிவர் இத்தல மகாத்மியத்தை சாங்கோபாங்கமாக எடுத்துரைத்துள்ளார். வடமொழியில் உள்ள இவற்றை மகாவித்வான் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள், 'கோவிலூர்ப் புராணம்' என்ற பெயருடன் ஆக்கியுபகரித்துள்ளார்."

"இனி வரலாற்று நிகழ்ச்சிகளைச் சுருக்கமாகக் கூறுகிறேன். இந்தக் கோயில் கி. பி. பத்தாம் நூற்றாண்டுக்கு முந்தியது. பத்தாம் நூற்றாண்டுக்கு முன் எப்பொழுது தோன்றியதென்பதை அறுதியிட்டுக் கூறத் தக்க சான்றுகள் ஏதுமில்லை. ஆதியில் ஒரு வன்னி மரத்தடியில் இந்தச் சிவலிங்கம் இருந்திருக்கிறது. இப்பொழுதுள்ள கோவில் சமீப காலத்தில் 19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தொடங்கப் பெற்று 20-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நிறைவேறியது.

"முற்காலத்தில் கழநிவாயில் என்று கூறப்பட்டது. இங்கு தனவணிகர்கள் நிரம்பியிருந்தனர். அவர்கள் வசித்த பகுதி ஏழகப் பெருந்தெரு என்றும், ஐந்நூற்றுவப் பெருந்தெருஎன்றும் கூறப்பெறும். இங்கே மிக்க வீரமும் கீர்த்தியுமுள்ள ஏழகப்படை இருந்தது. அதை வணிகர்கள் அமைத்துப் பேணி வந்தனர். ஒருநாள், பாண்டிய நாட்டை ஆண்ட, பேராற்றல் படைத்த மாமன்னரான வீரபாண்டியன் இப்பகுதிக்கு இப்படையின் வனத்தைக் காணவும், வேட்டையாடவும் வந்து புரவியின் மீது மரிந்து சுற்றித் திரிந்திருக்கிறான். அப்படி அவன் காட்டினுள்ளே வேட்டையாடித் திரிந்த காலத்தில் அவன் உடைவாள் எங்கோ தவறிவிட்டது! அது பட்டத்திற்குரிய கொற்ற வாள்; அது தவறிவிட்டதென்றால், மன்னன் மனம் பட்ட பாட்டைக் கேட்கவா வேண்டும்? ஏவலர் பலரும் நாலு திசைகளிலும் தேடித் துருவி ஓடி அலைந்தனர். வாள் கிடைக்கவில்லை. மன்னன் தானே தேடச் செல்கிறான். தன் குல தெய்வமான மீனாட்சி சுந்தரேசுவரரை வேண்டிக்கொண்டு செல்பவன் வாளைக் காணுகிறான். வாள் மட்டுமா? வாள் கிடக்கும் இடத்தில் ஒரு சிவலிங்கமும் கண்ணில் படுகிறது. சிவபக்தி மிக்க மன்னன் உள்ளம் குதூகலிக்க, உடல் புளகாங்கிதம் எய்த சிவனடியில் விழுந்து வணங்குகிறான்.

"என் கொற்றவாள் கிடைக்க அருளிய பெருமானே! உமக்கு இங்கே ஒரு கோவிலை எழுப்புவேன்; முறைப்படி வழிபாடுகள் நடக்கவும தக்க ஏற்பாடுகள் செய்வேன்" என்று கூறி வாளை எடுத்துக்கொண்டு தன் தலைநகரமாம் மதுரை செல்கிறான். சென்றதும் தன் அமைச்சர்களிடம் கூறி உடனே ஓர் ஆலயம் எடுப்பிக்கிறான். வழிபாட்டுக்காக இக்கோவிலைச் சுற்றியுள்ள நிலங்களைத் தேவதானமாக அளிக்கவும் ஆணை பிறப்பிக்கிறான்.

அரசன் ஆணை விரைவில் நிறைவேறுகிறது. திருவுண்ணாழி (கர்ப்பக்கிரஹம்) கட்டப் பெற்றுச் சிவலிங்கம் அங்கே கடவுண்மங்கலம் (பிரதிஷ்டை) ஆகிறது. இறைவன் பெயர் கொற்றவாளீசர் என்று பிரபலமாகிறது. வழிபாட்டுக்கு சிவாசாரியர் உள்பட எல்லாம் நியமனமாகிப் பல்லாண்டுகள் குறைவற யாவும் நடைபெற்றன. பின்னர் சோழர்கள் பாண்டி நாட்டைக் கைப்பற்றிக் கொண்டனர். வீரபாண்டியன் போரில் மடிகிறான். பாண்டியர் பலம் குன்றியதுடன், தமக்குள்ளேயே பகை

களிச் சண்டை கொண்டு ஐந்து பிரிவாகி இளைத்து மெலிந்து போனார்கள். ஆனாலும் சோழர்களால் கோவில் வழிபாடு முட்டுப்பட வில்லை.

ஆனால் பாண்டியர்களின் பூசலால் முஸ்லிம் கள் நாட்டில் நுழைந்ததும், எத்தனையோ கோயில்கள் நிலை தடுமாறிப் போயின. அந்த நிலையிலும் இந்தக் கோயில் எப்படியோ ஒரு காலப் பூசையாவது நடத்திக்கொண் டிருந்தது. குடிகளும், குருக்களும் நேர்மை யுடன் இருந்ததால் முற்றும் தட்டுக்கெட வில்லை.

இப்படியிருக்க சுமார் 180 ஆண்டுகட்கு மூன் ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஞானதேசிகர் என்னும் மகான் சிவாலய தரிசனத்திற்காகத் திங்கள் வெள்ளிக்கிழமைகளில் கோவிலூர் செல்லும் வழக்கமுடையவராயிருந்தார். ஒரு நாள் அவர் உள்ளத்திலே இக்கோயிலை இன் றுள்ளது போலப் புதிதாக அமைக்க வேண்டும் என்ற எண்ணம் அரும்பிற்று. அவரிடம் பக்தியும், மரியாதையும் மிக்க தனவணிகர்கள் ஆலயம் எழுப்பத் தாரராளமாக அறக்கொடை வழங்கினர். அக்காலத்திலேயே லட்சக் கணக் கில் பொருள் சேர்ந்தது. சுவாமிகள், தக்க ஸ்தபதிகளை ஏற்படுத்தித் தாங்களே முன் நின்று முழுநிறைவு வரைபடம் (Master Plan) தயாரித்துப் படிப்படியாகத் திருப்பணியை நிறைவேற்றி வந்தார்கள். அவர்கள் காலத்திற் குப் பிறகு 15-ஆண்டுகள் திருப்பணி சிறுகச் சிறுக நடந்துவந்து வீரசேகரஞான தேசிக சுவாமிகள் காலத்தில் திருப்பணி தீவிரமாக நடந்தேறியது. கோவில் மட்டுமின்றி திருக் குளம், மைய மண்டபம், திருவீதிகள், ரதமேருக்கள், ரத கூடங்கள், மடாலயம் முதலியவற்றையும் பசுமடம், வேத பாடசாலை முதலியவற்றையும் அற்புதமாக, நிறைவேற்றி பிற்காலத் திருப்பணிகளில் இணையற்ற ஒன்று என்று பாராட்டும்படி செய்து விட்டார்கள்.

தற்பொழுது கோவிலூர் ஆதீனகர்த்தராக உள்ள ஸ்ரீலஸ்ரீ இராமநாத தேசிக சுவாமிகள் எழுபது ஆண்டுகட்கு பிறகு இக் கோவிலையும் மற்ற அங்கங்களையும் முற்றிலும் பழுது பார்த்து செம்மையாக்கி வண்ணம் பூச்சி திருக்குட நீராட்டுச் செய்யத் திருவுளங் கொண்டார்கள். பரம்பரை அறங்காவலரான சிவகங்கை மன்னர் அனுமதியுடன் நகரத் தார்கள் பலரையும் அழைத்து விவரம் கூறினார் கள். திருப்பணிக் குழு ஒன்றையும் அமைத் தார்கள். நகரத்தார்கள் லட்சக்கணக்கில் சிவப் பணிக்காக வாரி வழங்கினர். ஸ்தபதிகளும் கொத்தனர்களும், தச்சர்களும் ஏராளமான பேர் பணியாற்றி கோவிலை முற்றிலும் புதுப் பித்து விட்டனர்.

21-4-78 வெள்ளிக்கிழமை கும்பாபிஷேகம் நடைபெறவுள்ளது. யாகசாலை தேவசபை போல பல்லாயிர ரூபாய் செலவில் அமைக்கப் படுகிறது. தமிழகத்தின் தலைசிறந்த சிவாசாரி யர்கள் வந்திருந்து 18-4-78 முதல் யாகப்பூசை நடத்துகிறார்கள். நான்கு நாட்கள் ஆறுவேளை வேள்வி சம்பிரமமாக நடைபெற எல்லா ஏற்பாடுகளும் செய்யப் பெற்றுள்ளன வேத பாராயண கோஷ்டி, நாதஸ்வரக் கோஷ்டி கதாகாலக்ஷேபம் சொற்பொழிவுகள், பட்டி மண்டபம், வழக்காடு மன்றம், எல்லாம் ஏற்பாடு செய்யப் பெற்றுள்ளன.

இரவு திருக்கல்யாண உற்சவம், தெப்ப உற்சவம், பஞ்சமூர்த்தி திருஉலாக்காட்சி எல் லாம் கோலாகலமாக நடைபெறவுள்ளன. ஆல் இந்தியா ரேடியோ கும்பாபிஷேகத்தை நேர் முக வர்ணனை செய்கிறது. அதை 21-4-78 வெள்ளிக்கிழமை காலை 9-15 மணி முதல் 10-30 வரை கேட்கலாம். தொலைக் காட்சியிலும் இதைப் படம் பிடித்து (டெலிவிஷனில்) காட்ட ஏற்பாடு செய்துள்ளார்கள்.

"இவ்வளவு சிறப்பாக சாஸ்திரோக்தமாக நடைபெறும் இந்தக் கும்பாபிஷேகத்தைக் காணாத கண் என்ன கண்ணே! என்றுதான் சொல்வேன்" என்று முடித்தார் அந்தப் பெரி யவர். நாம் அவருக்கு நன்றிப் பெருக்குடன் வணக்கம் கூறி விடை பெறுகிறோம்.

நாம் எல்லாம் இவ்வளவு சிறப்பாக நடை பெறும் கும்பாபிஷேகத்தினைக் கண் களிக்கக் கண்டு, காதினிக்க பல நிகழ்ச்சிகளையும் கேட்டு மனம் மகிழ இறைவனையும் இறைவியையும் வழிபட்டு இம்மை மறுமைப் பயன்களைப் பெற்று உய்வோமாக!

—தினமணி சுடர்
17-4-1978

# கோவிலூரில் நகரத்தார் அறங்கள்

## கொற்றவாளீசுவரர் - திருநெல்லையம்மன் கோயில் திருப்பணிக்கு

| | ரூ. |
|---|---|
| 1818 முதல் 1847 வரை கோவிலூர் ஆண்டவர் முத்துராமலிங்க ஞான தேசிகர் காலத்தில் அன்றைய விலை மதிப்புப்படி | 1,00,000 |
| சிதம்பர ஐயா காலத்தில் அக்காலத்து விலைவாசிப்படி | 70,000 |
| வீரப்ப சுவாமிகள் என்ற திருக்களர் ஆண்டவர் காலத்தில் (1884-1911) அக்காலத்து விலைவாசி நிலவரப்படி (23–4-1908ல் குட நீராட்டு வரை) | 10,00,000 |
| கோட்டையூர் மு. சி. குடும்பத்தார் யசுர் வேத பாடசாலை | 50,000 |
| அரிமளம் அ. செ. சு. குடும்பத்தார் சாமவேத சாத்திர பாடசாலை | 20,000 |
| வேதாந்த மடத்துக்கு கோவிலூர் ஆண்டவர் முத்துராமலிங்க ஞான தேசிகர் காலத்தில் | 3,00,000 |
| காரைக்குடி சு. ராம. குடும்பத்தார் நந்தவனம் | 5,000 |
| காரைக்குடி ப. முரு. பொதுக் குடும்பத்தார் குடி தண்ணீர்க்குளம், பிள்ளையார் கோவில், நந்தவனம் | 30,000 |
| காரைக்குடி ராம. மு. குடும்பத்தார் பசுமடம் | 10,000 |
| காரைக்குடி அ. முத்துக்கருப்பன் செட்டியார் தேனாற்றின் குறுக்கே பாலம் கட்ட | 5,000 |

(குறிப்பு : மேற்கண்ட விவரங்கள் வயிநாகரம் அ. இராமநாதன் செட்டியார் அவர்கள் தொகுத்து மகாமகோபாத்தியாய பண்டித மணி மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் திருத்தி அமைத்து, சென்னையின் முன்னாள் மேயர், திரு. ஆர். இராமநாதன் செட்டியார் அவர்கள் 1953-ல் வெளியிட்ட நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு என்னும் நூலிலிருந்து எடுக்கப்பெற்றவை)

1977-78ல் திருப்பணிச்செலவு ரூ. ஐந்து லட்சம்.

இந்த ஊரின் வாயிலாக உள்ள இடத்தில் நெடுஞ்சாலை ஓரமாக நீண்டு உயர்ந்த கவினுறு தூண்களுடன் கூடிய இரு முகப்புக் கோபுரங்கள் இருந்தன. புயல் காற்றின்போது அவை இடிந்துவிட்டன. கோட்டையூர் அ. க. அ. சித. அழ. சிதம்பரம் செட்டியார் அவர்கள் அவற்றைக் கான்கிரீட் கம்பிபோட்டு உறுதியாகப் புதுப்பித்துக்கொடுத்தார்கள். இந்தக் கோபுரங்கள் பரிதாபி ஆண்டு ஐப்பசித் திங்கள் ஒன்பதாம் நாள் 25–10-1972ல் சிவகங்கை அரசர் அவர்கள் தலைமையில் செட்டிநாட்டரசர் டாக்டர் ராஜா சர். முத்தையா செட்டியார் அவர்களால் திறந்துவைக்கப் பெற்றன.

கோவிலூர் ஆதீனத்தில் உள்ள பெரிய மண்டபம் (கயிலாசக் கொட்டகை) தான் 96 ஊர்க் கூட்டங்கள் நடைபெறும் இடம்; இந்த மண்டபத்தின் தளத்தையும் சிதம்பரம் செட்டியார் அவர்கள் 1975ல் சீர் செய்து புதுப்பித்துக் கொடுத்திருக்கிறார்கள்.

1977ல் தொடங்கிய கொற்றவாளீசுவரர்- திருநெல்லை அம்மன் திருப்பணி, 1978ல் நடைபெற்ற கும்பாபிஷேகம் ஆகியவற்றிலும் இவர்கள் மிகவும் ஈடுபட்டு, பொறுப்பாகக் கவனித்து இப்பணிகள் இனிது நிறைவேற எல்லா வகையாலும் உதவியுள்ளார்கள். ○

# 1978-கும்பாபிஷேக நிகழ்ச்சிகள்

கும்பாபிஷேக ஏற்பாடுகள் சில மாதங்களுக்கு முன்பிருந்தே தொடங்கப்பெற்று சிறப்பாகச் செய்யப் பெற்றன.

கோயிலுக்கும் அதன் வாயிலில் உள்ள தெப்பக்குளத்துக்கும் வடபால் யாகசாலைக் கொட்டகை அமைக்கப் பெற்றது. கிழக்குக் கோடியில் கொற்றவாள் ஈசுவரர்க்கும் திருநெல்லை நாயகிக்கும் நவகுண்ட பட்ச யாகசாலை அமைக்கப் பெற்றது. 8 யானைகள் தாங்க ஆதி சேடனுல் அமைந்த ஆனந்த ஆசனமும் அதன் மேல் 8 சிம்மங்கள் தாங்கிய சிம்மாசனமும் அதன்மேல் 4 பீடங்கள் தாங்கிய ஏக ஆசனமும் வாமாதி சக்திகள் வடிவான பத்மாசனமும் ஒளிமயமான விமல ஆசனமும், அமைந்த பஞ்ச ஆசன வேதிகை சுவாமிகளுக்கும் தேவதைகள் விவரமாகத் தெரியும்படி அமைந்த மேரு பிரஸ்தார ஸ்ரீ சக்கர வேதிகை அம்பாளுக்கும் அமைக்கப் பெற்றன.

மேற்கண்ட யாகசாலைக்குப் பின்னுல் (மேற்கில்) கயிலாசநாதர் நித்ய கல்யாணி அம்மனுக்கு ஏக குண்ட யாகசாலையும், விநாயகர், சுப்பிரமணியர், சுவாமி—அம்மன் விமானங்கள், மூன்று இராசகோபுரங்கள், பரிவார தேவர்கள், நவக்கிரகங்கள் ஆகியவற்றிற்குத் தனித்தனி யாகசாலைகளாக மொத்தம் 12 அமைக்கப் பெற்றன.

தெப்பக்குளத்துக்கு மேற்கே கோவிலூர் மடாலயத்துக் கட்டிடங்கள் ஓரமாக, ஆண்டவர் கோயில் கும்பாபிஷேகத்திற்காக யாகசாலை அமைக்கப் பெற்றது.

இதில் சீதாச்சார பத்ம ஆசன வேதிகை ஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவருக்கும் துறவு ஆண்டவருக்கும் கருணாநிதி சுவாமிகள் கணபதி ஆகியோர்க்குத் தனித்தனி யாகசாலைகளும் கொண்ட அலங்காரக் கொட்டகை ஒன்று அமைக்கப் பெற்றது.

மேற்கண்ட யாகசாலைகள் யாவும் திருவாடானை சிவ ஆகம சிரோமணி சேது சமஸ்தான ஆகம வித்துவான் ஐயாமணி சிவம் அவர்களால் அமைக்கப் பெற்றன. தமிழ் நாடு முழுவதிலும் இருந்தும், ஒழுக்கமும் புலமையும் நிறைந்த சிவாச்சாரியர்கள் வந்திருந்து வேதங்களை ஓதினர்.

அப்போது அறநிலையத்துறை ஆணையராக இருந்த திரு. எம். கே. பாலசுப்பிரமணியம் I. A. S. அவர்களும், இராமநாதபுரம் அரசர் திரு. எஸ். இராமநாத சேதுபதி அவர்களும் 'தினமணி' ஆசிரியர் திரு. ஏ. என். சிவராமன் அவர்களும் ஏராளமான ஆடவரும் பெண்டிரும் யாகசாலைக்கு வந்திருந்தனர்.

பாண்டிய மன்னர்களால் நகரத்தார்களுடைய குருபீடமாக நியமிக்கபெற்ற கலாமடம், பாதரக்குடி இரண்டு மடங்களும் இணைந்து அவற்றின் மடாதிபதியாக இப்போது இருக்கும் ஸ்ரீ ரவீந்தர் என்ற காமாட்சி சுந்தர தேசிக சுவாமிகளும் வந்திருந்தார்கள்.

ஸ்ரீ-ல-ஸ்ரீ திருச்சி சுவாமிகளும், பல மடங்களின் தலைவர்களும் 200க்கு மேற்பட்ட துறவிகளும் யாகசாலை நிகழ்ச்சிகளுக்கும் கும்பாபிஷேகத்திற்கும் வந்திருந்தனர்.

யாகசாலை அலங்காரக் கொட்டகைகள் முதலியவற்றை இவ்வகையில் பரம்பரையாகப் புகழ் பெற்ற காண்டிராக்டர் மாயூரம் தரங்கம்பாடிச்சாலை கொத்தர் தெரு வை. சாமிநாதன் மிக அழகாக அமைத்துக் கொடுத்தது குறிப்பிடத் தக்கது.

யாகசாலையில் மின்சார அலங்கார விளக்குகளையும் கோவிலூர் முகப்பு வாயில் முதலியவற்றில் வியத்தகு வண்ண ஒளி விளக்குகளையும் திண்டுக்கல் அங்கு விலாஸ் M.V.M.

Firm-முதலாளி திரு. அங்குமுத்துப்பிள்ளை அவர்கள், அவர்கள் தம்பி செல்லமுத்துப் பிள்ளை அவர்களுடைய மேற்பார்வையில் செய்து கொடுத்தார்கள்.

இத்தகைய அறச்செயல்களை இவர்கள் தங்கள் உபயமாகச் செய்துவருவது பாராட்டுக் குரியது. திரு. செல்லமுத்துப்பிள்ளை அவர் களும் தொழிலாளர் 25 பேரும் பல நாட்கள் முன்னதாகவே கோயிலூருக்கு வந்து தங்கி யிருந்து இந்த ஏற்பாடுகளைப் பலரும் பாராட்டும் வண்ணம் செய்தார்கள்.

ஃ ஃ ஃ

19—4—78 புதன்கிழமை மாலையில் வழக்காடு மன்றம் நடைபெற்றது. 'வீடணன் செயல்கள் நியாயமன்று, என்று, திரு. ஆ. செகநாதன் எம். ஏ. தொடுத்த வழக்கை திரு. இரா. செல்லக் கணபதி மறுத் தார். திரு. சத்தியசீலன் நடுவராக இருந் தார். அன்றிரவு திருமதி, சிவானந்த சரசுவதி அவர்கள் "அப்பனுக்கு அம்மை" என்ற தலைப்பில் இசையோடு கூடிய உரை நடத் தினார்கள்.

20—4—78 வியாழக்கிழமை மாலையில் "செயற்கரிய செய்து சிறந்தவர் யார்?" என்ற தலைப்பில் ஒரு பட்டி மன்றம் ஏற்பாடு செய்யப் பெற்றது. சிறுத் தொண்டரே என்ற அணியில் திரு. சொ. சொ. மீ. சுந்தரம் எம். காம். அவர் களும், திரு. சோம. இளவரசு பி. லிட், அவர் களும் திரு. பயு ஆய்யூப் அவர்களும் வாதாடினர். 'இயற்பகையாரே' என்ற அணி யில் டாக்டர் சுப. அண்ணாமலை எம்.ஏ.பி எச்.டி. அவர்களும், திரு. அரு. நாகப்பன் அவர் களும், திரு. ச. மெய்யப்பன் எம். ஏ. அவர் களும் வாதாடினர். இயற்பகையாரே சிறந்தவர் என்று, நடுவர், கோவை. கௌமார மடாலயம் மடாதிபதி தவத்திரு. சுந்தர சுவாமிகள் தீர்ப்பு வழங்கினார்கள்.

மேற்படி பட்டி மன்றத்தின் இறுதி நிகழ்ச்சியாக திரு. சொ. சொ. மீ. சுந்தரம் அவர்கள் எழுதிய "ஆண்டவனும் ஆண்ட வரும்" என்ற நூல் வெளியிடப் பெற்றது. கோவிலூர் ஆண்டவரைப் பற்றி 32 பக்கங் களில் இயற்றப் பெற்ற விவரமான பயனுள்ள நூல் இது. பாகனேரி (1) உயர் திரு. அரு. கி. கிருஷ்ணன் செட்டியார் அவர்கள் (2) திருமுறைப் புரவலர். இராம. முத்தும் பழனியப்பச் செட்டியார் அவர்கள் ஆகிய மெய்யன்பர் இருவரும் இந்நூலை அச்சிட்டு இலவசமாக வழங்கினார்கள்.

மேற்கண்ட அன்பர்கள் தங்கள் உபய மாகத் தமிழ் நாட்டில் நடைபெறும் முக்கிய மான கும்பாபிஷேகங்களில் எல்லாம் சிறந்த ஓதுவார்களை வரவழைத்து அவர்களைக் கொண்டு தேவாரப் பதிகங்கள் பாட எல்லா ஏற்பாடுகளும் செய்து வருவதை அனைவரும் அறிவர். இந்தக் கும்பாபிஷேகத்திலும் இப்பணியைச் செய்தார்கள். சித்திரை 5 முதல் (18—4—78) சித்திரை 8 (21—4—78) வரை அடியிற்கண்ட திருமுறை வாணர்கள் திருமுறைப் பணி செய்தனர்.

திருமுறை திலகம் கலைமாமணி தருமபுரம் சுவாமிநாதன் அவர்கள்

தமிழ் மறை இன்னிசைப் பண்மணிகள் T. M. விஸ்வலிங்கம் சபாபதி சகோதரர்கள்

தேவார இசைவாணர் து. சோமசுந்தர தேசிகர், திருவாவடுதுறை ஆதீனம்

தேவார இசைச் செல்வர் P. A. S. ராஜ சேகரன் அவர்கள் சென்னை.

திருமுறைச் செல்வர் மு. குமாரசாமி தேசிகர்

ஸ்வரராக திருமுறை இசைப் பேரரசு திருக்களர், T. இரத்தின சபாபதி தேசிகர், புதுவயல்.

திரு. T. R. நாராயண ஓதுவார்— காரைக்குடி.

திருப்புறம்புயம், திரு. கல்யாணசுந்தரம் மிருதங்கம், திரு. S. சுப்பிரமணிய தேசிகர், திருக்கோகர்ணம் மிருதங்கம்

இசை ரத்தினம் சங்கீத பூஷணம். திரு. S. A. கோபாலன், திருப்பனந்தாள்—புல்லாங் குழல்

திரு. V. சங்கர நாராயண பாகவதர், மதுரை—பிடில்

திரு. T. R. கிருஷ்ணன், குடந்தை —பிடில்

20—4—78 வியாழக்கிழமை இரவு "பார்வதி திருமணம்" என்ற தலைப்பில் திருமுருக. கிருபானந்தவாரியார் சுவாமிகள் இசையுரை நிகழ்த்தினார்கள்.

21—4—78 சித்திரை 8—வெள்ளிக் கிழமை காலை எட்டு மணிக்கு ஆண்டவர் கோயில் கும்பாபிஷேகம் நடை பெற்றது.

அன்று காலை 10–மணிக்கு ஒரு லட்சம் மக்கள் முன்னிலையில் அருள்தரு திருநெல்லை அம்மன் உடனுறை. அருள்மிகு கொற்றவாளீசர் கோயில் கும்பாபிஷேகம் சீரும் சிறப்புமாக நடை பெற்றது. விவரம் வானொலி வருணனையில் காண்க. நிகழ்ச்சி சென்னை டெலிவிஷன் நிலையத்தாரால் தொலைக் காட்சியிலும் காட்டப் பெற்றது.

அன்று பிற்பகலில், யாக சாலையில் பயன் படுத்தப் பெற்ற பொருள்கள் ஏலம் போடப் பெற்றன.

மாலையில் மகாபிஷேகம் நடைபெற்றது. மதுரைலட்சுமி பேப்பர்ஸ்டோர் உரிமையாளர் நெற்குப்பை மு. சிங்காரம் செட்டியார் அவர்கள் தங்கள் உபயமாக மகாபிஷேகத்தைச் சிறப்பாக நடத்திவைத்தார்கள். அந்த நாள் அவர்களுடைய பிறந்தநாளாக (ஜென்ம நட்சத்திரமாக) இருந்தது குறிப்பிடத்தக்கது.

அதன் பின்னர் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் தலைமையில் புலவர் மணி N. S. சுந்தரராமன் அவர்கள் உரை நிகழ்த்தினார்கள்.

அன்றிரவு திருக்கல்யாண உற்சவம் நடைபெற்றது. அந்த நாள் மதுரையில் மீனாட்சி திருக்கல்யாண நாளாகவும் இருந்தது சாலப் பொருத்தமாக அமைந்தது.

பின்னர் இரண்டு லட்சத்திற்கு மேற்பட்ட மக்கள் கூடியிருந்து தெப்ப உற்சவத்தையும், ஐம்பெருங்கடவுளர் திருவீதி உலாவையும், கண்டு களித்தனர்.

தெப்பத்தின் அழகு பற்றி தனியே ஒரு கட்டுரை வெளியிடப் பெற்றுள்ளது. தெப்ப உற்சவத்தில் வாகன அலங்காரம், திருக்கல்யாண ஏற்பாடு, ஐம்பெருங்கடவுளர் புறப்பாடு ஏற்பாடுகள் ஆகியவை தேவகோட்டை. சு. மு. மு. சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள், உ. மு. சுப. லெ. மெய்யப்ப செட்டியார் அவர்கள் ஆகியோருடைய சிறந்த மேற்பார்வையில் நன்றாகச் செய்யப் பெற்றன.

தெப்ப உற்சவம் நடை பெறுவதற்கு கோட்டையூர் அ. க. அ. சித. அழ. சிதம்பரம் செட்டியார் அவர்களும் காரைக்குடி அ. சொ. அண்ணாமலைச் செட்டியார் அவர்களும் ஆ. தெற்கூர் கருமுத்து தி சு. சொக்கலிங்கம் அவர்களும் உதவினர்.

ஐம்பெருங்கடவுளர் திருவீதியுலாவின் போது திருமெய்ஞானம் நடராஜசுந்தரம் குழுவினரும், முத்துப்பேட்டை சண்முக சுந்தரம் குழுவினரும் நாதஸ்வரமும் ஹரித்துவார மங்கலம் பழனிவேலு, கோவிலூர் ராமலிங்கம் இருவரும் சிறப்புத் தவுலும் வாசித்தார்கள்.

பட்டிமன்றம், விரிவுரைகள், இசை நிகழ்ச்சிகள் முதலியவற்றுக்கான ஏற்பாடுகளை காரைக்குடி நவயுகப் பிரசுராலயம் திரு. மெய்யப்பன் அவர்கள் சிறப்பாகச் செய்திருந்தார்கள்.

காரைக்குடி ஆ. வி ப. பொதுக் குடும்பத்தார் தண்ணீர்ப் பந்தல் அமைத்து உதவினர்.

நாட்டரசன் கோட்டை பாரத பாரதி சாரணப் படையினர் நான்கு நாட்களிலும் மக்கள் கூட்டத்தை ஒழுங்குபடுத்தி, நிகழ்ச்சிகள் யாவும் இடையூறு இன்றி நடைபெற உதவினர்.

யாகசாலை ஏற்பாடுகளை, கம்பன் அடிப்பொடி அவர்கள் தலைமையில் பல அன்பர்கள் சிறப்பாகச் செய்தார்கள்.

நகரவிருந்து ஏற்பாடுகளை, கண்டனூர் ஸ்டார் அருணாசலம் செட்டியார் அவர்களும், உணவு ஆக்கும் பணியை மேற்பார்வை செய்யும் பொறுப்பை, காரைக்குடி நகர்த்தார் அவர்




# கருணைநிதி சுவாமிகள்

என்ற

## ஸ்ரீ-ல-ஸ்ரீ சிதம்பர ஞான தேசிகர் அவர்கள்



ஸ்ரீ-ல-ஸ்ரீ இராமசாமி
ஞான தேசிக சுவாமிகள் அவர்கள்



திருக்களர் ஆண்டவர்
என்ற
ஸ்ரீ-ல-ஸ்ரீ வீரசேகர ஞானதேசிக
சுவாமிகள் அவர்கள்




ஸ்ரீ-ல-ஸ்ரீ அண்ணாமலை
ஞான தேசிக சுவாமிகள்
அவர்கள்

களும் துறவிகளுக்கு உணவு படைப்பதற்கான ஏற்பாடுகளை தேவகோட்டை ராம. லெ. ராம. லெ. லெட்சுமணன் செட்டியார் அவர்களும் கவனித்தார்கள்.

மருந்து சாத்தும் ஏற்பாடுகள் தேவ கோட்டை அ. ராம. அ. லெ.முவீ. முத்துவீரப்ப செட்டியார் அவர்களுடைய சீரிய மேற்பார் வையில் நடந்தன.

பிற பணிகளை ஏராளமான அன்பர்களும் குழுக்களும் செய்தனர். இடமின்மையால் அவர்கள் பெயர் கொண்ட பட்டியலை இங்கு வெளியிடவில்லை.

திருப்பணி வேலை ஓர் ஆண்டுக்கு முன்ன தாகத் தொடங்கியது. திருப்பணிச் செலவு, கும்பாபிஷேகச்செலவு, கோயிலுக்குள் புதிதாக மின்சார விளக்குகள் போடுவது ஆகியவற்றுக் காக ரூ. 5 லட்சம் செலவிடப் பெற்றது. இந்தத் தொகையை அன்புடன் வழங்கியவர் களின் நல் உள்ளங்களைப் போற்றுகிறோம், பாராட்டுகிறோம். அவர்களுக்கு இறையருளால் எல்லா நலங்களும் உண்டாவதாக.

திருப்பணிக் குழுத் தலைவர் கோட்டையூர் சிதம்பரம் செட்டியார் அவர்கள் ஓர் ஆண்டாக இந்தப் பணியில் காட்டிய ஆர்வமும், துணைத் தலைவர் உயர்திரு. காரைக்குடி அ. சொ. அண்ணாமலைச் செட்டியார் அவர்களுடைய அக்கறையும் பாராட்டுதற்குரியன. காரைக்குடி மு. மெ. முத்துராமன் செட்டியார் அவர்கள் அரும்பாடு பட்டு ஓர் ஆண்டு முழுதும் அல்லும் பகலுமாக உழைத்தது குறிப்பிடத்தக்கது.

திருப்பணி செய்ய வேண்டும் என்ற எண்ணம் உண்டானதும் அதை வரவேற்று, ஆர்வம் காட்டி திருப்பணி நிதி வசூலில் மற்ற வர்களோடு ஈடுபட்டு ஒத்துழைத்த தேவகோட் டை ஜமீன்தார் காலஞ் சென்ற அழ. அரு. சோமநாதன் செட்டியார் அவர்களை இந்த நாளில் நன்றியுடன் நினைக்கிறோம். பொது வாகக் கோவிலூர் மடத்துக் காரியங் களில் 30, 40 ஆண்டுகளாக அவர்கள் கொண் டிருந்த அக்கறையையும் போற்றிப் பாராட்டு கிறோம்.

கீழ்க்கண்ட அன்பர்களும் பலமுறை கோவிலூருக்கு வந்தும், வெளியூர்களில் ஆக வேண்டிய வேலைகளைக் கவனித்தும், செய்த பணியை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

கண்டர மாணிக்கம் லெ. அழகுசுந்தரம் செட்டியார் அவர்கள், தேவகோட்டை. அ. ராம. அலெ. முவீ. முத்து வீரப்பச் செட்டியார் அவர்கள், காரைக்குடி கம்பன் அடிப்பொடி அவர்கள், காரைக்குடி மெ நா. சித. சிதம்பரம் செட்டியார் அவர்கள், பாகனேரி கிருஷ்ணன் செட்டியார் அவர்கள், பாகனேரி முத்துப் பழனிப்ப செட்டியார் அவர்கள், நெற்குப்பை மு. சிங்காரம் செட்டியார் அவர்கள் மற்றும் பலர்.

மண்டலாபிஷேகம் வரை 45 நாட்களுக்கு நாள் ஒன்றுக்கு ரூ 150/ வீதம் ஏற்படும் செலவு களை ஏற்றுக் கொள்ளப் பல அன்பர்கள் முன் வந்தனர். அவர்களுக்கும் நம் நன்றி உரியது.

கோவிலூர் ஆதீனத்தின் இளையபட்டம் ஸ்ரீ-ல-ஸ்ரீ-அரு. இராமநாத சுவாமி அவர் களும், ஏனைய துறவிகளும், ஊழியர்களும் செய்த பணி மிகப் பெரிது.

ஆதீனகர்த்தர் ஸ்ரீ-ல-ஸ்ரீ இராமநாத ஞான தேசிகர் அவர்கள் தங்களுடைய முதிர்ந்த வயதையும் உடல் நிலையையும் பொருட்படுத் தாது இரண்டாண்டுக் காலமாகப் பல இடங் கட்குச் சென்றும், திருமடத்திலே தங்கியும், அல்லும் பகலுமாகத் திருப்பணி, கும்பாபி ஷேக வேலைகளை இணைத்தும், வேலை செய்பவர் களுக்கு வழிகாட்டியும் செய்த பணி ஈடும் இணையும் இல்லாதது. அவர்களுடைய அருளாட்சி நீடித்துக் கோவிலூர் ஆதீனம் மேன்மேலும் சிறப்படைய அருள்தரு திரு நெல்லை நாயகி அம்மன் உடனுறை அருள்மிகு கொற்றவாளீசுவரை வாழ்த்தி வணங்கு கின்றோம்.



# அழகிய தெப்பம்

அ. சம்பந்தம் செட்டியார், அரிமழம்

தென்னை மரங்களால் சூழப் பெற்றதும் நடுவில் அழகிய மைய மண்டபம் உடையது மான பெரிய பொற்குடையான் ஊருணி அரிமழத்தின் சிறப்பைக் கூடச் செய்து கொண்டிருக்கிறது. அவ்வளவு பெரிய ஊருணியை சுமார் 250 ஆண்டுகட்கு முன்னர் கா. ச. வகையார் வெட்டிக் கட்டச் செய்துள்ளார்கள். அந்த அழகிய ஊருணியில் தெப்பம் விட வேண்டும் என்ற எண்ணம் 1918-ம் ஆண்டு கா. ச. சந்ததியார்க்ட்கு உண்டானது.

பல ஊர்களிலுள்ள தெப்பங்களையும் சென்று பார்த்ததில் அரியக்குடி, பெரிய கோயில், திருச்செந்தூர் தெப்பங்களே சிறியன வாக இருப்பினும் அழகியவை என்று தெரிந்தது. அவைகளைச் செய்த சிற்பியின் விவரம் அறிந்து திருநெல்வேலி மாவட்டம் வீரவநல்லூர் சென்று சிற்பியான சாமி ஆசாரியாரை அழைத்து வந்து ஊருணிக் கேற்ப பெரியதான தெப்பம் செய்யப் பணித்தார்கள். தெப்பம் செய்ய முயன்றவர்கள் ச. ராம. முத்தக்சருப்பன் செட்டியரா், சி. ச. ராமன் செட்டியார், அழ. ராமன் செட்டியார், மற்றும் சிலர்.

தெப்பத்திற்கான மதகரி வேம்பு போன்ற குறிப்பிட்ட மரங்களை வாங்கச் செய்தும் தச்சு வேலைக்கான உயர்தர ஆயுதங்கள் வாங்குவதற்காக சிற்பியே சென்னைக்கு நேரே சென்று வந்தார்கள். அரிமழத்தில் பிரபலமாக அன்று திகழ்ந்த தச்சு மேஸ்திரி ஆசாரியார்களை வரவழைத்து தெப்ப வேலை தொடங்கினார்கள்.

அதிகாலை நீராடிப் பூசை முடித்து சிற்றுண்டிக்குப் பிறகு முதிய சிற்பியான சாமி ஆசாரியாரவர்கள் தெப்ப வேலைக் கூடத்திற்கு வந்து ஒரு நாற்காலியில் இருந்துகொண்டு மாதிரிச் சிலாகை கொடுத்து அதுபோல 50, 100 என்ற கணக்கில் செய்ய மற்ற ஆசாரியர்கட்குப் பணித்தார்கள். சிற்பி சொன்னது போலவே சிலாகைகள் தூண்கள் பலகைகள் செய்து குவித்த மற்ற மேஸ்திரி ஆசாரிகட்கு முழுமையாக தெப்பம் கோர்வை செய்யும்போதுதான் அதை நிர்மாணித்த சிற்பியின் திறமையைப் புரிய முடிந்தது. கற்கோயில் நிர்மாணிக்கும் சிற்பியேபோல் மரக்கோயிலை வீரவநல்லூர் சிற்பி செய்துள்ளார்.

தெப்பம் கோர்வை செய்வதற்கான முறையில் ஒவ்வொரு பகுதிக்கும் எண்கள் அடையாளங்கள் குறிப்பிட்டும் தெப்பம் கோர்வை செய்கிற முறையை வேலை செய்த மேஸ்திரி ஆசாரிகட்கும் நிர்வாகிகளில் சிலருக்கும் சிற்பியே தெரிவித்தார். எண்கள் அடையாளங்களை பார்த்து கோர்வை செய்வது கவனமுடையவர்கட்கு மட்டும் எளிதாக இருந்தது. ஒரு பகுதி மாற்றி விடினும் திரும்பவும் பிரித்து கோர்வை செய்கிற சிரமத்தை தற்போது அனுபவித்து வருகிறோம். கோர்வை செய்வதை தெரிந்தவர்களில் ச. அ. சடையப்ப செட்டியார் என்ற ஒரு பெரியவரே தற்போது தெப்பம் சேர்க்க உதவுகிறார்கள்.

கொல்லு வேலையில் திறமையாக அன்று விளங்கிய முத்தன் ஆசாரியார் கூடத்தின் பக்கமே பட்டறை யமைத்து இரும்பு வேலைகளைச் செய்து உதவினார்கள். வர்ண வேலையை காரைக்குடி ராஜுவும் அரிமழம் சாமிநாதன், தாதப்பெருமாள் முதலியோர் செய்து உதவினர். 59 ஆண்டுகட்குப் பிறகும் சிறந்த நிலையிலேயே இருக்கும்படியாக பணி புரிந்த அந்தச் சிற்பிகள் எல்லோருக்கும் நமது பணிவான நன்றி உரியதாகும்.

காலனைக் காலாற் சாடி பக்த மார்க்கண்டேயரைக் காப்பாற்றிய கால சம்ஹார மூர்த்தி சந்நிதி திருக்கடவூரிலே உள்ளது. சம்பந்தர், அப்பர், சுந்தரர் மூவருமே அதைப் பாராட்டியுள்ளனர். பக்தர்கள் தமது 59 ஆண்டுவிழாவை திருக்கடவூரிலே கொண்டாடி தமது ஆயுளை நீட்டிக் கொள்வதைக் காணுகிறோம். அது போலவே இன்பம் துன்பம் இரண்டிலும் சமநோக்கு கொள்கிற எண்ணம் தோன்றும் போது செட்டிநாட்டு பக்தர்கள் இருவினையொப்பு நாடி கோவிலூருக்குச் செல்வதும் இயல்பு. அரிமழம் அழகிய தெப்பமும் அதன் 59ம் ஆண்டை காரைக்குடிக் கோவிலூரிலே 21-4-78 தெப்பவிழாக் காட்சி கொடுத்துச் சிறப்பித்தது. அடுத்து வரும் சித்தார்த்தி ஆண்டு சித்ரா பவுர்ணமிக்கு மறுநாள் அரிமழம் பெரிய பொற்குடையான் ஊருணியில் நடைபெற இருக்கும் 60-ம் ஆண்டுவிழா தெப்பவிழாவிற்கு வருகை தந்து ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசர் திருவருளைப் பெறுமாறு பக்தர்களை அழைக்கிறோம். ★

திருச்சி வானொலியிலிருந்து நேர்முக வர்ணனை

# கோவிலூர் அருள்தரு திருநெல்லையம்மன் உடனமர் அருள்மிகு கொற்றவாளீசர் ஆலயத் திருக்குட நன்னீராட்டு விழா

*பள்ளத்தூர் சீதாலட்சுமி ஆச்சி கல்லூரி*
**பேராசிரியை சரசுவதி இராமநாதன் அவர்கள் உரை**

காரைக்குடியிலிருந்து மதுரை செல்லும் சாலையில் மேற்கில் ஒரு கல் தொலைவில் வழியெங்கிலும் மக்கள் கூட்டம்! விரைந்து முன்னேறும் எறும்புக் கூட்டங்கள்போல அவர்கள் வந்துகொண்டிருக்கின்றனர். இரண்டு பக்கமும் இரண்டு கண்கவர் ரதகூடங்கள் அவர்களை வரவேற்கின்றன. தஞ்சை மாவட்டமா என்று வியக்குமளவு இராமநாதபுரத்தில் வளமிக்க பகுதியாக, அழகோடு விளங்கும் கழனிவாயில் என்னும் கோவிலூர் குடநீராட்டு விழாக் காணத்தான் மக்களுக்கு எத்துணை ஆர்வம்; கொதிக்கும் கதிரவனைக் கூடப் பொருட்படுத்தாது விரைந்து வரும் அவர்களை ரத மேருக்களுடன் கூடிய வளைவு உள்ளே ஈர்க்கிறது. உருவேனிற் பரிவு அகற்றும் அழகிய தெப்பக் குளம்—மைய மண்டபத்தின் கண்கவர் வனப்பு, நடராஜர் சந்நிதியின் முகமண்டபம் உயர்ந்தோங்கிய அழகிய கோபுரங்கள், தெற்குக் கோபுரத்தின்கண் அமைந்த அழகிய சுதை வேலைப்பாடுகள், வலதுபுறம் காட்சிதரும் கோவிலூர் மடாலயம் இவற்றைச் சூழ்ந்து கொண்டு நிற்கும் ஆயிரக்கணக்கான பக்தர் குழாம்! ஆகா! கண் கொள்ளாக் காட்சி!

குளத்தின் கரைகள் கல்லால் அமைந்திருந்ததை நான் கண்டிருக்கிறேன். இன்று மக்கள் வெள்ளமே கரையாக நிற்பது பெரு வியப்பாயுள்ளது!

## ஆண்டவருக்கு

இந்த ஆலயமும், திருநகரமும் அமைத்த அருள்வள்ளல், கோவிலூர் மடாலயத்தின் முதற்குரவர் ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஞான தேசிக சுவாமிகளின் சமாதிக் கோயிலுக்கு இன்று காலை திருக்குட நன்னீராட்டு விழா நடைபெற்றது. 'கோவிலூர் ஆண்டவர்' என வணங்கப்பெறும் இவரைச் சிவலிங்க வடிவாகவும், ஸ்ரீலஸ்ரீ கருணாநிதி சுவாமிகளை பலபீடமாகவும் சமைத்து எழுப்பப்பெற்ற ஆலயத்திற்கு முதலில் கும்பாபிஷேகம் நடைபெறுவது பொருத்தமே. அந்த 'ஆண்டவர்' இல்லையென்றால் இந்த ஆண்டவனுக்கு இவ்வளவு சிறப்பான ஆலயமும் திருப்பணியும் ஏது?

## சுற்றுப்புறமும், இங்கு நடைபெறும் நிகழ்ச்சிகளும்

கொற்றவாள் ஈசர் முன் குடந்தம்பட்
டோர்ந்துவாரும்
முற்ற ஆத ரித்துநெல்லை முன்னின்று
துதிக்கின்றாரும்
பற்றவாய் மற்றை ஏனோர்முன் பணிகின்றாரும்
பொற்ற ஆலயத்தில் எங்கும் பொற்புறப்
பொலிவர்.

நல்லியல் மகத வீணை நரம்பிசை முழங்கும் ஓர்பால்; பல்லிய முழக்கம் ஓர்பால்; பகர் பல்லாண்டு எடுத்தல் ஓர்பால்; நால்வர் செவ்வாய் விளைந்த பாட்டொலி ஓர்பால்; நல்லியல் கதுப்பின் நல்லார் ஆட்டொலி ஓர்பால். மறைபுகல் விதிப்படை பூசை நடத்துவோர் ஓர்பால், சுதைச் சிற்பங்கள், விமானங்கள் கண்டு வியந்து நிற்பர் ஓர்பால். குடநீராட்டு விழாக் காணப் போகும் மகிழ்ச்சியால் பூரித்துப் பேசி நிற்போர் ஓர்பால். கண்ணில் ஆனந்த அருவிநீர் சொரியக் கைமலர் உச்சிமேல் குவித்துப் பதிகம்

பாடுவோர் ஓர்பால்; திருவாய் பொலியச் சிவாயநம என்பார் ஓர்பால்; தொலைக் காட்சிக் கருவிகள் படமெடுப்பது கண்டு தங்கள் முகத்தைக் காட்ட முந்துவோர் ஓர்பால்; ஆகிய சூழலில் என்னை மறக்கிறேன்.

## யாகசாலை

சரியாக எழுபது ஆண்டுகளுக்குப் பிறகு, பல லட்சம் ரூபாய்கள் செலவு செய்து, ஆலயம் முழுதும் பழுது பார்த்து, விமானங்கள், கோபுரங்கள், தடாகம், மைய மண்டபம் அனைத்தையும் சீர்திருத்தி, வண்ணம் பூசி, மிகச் சிறப்பான முறையில் திருக்குட நீராட்டு விழா நடைபெறுகிறது. கோவிலூர் ஆதீனத்தில் அதிபராக எழுந்தருளியுள்ள ஸ்ரீலஸ்ரீ இராமநாத ஞான தேசிகரின் முயற்சியால் நகரத்தார்களின் பெருங்கொடையால் இந்த விழா இவ்வளவு சிறப்பாக நடைபெறுகிறது.

நான்கு நாட்களாய் யாக பூஜை நெறிப்படி நடந்து புனிதம் ஊட்டியது. யாகசாலை அமைப்பே கண்கொள்ளாக் காட்சியாக உள்ளது. கோவிலின் ஈசான்ய (வடகிழக்கு) பாகத்தில், சரஸ்வதி மகாலுக்கு முன் அற்புதமாக அமைக்கப்பெற்ற யாகசாலை, பலவகை அலங்காரங்களாலும், மின்விளக்குகளாலும் பரிமள தூப தீபங்களாலும் இந்திரன் கொலு மண்டபம்போல் இருக்கிறது. அருள்மிகு. கொற்றவாளீசர், திருநெல்லையம்மன் மற்றும் விநாயகர் ஆதிபரிவார தெய்வங்களுக்கும் அலங்கார வேதிகைகள் அமைக்கப்பட்டுள்ளன. யாக குண்டங்கள் சமைக்கப்பெற்று சிவாசாரியர்களால் மிகுந்த பக்தி சிரத்தையுடன் யாக பூஜை நடத்தப் பெற்றுள்ளன. ஆஹுதி வழங்கி நெறிப்படி வேள்வி நடைபெற்றுள்ளது. சுவாமிக்குப் பஞ்சாசன வேதிகை, அம்பாளுக்குக் கமலாசன வேதிகை அமைக்கப் பெற்றுள்ளன. சுவாமிக்கும் அம்மனுக்கும் நவகுண்ட பக்ஷங்களும், விநாயகருக்கு பஞ்ச குண்ட பக்ஷமும், பரிவார தேவதைகளுக்கு ஏக குண்ட பக்ஷமும் அமைக்கப்பெற்றுள்ளன. சர்வசாதகம் திருவாடனை திரு. ஐயாமணி சிவம் அவர்கள், மற்றும் நூற்றுக்கணக்கான சிவாச்சாரியர்கள் நாடெங்கிலுமிருந்து திரண்டு வந்து பூஜை நடத்தினர்.

சர்வ வாத்தியங்களின் முழக்கம் கேட்கிறது. ஆலவட்டம், சுருட்டி, தொங்கல், குடை, சாமரம் ஆகிய விருதுகளுடன் கும்பங்கள் யாகசாலையிலிருந்து புறப்படுகின்றன. வழியெல்லாம் பத்ர புஷ்பங்கள் தூவப்பெறுகின்றன. மக்கள், வெள்ளமெனத் திரண்டு நிற்கின்றனர். கும்பாபிஷேகம் கண்டு, தரிசித்து மகிழ்வது செட்டிமார் நாட்டிலுள்ளவர்களுக்கு மிக விருப்பமானது. அதை மிகமிகப் பெரிய புண்ணியமாகக் கருதுபவர்கள் நகரத்தார். அதிலும் அவர்களே நடத்தியுள்ள திருப்பணி இது. ஆலயம் சிவகங்கை மன்னருக்கு உரிமையுள்ளதாயினும், கட்டியது, திருப்பணி நிகழ்த்தியது, இப்போது நிகழ்த்துவது, குடநீராட்டு விழா நடத்துவது எல்லாம் நகரத்தார்கள் பெருங்கொடையால்தான்!

'அரகர சிவசிவ' நாமங்கள் ஒலிக்கின்றன. நாடெங்கிலுமிருந்து வந்துள்ள பல ஓதுவார் மூர்த்திகள் தமிழோசை பாடுகின்றனர். அதிர்வேட்டு முழங்குகிறது. யாகசாலையிலிருந்து கலசங்கள் சிவாச்சாரியர்களால் மேல்தளத்துக்கு எடுத்துவரப் பெறுகின்றன. மக்கள் நெருக்கிக் கொண்டு சாரங்கள் வழியே மேலே ஏறுகின்றனர். பயிர்கள் தலைசாய்த்து நிற்க, உயிருடைய மக்கள் கூட்டம் ஏன் நிமிர்ந்து பார்த்திருக்கிறது? கோபுரங்கள் விமானங்களுக்கு இதோ நடக்க இருக்கும் கும்பாபிஷேகத்தைக் கண்டு மகிழத்தான்! வானில் கருடன் வட்டமிடுகிறது, சூரியனோ முன்னினும் மிகவும் விழித்துப் பார்க்கிறான். வெயில் கடுமையாகிறது என்று சொல்ல மாட்டேன், அவனும் கொற்றவாளீசுவரர் ஆலயத் திருக்குட நன்னீராட்டு விழாவை விழிப்போடு காண ஆவலாக வந்துள்ளான்! கொற்றவாளீசர் விமானம், திருநெல்லை நாயகி விமானம், நடராஜர் சபை, பரிவார தெய்வங்களின் விமானங்கள் இங்கெல்லாம் கும்பங்கள் சென்று சேர்கின்றன. ராஜகோபுரங்களுக்குக் கும்பங்கள் செல்கின்றன. தீவட்டி பிடித்து இருவர் முன்னே செல்ல, குடை பிடித்தொருவர் பின் செல்ல சிவாச்சாரியர்கள் கும்பங்களுடன் நிற்கின்றனர். விமான கலசத்தின்மீது தர்ப்பை சார்த்திக் குடங்களை மேலே தூக்கிக் கொண்டு தயாராக நிற்கின்றனர்.

## கும்பாபிஷேகம்

மணி 9—55 ஆகிறது. இதோ ஒரே ஆரவாரம். கெட்டி மேளம், அதிர்வேட்டு

பக்தர்கள் குரல்கள், மந்திர ஒலிகள், ஒரே சமயம் அனைத்துக் கோபுரங்கள், விமானங்களுக்குத் திருக்குட நன்னீராட்டு நடைபெறுகிறது. பக்திப் பரவசத்தால் நாத் தழுதழுக்கிறது. ஆவலாக எதிர்பார்த்திருந்த காட்சியை முழுதும் காணமுடியாமல் ஆனந்தக் கண்ணீர் திரையிடுகிறது. மக்களின் பக்திப் பரவசம் கண்டு என் மெய் சிலிர்க்கிறது! 'அரகரமகா தேவா!' என்ற ஒலி கேட்கிறது. அந்தத் தீர்த்தத்தைப் பிரசாதமாய்ப் பெற என்ன வேகமாய் மக்கள் நெருங்கி வருகின்றனர். ஏககாலத்தில் ஸ்தூல லிங்கமாகிய விமான— கோபுரங்கட்குக் கற்பூர ஆரத்தி நடைபெறுகிறது! கன்னத்தில் போட்டுக்கொண்டு பக்தி சிரத்தையுடன் பணிவோர் சிலர். சில தாய்மார்கள் மண்ணில் விழுந்து வணங்குகின்றனர்! கடல் ஒலிபோல் பக்தர் ஆரவாரம் கேட்கிறது. வானொலி வழியே உங்களுக்கும் கேட்குமே! தீர்த்தம், திருநீறு, மலர்கள் இவற்றைப் பெற்றுக்கொண்டவர்கள் சிவாச்சாரியார்கள் கீழே இறங்கி வருவது கண்டு இவர்களும் இறங்க விரைகின்றனர்.

ஆம், கீழே இறங்கிக் கோவிலுக்குள் சென்று கடவுளர் திருமேனிக்குக் குடநீராட்டு தலை, காணும் வேட்கைதான்! கோவிலுக்குட் செல்கிறோம். படை பெருத்தலின் பார் சிறுத்ததோ என்பதுபோல இவ்வளவு பெரிய கொற்றவாளீசுவரர் ஆலயத்தில் இவ்வளவு இட நெருக்கடியா! என்று வியக்கிறேன்.

## ஆண்டவர்

வழியில் யாரோ சாஷ்டசங்கமாக வணங்கியபடி இருக்கிறாரே! பக்தர் கூட்டம் எச்சரிக்கையாக அவரைச் சுற்றிச் செல்கிறார்களே! ஆ! இது என்ன! கற்சிலையாகத் திருவுருவம் தெரிகிறது! ஆம்! கோவிலூர் ஆண்டவர் எனும் ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஞானதேசிக சுவாமிகள் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்யும் வடிவத்தில் இருக்கிறார்! பொதுவாகக் கோயில்களைக் கட்டியவர், திருப்பணி செய்தவர் உருவங்கள் கற்றூணில் நின்றவாறு பணிந்த வண்ணம் அமைக்கப் பெற்றிருக்கும்— இங்கு எங்கும் காணாத புதுமை! இதுகுறித்து கம்பன் அடிப்பொடியார் விளக்குகிறார், "நின்று நிமிர்ந்தவண்ணம் காட்சி தந்தால்கூட நிமிரவும், தான் எனும் எண்ணமும் தோன்றுமோ என்று எல்லாம் அற, சர்வாங்க பரித்யாகம் செய்து, பூரண சரணாகதியைக் காட்டவே பணிந்து வணங்கிய வண்ணம் காட்சி தருகிறார்'' என்று. உளம் சிலிர்த்து, அவரை வலம் செய்து உள்ளே கூட்டத்துடன் செல்கிறேன். உள்ளே, ஆகா! மூலத்தானத்து இறைவிக்கு, இறைவனுக்கு, நித்யகல்யாணி அம்மனுக்கு கயிலாசநாதருக்கு, நடராஜருக்கு மற்றும் எல்லா சந்நிதிகளிலும் திருமேனிகளுக்கு அபிஷேகம் நடக்கிறது. தீபாராதனை நடைபெறுகிறது. உள்ளம் குளிர, உடல்சிலிர்க்க, பக்திக் கண்ணீர் கண்ணிலிருந்து வழிய, உடலெல்லாம் வியர்வை வழிய, மிக்க மன நிறைவோடு கூட்டத்தினருடன் வெளியே வருகிறேன்.

## ஆலயம்

மன்னர்கள் நிர்மாணித்த மாதிரியான இவ்வளவு பெரிய ஆலயம் நகரத்தார் பெருமக்களின் பெருங்கொடையாலே நிர்மாணிக்கப் பெற்றிருக்கிறது. நடராஜருக்கு ராஜகோபுரம் இவ்வளவு பெரியதாக அழகிய வேலைப்பாடுடையதாக எங்குமில்லை. 200 அடி நீள முகமண்டபம் நடராஜர் சந்நிதிக்கு இங்கு அமைந்தது தனிச் சிறப்பு. ரதகூடங்களும், வளைவும் கண்கவர் வனப்புடையன. தெப்பக் குளத்தின் அழகும், தேரோடும் வீதியழகும், மைய மண்டபத்தின் சிறப்பும் வார்த்தைக் கடங்கா! கோவிலூர் ஆதீனத்தின் குரவர்களின் இடைவிடா முயற்சியும் அருளாசியும் தூண்டு கோலாய் அமைய, நாட்டுக்கோட்டை நகரத்தாரின் பெருமனம் அருங்கொடை சிறந்து, இத்திருப்பணி மிகச் சிறப்பாக நிறை வேறியுள்ளது. திருப்பணிக் குழு தலைவர் கோட்டையூர் அ. க. அ. சித. அழ. சிதம்பரம் செட்டியாரவர்கள்; அருள்மனச் செம்மல். இவர் தொட்டதெல்லாம் பொன்னாகும்! அவரது பெரும் பிரயாசை, கொடை இவற்றின் வெற்றியே இந்த விழாவின் சிறப்பு. கோவிலூர் ஆலய கௌரவ சூப்பிரிண்டெண்டு காரைக்குடி மு. மெ. முத்துராமன் செட்டியாரவர்கள் இரவுபகல் பாராது பணி செய்துள்ளார். மற்றும் பல நூறு உறுப்பினர்கள் திருப்பணிக் குழுத் தவத்திரு. இராமநாத ஞானதேசிக சுவாமிகளின் அருளாணையின்கீழ் பணி செய்துள்ளனர். கம்பன் அடிப்பொடி அவர்கள் யாகசாலை அமைப்பு மற்றும் பல வற்றை நிர்வகித்துள்ளனர். இலக்கிய, சமயப்

பேரவைகளைப் பொறுப்புடன் நடத்துகிருர் நவயுகப் பிரசுராலயம் மெய்யப்பன் அவர்கள்' மலர்ச் சிறப்புக்கு மாண்புற உதவுகிருர் உலகம் சுற்றிய தமிழர் 'சோமலெ' அவர்கள். காவல் துறையின் பணி மிகச் சிறப்பானது. காணுத வர்க்கும், இதைக் காண வகை செய்துள்ளது தொலைக்காட்சி நிலையம். கேட்டின்புற வைக்கிறது திருச்சி வானொலி நிலையம்.

## சிறப்பான விருந்தினர்கள்

நாடு போற்றும் நல்விழாவைக் காண நானாயிரம் கண் படைத்தவனே அந்த நான் முகனே என்று சொல்லத் தோன்றுகிறது. இராமநாதபுரம் ராஜா இராமநாத சேதுபதி அவர்கள், சரவணம்பட்டி கௌமார மடாலய அதிபர் தவத் திரு. சுந்தர சுவாமிகள், பெங்களூர் கயிலாச ஆச்ரமம் ஸ்ரீலஸ்ரீ திருச்சி சுவாமிகள் மற்றும் நாடெங்கிலும் இருந்து 300க்கு மேற்பட்ட துறவிகள் கலந்து கொள்ளும் புண்ணிய விழா இது! சிருங்கேரி பீடத்தை குரு ஸ்தானமாகக் கொண்டிலங்கும் கோவிலூர் மடாலயம், வேதாந்த மடம். முந்தின குடநீராட்டு விழாவுக்கு அப்போது பட்டமலங்கரித்திருந்த குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ நருசிம்ம பாரதி சுவாமிகள் நேரில் வந்திருந்தார்கள். இன்றைய விழாவுக்கு ஸ்ரீ சிருங்கேரி மடத்தின் சார்பில் குருபக்தி ரத்னம் ஸ்ரீமான் வைதியசுப்ரமண்ய ஐயர் வந்துள்ளார். பிரபல பத்திரிகை ஆசிரியர் திரு. ஏ. என். சிவராமன் அவர்கள் வந்திருப்பதுடன் நான்கு நாட்களும் யஜுர் வேத பாராயணத்திலும் ஈடுபட்டார்

## நிறைவு

இத்தகைய மிகச் சிறப்பான கும்பாபிஷேக வைபவத்தைத் தரிசித்த நிறைவுடன் மக்கள் மனம் மகிழ்ந்து திரும்புகின்றனர். திருநெல்லை உடனமர் கொற்றவாளீசுவரர் திருவருளை வழுத்தி, வணங்கி நானும் விடைபெறுகிறேன்.

## வானொலி வருணனையின் போது, ஸ்ரீலஸ்ரீ இராமநாத ஞானதேசிகர் அவர்கள் வழங்கிய ஆசியுரை

இந்த 'சமிவன க்ஷேத்திரம்' என்னும் கோவிலூர், மூர்த்தி. தலம், தீர்த்தம் ஆகிய மூன்று சிறப்புகளும் பொருந்தியது. இத் தலத்தின் சிறப்பு ஸ்காந்த புராணம், சனற்குமார சம்ஹிதை, க்ஷேத்திர காண்டத்தில் விரிவாகக் கூறப்பெற்று, இங்கு கோயில் கொண்டருளும் பெருமான் 'திரிபுவனேச்வரர்' 'இராஜ கட்க பரமேச்வரர்' கொற்றவாளீசர், என்னும் பெயர்களால் போற்றப்பெறுகின்றார். அம்பிகையின் திருநாமங்கள், 'திரிபுவனேச்வரி' 'சாலிவாடீச்வரி' 'திருநெல்லை நாயகி' என்பனவாகும். இந்த க்ஷேத்திரம் 'ஸ்ரீவல்லபம்' 'சமிவன க்ஷேத்ரம்' 'சாலிவாடிபுரம்' 'வன்னிவனம்' 'கழநிவாயில்' என்னும் பெயர்களுடன் விளங்குகின்றது. மதுப்பிரிய முனிவர் இங்கு தங்கிதவமியற்றிப் பேறுபெற்ற காரணத்தால் இங்குள்ள தீர்த்தம் 'மது புஷ்கரணி' எனவும், இங்குள்ள நதி மதுநதி எனவும் பெயர் பெற்று விளங்குகின்றன. தேவர்களாலும், முனிவர்களாலும வழிபாடு செய்யப் பெற்ற இடங்களே புராண கால க்ஷேத்திரங்களாக விளங்குகின்றன. மலைக் குகைகளிலும் விருட்சங்களின் அடியிலும் காணப்பெற்ற திருவுருவங்களே புராணங்களில் இடம்பெற்றன. பின்னர் பாதுகாப்பைக் கருதி காலப்போக்கில் அவைகளுக்குத் திருக்கோயில்கள் அமைக்கப்பெற்றன. முற்காலத்தில் மரங்களையும் செங்கல் சுண்ணும்பு கொண்டும் அமைக்கப்பெற்ற திருக்கோயில்கள் பல்லவர் காலத்தில் மேலும் பாதுகாப்பாக—கற்கோயில்களாக—அமைக்கப்பெற்றன. சுமார் இருநூறு ஆண்டுகட்கு முன் இந்தக் கோவிலூரில் உள்ள திருக்கோயிலும் புதர்கள் நிரம்பிய காட்டுக்குள் மிகச் சிறிய அளவில் செம்பாரங்கல் கொண்டு கட்டப்பெற்ற கர்ப்பக்கிரகமும் எதிரில் பனைஓலை வேய்ந்த கொட்டகையும் கொண்டு விளங்கியது,

நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் வசிக்கும் பிரதான நகரமாகிய காரைக்குடி என்னும் ஊரில் தனவணிகர் மரபில் கருவிலே திருவுடையராய் ஞானச் செல்வராக அவதரித்த ஸ்ரீ ஆண்டவர் என்னும் சிறப்புப் பெயர்பெற்ற ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஞானதேசிகர் அவர்கள் தமது குருபத்தினியின் விருப்பத்தை நிறை வேற்றும் பொருட்டாக, மயிற்குஞ்சுகள் தேடி ஏவலர்களுடன் இங்கு எழுந்தருளிய போது இக் கோயிலைக் கண்டார்கள். கோயிலின் நிலை உள்ளத்தை உருக்கியது. திருநெல்லை அம்மையின் திருவருள் அவர்களை ஊக்குவித்தது. கி. பி. 1808-ம் ஆண்டில் இந்த ஆலயத்தைப் பெரிய

கற்கோவிலாக அமைக்கத் திருவுளம் கொண்டு பணியைத் துவக்கினார்கள். ஸ்ரீமத் ஆண்டவரின் மஹத்துவம் உணர்ந்த நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் ஆண்டவர் விரும்பியபடி தாராளமாகப் பொருள் வாரி வழங்கினர். கோயில் திருப்பணி மேலும் மேலும் சிறப்பாக நடந்து வந்தது.

இந்தக் கோயில் மட்டுமல்லாமல் பாடல் பெற்ற தலங்களில் உள்ள திருக்கோவில்களையும் புதுப்பிக்கும் பணியில் நகரத்தாரிகளை ஊக்குவித்து, திருக்கோவில் திருப்பணிகள் செய்வதுடன் வேதபாடசாலைகள், தேவார பாடசாலைகள், பசு மடங்கள், குருபூஜை மடங்கள், நந்தனவனங்கள், அன்ன சத்திரங்கள் முதலான அறப்பணிகள் செய்யவும் தூண்டினார்கள். நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் செய்துள்ள திருப்பணிகள், அறக்கட்டளைகள் உலகம் அறிந்தவை. இவைகட்கெல்லாம் வழிகாட்டியாக இருந்து ஊக்குவித்தவர்கள் ஸ்ரீமத் ஆண்டவர் என்னும் முத்துராமலிங்க ஞானதேசிகரே ஆவர். வரகவி, சேந்தினி பழநியப்பஐயா அவர்களின், "மடம் உண்டோ, சிவாலயங்கள் மிகுதி 'உண்டோ" என்ற பாடல் ஆண்டவர் பெருமையினைப் புலப்படுத்துகின்றது.

இத் திருக்கோயில் தனவணிகப் பெருமக்களாகிய நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் பொருளுதவியால் கர்ப்பக்கிரஹம், அர்த்த மண்டபம், மஹாமண்டபம், அலங்கார மண்டபம், திருக்கல்யாண மண்டபம் சொற்கேட்டான் சாரி மண்டபம், அணி ஒட்டிக்கால் மண்டபம், அஷ்டலெட்சுமி மண்டபம், துவஜஸ்தம்ப மண்டபம், நந்தி மண்டபம், தீர்த்த மண்டபம், சபா மண்டபம், பிராகாரப் பத்திகள் முதலியன கவினுற அமைத்தும், இராஜ கோபுரங்கள் எழில்உற எடுத்தும், மது புஷ்கரணி. தீர்த்தம் கருங்கல் சுற்றிக் கட்டியும், மத்தியில் மைய மண்டபம் எழுப்பியும் நுழைவாயில் ரதகூடங்கள், வளைவுடன், கூடிய ரதமேருக்கள் அமைத்தும் நிறைவு செய்யப் பெற்றது. மீண்டும் கோவிலில் ஏற்பட்டுள்ள பழுதுகளை அகற்றிவிமானங்கள், கோபுரங்கள், மேல்தளம் ஆகியவைகள் புதுப்பிக்கப் பெற்று வண்ணம் தீட்டி, இன்று கும்பாபிஷேகம் நடைபெற்றுள்ளது.

கோவிலில் பழுது அகற்றி அஷ்டபந்தனம், ரஜதபந்தனம் ஆகியனசெய்து திருக்குட நன்னீராட்டு விழா செய்வதற்காக நாட்டுக் கோட்டை நகரத்தார்களின் பேருதவியோடு கோட்டையூர் அ. க. அ. சித. அழ. சிதம்பரம் செட்டியார் அவர்கள் தலைமையில் திருப்பணிக் குழு ஒன்று அமைக்கப் பெற்றுள்ளது.

இத்துணை சிறப்புகளுக்கும் காரணகர்த்தராக விளங்கிய ஸ்ரீமத் ஆண்டவர் அவர்களுடைய சமாதி அதிஷ்டானம் விமானம், கோபுரங்கள் புதுப்பிக்கப் பெற்று அவற்றுக்கும் திருக்குட நன்னீராட்டு விழா நடைபெற்றிருக்கிறது. ○



கோவிலூர் மடாலயம் மஹரிஷிகளால் போற்றி வளர்க்கப் பெற்றது. இவ்வாதீனத்திற்கு அன்புடன் பொருளுதவி செய்தவர்கள், இன்றும் செய்து வருபவர்கள் தொண்ணூற்றாறு ஊர் நகரத்து வைசியர்கள் ஆவார்கள். அவர்களுடைய அறங்கள் இமய முதல் கன்னிவரை மிளிர்ந்து கொண்டிருக்கின்றன. அந்த நட்சத்திரங்களுக்கு இடையே முழுநிலவாக ஒளிப்பது கோவிலூர்த் திருமடா மடாலயம். இது என்றென்றும் நிலைத்து நிற்பதாக. தனவைசியப் பெருமக்கள் எல்லோரும் பொருளும், புகழும் புனிதமும் பெற்று இன்புற்றிருக்க அருளுமாறு. எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கிறோம்.

ஸ்ரீமத் சுவாமி சதாசிவானந்தா அவர்கள்
ஸ்ரீசதாசிவப் பிரமமேந்திராள் அதிஷ்டானம்,
நெரூர்—கரூர் வட்டம், திருச்சிமாவட்டம்



## நகரத்தார் ஈடுபாடு

திருநெல்லை நாயகி அம்மன் பெயரைக் குழந்தைகளுக்கு இடும் பழக்கம் நகரத்தாரிடம் உண்டு. அவ்வாறு வேண்டிக்கொண்ட பிறகு ஆண் குழந்தை பிறக்குமாயின் அவனுக்கு 'அன்' விகுதிசேர்த்து அம்மை பெயரை இடுவர். நெல்லையன் செட்டியார், நெல்லியான் செட்டியார் என்று நகரத்தாரில் நிலவும் பெயர்களின் வரலாறு இதுவே.

## கோடகநல்லூர் சுந்தர சுவாமிகள்

அரிமளம் சிவாலய கும்பாபிஷேகத்திற்கு வந்திருந்து சிறப்பித்தவர்களில் கோவிலூர் சிதம்பரய்யா என்பவர் முக்கியமான ஒருவர். அவர் நல்ல அறிவாளி. பண்பாடு மிகுந்தவர். கோவிலூர் வேதாந்த மடத்தின் தலைவர்.

அவர் சுந்தர சுவாமிகளிடம் பக்தியும் ஈடுபாடும் கொண்டவர். சுவாமிகளை கோவிலூருக்கு அழைத்துச் சென்றார். அங்கே இருந்து கொண்டு சுவாமிகள் செட்டிமார் நாட்டில் பல ஊர்களுக்குச் சென்று மக்களிடம் சைவ சமயப் பிரசாரத்தாலும் வேதாந்த ஞானோபதேசத்தாலும் தனவைசியர் சமுதாயத்திலேயே ஒரு புதிய திருப்பம் ஏற்பட்டது என்று கூறலாம்.

சைவ சமயத்தில் ஏற்கெனவே ஓரளவு உணர்ச்சியுடன் ஈடுபட்டிருந்த மக்களின் சிவபக்தி வலிமையடைந்தது. இக்காலத்தில் சுவாமிகள் சிவ சின்னங்களாகிய திருநீறு, ருத்திராட்ச, ஆகியவற்றின் சக்தியை வெகுவாக எடுத்துரைத்தார்கள். எங்கு பார்த்தாலும் மக்கள் திருநீறுடனும், ருத்திராட்சத்துடனும் காணப் பெற்றார்கள்.

கோடக நல்லூர் சுந்தர சுவாமிகள் வரலாறு.



## பரஞ்சோதி சுவாமிகள்

கோவிலூர் மடத்தின் கிளை மடம் சிதம்பரம் ஸ்ரீ பொன்னம்பல சுவாமி மடம். இதன் தலைவராய் இருந்து 1923—ல் இயற்கை எய்திய ஸ்ரீ பரஞ்சோதி சுவாமிகள் கோவிலூர் பொன்னம்பல சுவாமிகளிடம் சீடராய் இருந்து அவர் கட்டளைப்படி பர்மா, மலேயா, கொச்சின் சைனா, சிங்கப்பூர் சுமத்ரா, சிலோன் ஆகிய நாடுகளுக்குச் சென்று பெரும் பொருள் திரட்டி சிதம்பரத்தில் மடமும் மடத்தைச் சார்ந்த கோவிலும், உறுதியாகக் கட்டி நிலங்களும் வாங்கினார். 1928ல் இந்தச் சொத்துக்களின் மதிப்பு 5 லட்சம். சிதம்பரம் தச்சன் குளத்தை 10,000/—ரூபாய் செலவில் வெட்டியும், ஞானப்பிரகாசர் குளத்தில் 20,000 ரூபாய் செலவில் படித்துறைகள் கட்டியும் தீண்டாமையைப் போக்கநந்தனார் மடத்துக்கு சுவாமி சகஜானந்தரிடம் ரூபாய் 20,000/ கொடுத்தும் உள்ளார்.

தகவல்—குமரன்

## எருமை மாடும்...

கோவிலூர் ஆதீனம் ஏற்படுவதற்கு முன், இளையாற்றக்குடி போன்ற ஒன்பது நகரக் கோவில்களை நாட்டுக்கோட்டை நகரத்தார்களால் திருப்பணி செய்யப் பெற்றிருந்தன. கோவிலூர் ஆதீனத்தை நிறுவிய ஆண்டவர் முத்துராமலிங்க ஞான தேசிகர் அவர்களுடைய அறிவுரையாலும் தூண்டுதலாலுமே நகரத்தார்கள் பாடல் பெற்ற சிவன் கோவில்களிலெல்லாம் திருப்பணி செய்யத் தொடங்கினார்கள்.

நகரத்தார்கள் எப்போதுமே கோவிலூர் ஆதீன கர்த்தர்களைத் தங்கள் ஞான குருவாக ஏற்றும் அவர்களுடைய வார்த்தைகளை மதித்தும் நடந்து வந்துள்ளனர்.

நகரத்தார்களில் துறவு மேற்கொள்ளும் பழக்கமும் கோவிலூர் ஆதீனம் ஏற்பட்ட பின்னரே பெரிதும் பரவியுள்ளது. செல்வமும் செல்வாக்கும் நிறைந்தவர்கள்கூட, துறவிகளாக இருந்திருக்கின்றனர்.

கோவிலூரில் கற்பிக்கப்பட்ட வேதாந்த நூல்கள் அங்கு வந்தவர்களை எவ்வளவு ஈர்த்தன என்பது, "கோவிலூருக்குச் சென்ற எருமை மாடும் திரும்பி வராது" என்ற பழமொழியால் உணரத் தக்கது.



## ஆசையை ஒழித்த துறவி

ஈசானிய ஞான தேசிகரைத் தரிசிக்கப் பல பகுதிகளிலிருந்தும் அன்பர்கள் வந்து கூடினர். ஒரு சமயம் கோவிலூர் முத்துராமலிங்க ஞான தேசிகர் திருவண்ணாமலைக்கு வந்தார். அப்போது ஈசானிய தேசிகருக்குத் தொண்டு புரிந்துகொண்டிருந்த முத்துசாமி உடையார், ஆண்டவரின் விரலில் இருந்த மோதிரத்தைப் பார்த்து, 'ஆகா! இது எத்தனை பிரகாசமாக இருக்கிறது!' என்று வியந்தார். உடனே ஆண்டவர் 'அப்படியானால் இந்தப் பிரகாசம் உனக்கே இருக்கட்டும்' என்று கூறி மோதிரத்தைக் கழற்றி உடையாரிடம் கொடுத்து விட்டார். ஆசையைக் கூண்டோடு ஒழித்து விட்ட துறவி அல்லவா?

# கோவிலூர் ஆதீன வரலாறு

இன்றைக்கு ஏறக்குறைய நூற்று எண்பது ஆண்டுகட்குமுன்னர் செட்டிமார் நாட்டி திலகமெனத் திகழும் காரைக்குடி நகரத்தில் நகரத்தார்களின் தவப்பயனுக அவதரித்தார், "கோவிலூர் ஆண்டவர்" எனக் குவலயம் போற்றும் ஸ்ரீ முத்துராமலிங்க ஞான தேசிகர். இவர் கருவிலே திருவுடையாராக இருந்தமையின் தமது பால பருவமான பதின்மூன்றும் ஆண்டளவிலேயே சிக்கல் பொருள்வைத்த சேரியில் சென்று ஞானுசிரியரை அடைந்து, முறைப்படி குருமுகமாக ஞான நூல்களைக் கற்று, பதினுறு வயது பூர்த்தியாகு முன்னே ஞானுநுபூதிச் செல்வராகப் பல அற்புதச் செயல்கள் நிகழ்த்தலானுர். அக்காலம் "நாட்டுக் கோட்டை நகரத்தார்" என வழங்கும் தனவணிகப் பெருமக்கள் கடல் கடந்து சென்று தங்கள் வாணிபத்தை வளமுறப் பெருக்கிய காலமாகும்.

"திரை கடலோடியும் திரவியம்" சேர்ப்பதிலேயே கருத்தூனறிய நகரத்தார் சமூகம், தேடிச் சென்று திருத்தலங்களில் திருப்பணிகள் செய்யவும், அறக்கட்டளைகள் அமைக்கவும், என்றும் அழியா வரலாற்றுப் புகழ் மிகுந்து வளமுடன் வாழவும் வழிவகுத்த சிறப்பு, ஸ்ரீ சற்குரு முத்துராமலிங்க ஞானதேசிகருக்கு உண்டு.

ஸ்ரீ முத்துரமலிங்க ஞான வள்ளல் காரைக்குடியை அடுத்த கோவிலூரில் திருக்கோவில் கொண்டு விளங்கும் அம்பிகை திருநெல்லையிடம் ஈடுபாடு கொண்டிருந்து அடிக்கடி அம்பிகையின் அருட்காட்சி காணப்பெறும். பெரும்பேறு அவர் பெற்றிருந்தார். அம்பிகை அருள்பாலித்த வண்ணம் ஆலயத்தை நகரத்தார்களின் உதவி கொண்டு பெரும் அளவில் கலைத்திறன் பொதிந்த கருங்கல் திருப்பணியாகச் செய்யத் திருவுளம் கொண்டார்.

ஞானப் பேரொளியாக விளங்கும் சற்குரு முத்துராமலிங்க வள்ளலின் அருட்செயல்கள் நாடெங்கிலும் பரவலாயிற்று. பூர்வ ஜன்ம புண்ணிய வசத்தால் ஞானவேட்கை மிக்க நல்லறிஞர் பலரும் நாடி வந்து, ஞான நூல் கற்பாராயினர். தம்மைச் சரணுக வந்தடைந்த பக்குவர்கட்கு "அஞ்சலென அபயம் கொடுத்தருளி" பரமார்த்திகப் பேருண்மைகளைப் பலவாறுகத் தெளிய உணர்த்திப் பரமானந்தப் பேற்றை அருள் புரிந்தார் சற்குரு முத்துராமலிங்கர்.

நாளுக்கு நாள் பெருகிவரும் ஜாதி, இன வேறுபாடற்ற அடியார் குழாம் உணவுக்கும் உடைக்கும் இருக்கைக்கும் அலைந்து திரியாமல் அவர்கள் ஓரிடத்தில் தங்கி அமைதியாகத் தத்துவ விசாரம் செய்யவும், ஜபம், தபம், தியானம் முதலான ஆத்ம சாதனைகள் செய்து வரவும், திருமடம் ஒன்று அமைக்கத் திருவுளம் கொண்டு, அதற்கான ஏற்பாடுகள் செய்த வேளையில் அம்பிகை திருநெல்லையே காட்சி தந்து அருள் பிரசாதம் வழங்கியருளினுள்.

வடமொழியில் உள்ள வேதாந்த சித்தாந்த உண்மைகளை வடமொழிப் பயிற்சியில்லாத தமிழ்ப் பெருமக்களும் உணர்ந்து, உய்யும்நெறி நிற்கும் வகையில் தமிழில் "நாநாஜீவ வாதக் கட்டளை" தொடங்கி "ஞாநவாசிட்டம்" ஈருன பதினுறு நூல்கள் கிரமப் பாடமாக வகுத்தது, கோவிலூர் திருமடாலயத்தின் சிறப்பான பணியாகும்.

ஞானப் பேரொளியாக விளங்கிய ஸ்ரீ ஆண்டவரை அடைக்கலமாக அடைந்து குருபரன் குற்றேவல் செய்து ஞான அநுபூதி பெற்ற அடியார்கள் அனந்தம். அவர்களில் பலர் ஆங்காங்கு தமக்குற்ற தலங்களில் திருமடம் அமைத்துக் கொண்டு கோவிலூர்

மரபினை விளங்கச் செய்து வருகின்றனர். கோவிலூர் மரபின் வழிவழியாக அமைந்துள்ள திருமடங்கள் தமிழகத்திலும் அண்டை மாநிலங்களிலும் சுமார் 60க்கு மேல் உள்ளன.

ஸ்ரீ ஆண்டவரின் வியத்தகு மாண்பினை.

கார்கொண்ட புயல்வண்ணன் மலரயன்
வருந்தியும்
காணுதபெரு வாழ்வெனும்
கறைமிடற் றிறைராச கட்கபர மேசுரன்
கருணையுருவோ டமர்ந்து
கனவெழில்கொள் மணிமாட நிலவுசமி
வனமெனக்
கழறுமுயர் பதியில்வாசன்
கனதமறு சீடர்தம(து) அகவிருள் துரத்தவரு
கருதரிய ஞானதபனன்
போர்கொண்ட காமக் குரோதலோ பாதியம்
புகல்குற்றம் நீங்குபுனிதன்
பொறையறி (வு) அடக்கம்அருள் முதலநற்
குணமொடு
பொருந்திவளர் உற்ற முதல்வன்
புவனம்மூன் றிலும்இவன் புகழ்சென் றிடற்கிடம்
போதா(து) எனச் சிறந்தோன்
பொருளிலர்(து) உயர்சுத்த வேதாந்த சாத்திரம்
போதம்மிக்கு உள்ளநிபுணன்
பேர்கொண்ட நிர்மல சமாதி சாட்சாத்கார
பிரதாப மிகுசிரேஷ்டன்
பெருமைநிறை தருமுத்து ராமலிங்கக்குரு"

என்று சைவப் பெரியார், யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் பெருமான் போற்றிப் பாராட்டுவார்.

வடமொழி தெரியாதவர்கள் வேதாந்தம் படிப்பதற்கு வகை செய்த மடம் என்ற அளவில் கோவிலூர் ஆதீனம், வேதாந்த தத்துவ வரலாற்றில் தனி இடம் பெற்று மிளிர்கிறது. கலயத்தில் கஞ்சி ஏந்திக் கொண்டு கோவிலூருக்கு வந்து மாணுக்கர் பலர் வேதாந்தம் படித்தனர் என்பதிலிருந்து படித்தவர்களுடைய ஆர்வமும் படிப்பித்தவர்களுடைய தனிச் சிறப்பும் புலனுகும். இந்த ஆதீனத்தில் பயின்ற மாணுக்கர் பட்டியல் இவ் வெளியீட்டில் கொடுக்கப் பெற்றிருக்கிறது. இதை ஊன்றி ஆராய்ந்தால், ஆண்டவர் முத்து ராமலிங்க ஞானதேசிகர் கோவிலூரில் வேதாந்தப் பல்கலைக் கழகம் ஒன்றை நிறுவியுள்ளார் என்ற உண்மை உள்ளங்கை நெல்லிக் கனி போல் தெரியவரும். கோவிலூர் மண்டலி என்று கூறிக் கொண்டு, துறவிகள் வடநாட்டு யாத்திரை சென்று, மரியாதையுடன் எங்கும் வரவேற்கப்படுவது மரபு.

## கோவிலூர் ஆதீனத்தைச் சேர்ந்த மடாலயங்கள்

1. பொருள் வைத்த சேரி—கோ. ஆ. பொ. மடாலயம் (தஞ்சாவூர் மாவட்டம்)
2. திருவண்ணமலை—ஈசான்ய மடாலயம் (வட ஆர்க்காடு மாவட்டம்)
3. திருக்களர்—கோ. ஆ. வீர மடாலயம் (தஞ்சாவூர் மாவட்டம்)
4. சிதம்பரம்—கோ. சித. மடாலயம் என்ற பொன்னம்பல சுவாமிகள் மடாலயம் (தென் ஆர்க்காடு மாவட்டம்)
5. திருப்பூவணம்—வேதாந்த மடாலயம் (இராமநாதபுர மாவட்டம்)

## அவற்றின் கிளை மடங்கள்

1. சண்முக சுவாமிகள் மடாலயம், வளவனூர் (தென் ஆர்க்காடு மாவட்டம்)
2. சபாபதி சுவாமிகள் மடாலயம், மேட்டுப் பாளையம் (வட ஆர்க்காடு மாவட்டம்)
3. கோ. சித. மடாலயம் என்ற தத்துவராய சுவாமிகள் மடாலயம், எறும்பூர் (தென் ஆர்க்காடு வட்டம்)
4. கோ. ஆ. மடாலயம், எறும்பூர் (தென் ஆர்க்காடு மாவட்டம்)
5. பவழக்குன்று மடாலயம் என்ற அழகானந்த சுவாமிகள் மடாலயம்—திருவண்ணமலை (வட ஆர்க்காடு மாவட்டம்)
6. சாந்தி ஆசிரமம், காரியானூர் (பெரம்பலூர் வட்டம், திருச்சி மாவட்டம்)

குறிப்பு: கோவிலூர் என்னும் பெயரில் தஞ்சை மாவட்டத்தில் இரு ஊர்களும் மதுரை மாவட்டத்தில் ஓர் ஊரும் சேலம் மாவட்டத்தில் ஓர் ஊரும் உள்ளன. பிற மாவட்டங்களிலும் கோவிலூர்கள் இருக்கக் கூடும். எனவே காரைக்குடியை அடுத்த கோவிலூர் என்று குறிப்பிடுவது, ஐயப்பாட்டைத் தவிர்க்க உதவும். அஞ்சல்களில், கோவிலூர் 623-307 என்று குறிப்பிடவேண்டும். ★

# கோவிலூர் ஆதீனத்தில் பாடத் திட்டமாக உள்ள 16 வேதாந்த சாஸ்திரங்கள்

1. நாநாஜீவ வாதக் கட்டளை
(சேஷாத்திரி சிவனார் இயற்றியது)

2. கீதாசாரத் தாலாட்டு
(திருவேங்கட நாதர் இயற்றியது)

3. சசிவன்ன போதம்
(எறும்பூர் தத்துவராய சுவாமிகள் இயற்றியது)

4. மஹாராஜத் துறவு
(விருத்தாசலம் குமார தேவர் இயற்றியது)

5. வைராக்கிய சதகம்
(பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் இயற்றியது)

6. வைராக்கிய தீபம்
(பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் இயற்றியது)

7. இலட்சண விருத்தி
(கருணாநிதி என்னும் சிதம்பர ஞான தேசிகர் இயற்றியது)

8. அஞ்ஞவதைப்பரணி
(எறும்பூர், தத்துவராய சுவாமிகள் இயற்றியது)

9. வேதாந்த சூடாமணி
(துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் தமிழ்த் செய்யுள் வவடி மொழிபெயர்ப்பு)

10. விவேக சூடாமணி
(திருவிடைமருதூர், உலகநாத சுவாமிகள், தமிழில் செய்யுள் வடிவ மொழிபெயர்ப்பு)

11. பஞ்சக தசி
(நித்தியானந்த சுவாமிகள் வீர. சுப்பையா சுவாமிகள், தமிழில் செய்யுள் வடிவ மொழிபெயர்ப்பு)

12. கைவல்ய நவநீதம்
(நன்னிலம் தாண்டவராய சுவாமிகள் இயற்றியது)

13. ஈசுர கீதை
(எறும்பூர், தத்துவராய சுவாமிகளால், தமிழில் செய்யுள் வடிவ மொழிபெயர்ப்பு)

14. பகவத் கீதை
(பட்டனார் தமிழில் செய்யுள் வடிவ மொழி பெயர்ப்பு)

15. பிரம்ம கீதை
(எறும்பூர், தத்துவராய சுவாமிகளால், தமிழில் செய்யுள் வடிவ மொழிபெயர்ப்பு)

16. ஞான வாசிட்டம்
(வீரை ஆளவந்தார். தமிழில் செய்யுள் வடிவ மொழிபெயர்ப்பு)

குறிப்பு : — வீர சைவ மடங்களான பேரூர் சாந்தலிங்க சுவாமிகள், மடம் விருத்தாசலம் குமாரதேவர் மடம், ஆகியவற்றில் வெளியிடப் பெற்றுள்ள மூன்று நூல்கள் கோவிலூரில் பாடமாகக் கற்பிக்கப் பெறுகின்றன.இவற்றின் எண்கள் 4, 5, 6 ★



# ஆண்டவர் கோயில் கும்பாபிஷேகம்.

அருள்தரு திருநெல்லை அம்மனுடன் கூடிய கொற்றவாள் ஈசுவரர் கோயில் கும்பாபிஷேகம் நடந்த அதே நாளில் (21—4—1978 ல்) ஆண்டவர் கோயில் கும்பாபிஷேகமும் சிறப்பாக நடைபெற்றது.

கோபுரத்தில் சுதை வேலைகளைப் புதுப்பித்தும் கோபுரத்திலும் தூண்களிலும் வண்ணம் அடித்தும் திருப்பணி செய்யப் பெற்றது. திருமடாலயத்தின் வாயிலில் இந்தக் கும்பாபிஷேகத்திற்காகத் தனியாக ஒரு யாகசாலை அமைக்கப் பெற்று ஆறுகாலம் நடைபெற்றது.

மேற்கண்ட திருப்பணி கும்பாபிஷேகச் செலவுகளைப் பெங்களூர் கயிலாச ஆசிரமம் ஸ்ரீ-ல-ஸ்ரீ திருச்சி சுவாமிகள் அவர்கள் ஏற்றுக் கொண்டு மிகச் சிறப்பாகச் செய்தது போற்றுதற்குரியது.



## கோவிலூர் ஆண்டவர்-பெயர்க் காரணம்

கோவிலூர் ஆதீனம் நிறுவிய ஸ்ரீ முத்துராமலிங்க ஞானதேசிகர், தஞ்சை மாவட்டத்தில் சிக்கல் என்னும் ஊரில் தம் தந்தையார் செய்து வந்த வாணிபத் தொழிலில் உடன் இருந்து வந்தார். அந்நாளில் அருகே உள்ளே பொருள் வைத்தசேரி என்னும் சிற்றூரில் தவ முனிவராக வாழ்ந்து வந்த உகந்தலிங்க ஞான தேசிகரின் புகழை அறிந்து, வேதாந்த சாத்திரங்களைப் பயில அவரைத் தம் குருவாகப் பெறும் வாய்ப்பு அவருக்கு ஏற்பட்டது.

அப்பகுதி நாகப்பட்டினம் வட்டத்தில் அடங்கியது. அங்கு வாழும் மக்கள் சாதி மத பேதமின்றி நாகூர் ஆண்டவரின் வரலாற்றை நன்கு அறிந்தவர்கள். அப்பெருமானைப் போலவே, முத்துராமலிங்கரும் ஞானியாகவும் அருள் ஒளி மிக்காராகவும் வாக்குப் பலிதம் உடையவராகவும் விளங்கியதைக் கண்டு வியந்த மக்கள் ஆண்டவர் என்னும் சிறப்புப் பெயரை இவர்க்கும் வழங்கி, வேறுபாடு தெரிவதற்காக 'கோவிலூர் ஆண்டவர்' என அழைக்கலாயினர். ★

கோவிலூர் மடத்தில் இருந்து பாடம் கேட்டதாரிகோவிலூர் மடம் செட்டிநாட்டில் காரைக்குடிப் பக்கத்தில் உள்ளது. சுமார் இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு ஸ்தாபிக்கப் பட்டது. முத்துராமலிங்கம் என்ற ஒருவர் நல்ல வேதாந்தி. சைவ சித்தாந்தத்தில் திளைத்திருந்தார். அக்காலத்தில் ஸ்ரீ சிருங்கேரி மடத்தை அலங்கரித்த ஸ்ரீ ஜகத்குரு சுவாமிகளின் அனுக்கிரகத்துடன் அவர் கோவிலூர் மடத்தை ஸ்தாபித்தார், அவருக்கு ஸ்ரீ முத்துராமலிங்க ஞான தேசிகர், என்ற பெயர் ஏற்பட்டது. சிக்கல் என்ற ஊரிலும் ஸ்ரீ முஷ்ணம் என்ற ஊரிலும் மடங்கள் இருக்கின்றன. கோவிலூர் மடத்துச் சீடர்கள் அந்த மடங்களை நிர்வாகித்து வருகிறார்கள்.

—திருக்கோவிலூர் ஞானானந்த சுவாமிகள்

(அமுதசுரபி தீபாவளிமலர் 1977)

★

# கோவிலூர் மடாலயம் ஆண்டவர் மன்றம்

## நோக்கங்கள்

அ. சாதி, மத, இன வேறுபாடு இல்லாமல் துறவு ஒழுக்கமுள்ள சந்நியாசிகளுக்கும், ஆத்ம சாதனம் பயிலவரும் அன்பர்கட்கும், உணவு, உடை, உறையுள் அளித்து சம்ரட்சித்தல்; அவர்கள் தத்துவ விசாரம் செய்யவும், வேதாந்த சாஸ்திரப் பயிற்சி பெறவும், கர்மம், பக்தி, யோகம், ஞானம் ஆகிய சாதன மார்க்கங்களில் பயிற்சி பெறவும், வடமொழி தென்மொழி இலக்கண இலக்கியங்கள் கற்கவும் வசதி செய்தல்.

ஆ. மகான்களுக்கும், பெரியோர்களுக்கும் குருபூஜை, ஜெயந்தி முதலிய விழாக்கள் நடத்துதல்; வெளியிடங்களிலிருந்து வரும் மஹான்கள், பெரியோர்கள், வித்வான்கள் முதலியவர்களை உரிய மரியாதையுடன் வரவேற்று உபசரித்தல்.

இ. மேற்குறித்த நோக்கங்களுக்கு ஏற்ற வகையில் அருள்நெறி போற்றும் தக்க அறிஞர்கள் மூலம் ஆன்மீக—சமய நெறிகள் குறித்து, சொற்பொழிவுகள் நிகழ ஏற்பாடு செய்தல்.

ஈ. அத்வைத சித்தாந்த சம்பந்தமான நூல்கள், பக்தி இலக்கியங்கள், நீதி நூல்கள் முதலியன பதிப்பித்தல்; மாத, வார ஏடுகள் வெளியிடுதல்.

உ. வேதபாடசாலைகள், தேவார பாடசாலைகள் ஏற்படுத்தி நிர்வகித்தல்; சந்தர்ப்பங்கள் நேர்ந்தால் இந்து தேவாலயங்கள், சமாதி ஆலயங்கள், திருமடங்கள், ஆஸ்ரமங்கள், வேத பாடசாலைகள் தேவார பாடசாலைகள் முதலியவைகளின் நிர்வாகத்தையும், அவைகளுக்கு உரிய தாவர, சங்கம சொத்துக்களையும் ஏற்று நிர்வகித்தல்.

ஊ. தேவாலயங்கள், திருமடங்கள் முதலியவைகளில் வழக்கத்தை அனுசரித்து நித்திய பூஜைகள், விசேட கால பூஜைகள், குருபூஜைகள், மண்டபப்படிகள் முதலிய விழாக்கள் நடத்துதல்.

எ. விசேட விழாக் காலங்களில் சாதி, மத, இன வேறுபாடின்றி, ஏழை எளியவர்கட்கு அன்னதானம் செய்தல்.

ஏ. இந்து சமய சம்பந்தமான மூர்த்திகள், சமயப் பெரியோர்கள் ஆகியோரின் சிலைகள், ஓவியங்கள், தொல்பொருள்கள், புராதன நூல்கள், சுவடிகள், கலைப் பொருள்கள் முதலியவைகள் கொண்ட கலைக்கூடங்கள் ஏற்படுத்தி நிர்வகித்தல்; முன்னதாக ஏற்பட்டுள்ள கலைக் கூடங்களையும் ஏற்று நிர்வகித்தல்.

ஐ. கல்வி நிலையங்கள், நூலகங்கள் வைத்திய சாலைகள் ஏற்படுத்தி நிர்வகித்தல்; சந்தர்ப்பம் நேர்ந்தால் முன்னதாக ஏற்பட்டுள்ள கல்வி நிலையங்கள்; நூலகங்கள், வைத்திய சாலைகளையும் ஏற்று நிர்வகித்தல்.

ஒ. மேற்குறித்த நோக்கங்கள் நிறைவேறுதற்கு அவசியமானதும் அனுகூலமானதும் மன்றத்தின் முன்னேற்றத்தை நோக்கமாக உடையதுமான எல்லாக் காரியங்களையும் செய்தல்.

## நிர்வாகக் குழுவினர்

இம் மன்றத்தின் தொடக்கத்தில் 1972–ல் பொறுப்பேற்று இயங்கிவந்த நிர்வாகக் குழு உறுப்பினர்களின் பெயர்கள், விலாசம், பதவி முதலியன பின்வருமாறு :

1. ஸ்ரீலஸ்ரீ. இராமநாத ஞாந தேசிகர் அவர்கள், (தலைவர்)

2. ராய. சொக்கலிங்கன், உபதலைவர், சிவன்கோவில் மேலை வீதி, காரைக்குடி.

3. மெ. நா. சித. சிதம்பரம் செட்டியார் செயலர், சு. ராம. வீதி, காரைக்குடி-1.
4. மு. மெ. முத்துராமன், துணைச் செயலர், சு. ராம வீதி, காரைக்குடி-1.

5. அ. ராம. அ லெ. அ. மு. வீ. முத்து வீரப்ப செட்டியார், பொருளாளர், ஆலம் பட்டார் வீதி, தேவகோட்டை.

உறுப்பினர்கள்

6. அழ. அரு. சோமநாதன் செட்டியார் ஜமீன்தார் காலனி, தேவகோட்டை S. R.

7. சா. நா. அ. சொ. அ. அண்ணாமலை செட்டியார், மெ. மெ. வீதி, காரைக்குடி-1

8. பிச. அரு. அரு. செந்தில்நாதன் செட்டியார் சிற்சபேசன்தெரு தேவகோட்டை.

9. அழ. அழகப்பன், செக்காலை ரோடு காரைக்குடி-1

10. கு. நா. மெ. மெ. முத்தய்யா செட்டியார் கோவிலூரார் வீதி, காரைக்குடி-1

11. ப. சு. இராமநாதன் செட்டியார் மெ. மெ. வீதி, காரைக்குடி-1

12. லெ. சொக்கலிங்கம் சு. ராம. வீதி, காரைக்குடி-1

13. அ. சோமையா, பழ. செ. வீதி, தேவகோட்டை

## இப்போதைய நிர்வாகக் குழுவினர்

இப்பொழுது, அதாவது 1978-ல் பொறுப் பேற்று நடத்தி வருபவர்கள் விவரம்:—

1. ஸ்ரீ-ல-ஸ்ரீ அரு. இராமநாத சுவாமிகள் அவர்கள், இளையமடாதிபதி. தலைவர் கோவிலூர்.

2. ஸ்ரீ அ. க. அ. சித. அழ. சிதம்பரம் செட்டியார், உபதலைவர். கோட்டையூர்.

3. ஸ்ரீ சா. நா. அ. சொ. அ அண்ணாமலை செட்டியார். உபதலைவர், காரைக்குடி

4. ஸ்ரீ ப சு. ராமநாதன் செட்டியார் செயலர், காரைக்குடி

5. ஸ்ரீ மு மெ. முத்துராமன் செட்டியார். துணைச் செயலர், காரைக்குடி

ஸ்ரீ அ. ராம. லெ. அ. மு. வீ. முத்துவீரப்ப செட்டியார், பொருளாளர், தேவகோட்டை.

உறுப்பினர்கள்

7. ஸ்ரீ பி. ச. அரு. அரு. செந்தில்நாதன் செட்டியார், தேவகோட்டை

8. ஸ்ரீ கு. நா. மெ. மெ. முத்தையா செட்டியார், காரைக்குடி

9. ஸ்ரீ லெ. சொக்கலிங்கம் செட்டியார் தேவகோட்டை

10. ஸ்ரீ ப. வ. ராம. குழந்தையன் செட்டியார், ராயவரம்

11. ஸ்ரீ ராம. முத்துப் பழநியப்ப செட்டியார், மதுரை

12. ஸ்ரீ அ. அழ. அழகப்ப செட்டியார் காரைக்குடி

13. ஸ்ரீ அழ. சுப்ரமணியம் செட்டியார் காரைக்குடி

14. ஸ்ரீ லெ. அழகுசுந்தரம் செட்டியார் மதுரை

15. ஸ்ரீ அ. முத்தையா, தேவகோட்டை

16. ஸ்ரீ அரு. கி. கிருஷ்ணன் செட்டியார் பாகனேரி

# கோவிலூர் ஆண்டவர்

என்ற

# முத்துராமலிங்க ஞானதேசிகர் அவர்கள்

டாக்டர் அர. சிங்காரவடிவேலன்,
தமிழ்ப் பேராசிரியர், ஸ்ரீ சேவுகன்-அண்ணாமலை கல்லூரி, தேவகோட்டை.

## பிறப்பு

கோவிலூர் மடாலயம், காரைக்குடி நகரத்தின் எல்லையிலிருந்து மேற்கே ஒரு கல் தொலைவில், காரைக்குடி—மதுரை நெடுஞ்சாலையில் செல்லுகின்றவர்களை "இங்கே வாருங்கள்" என அழைக்கும் இரண்டு சிறந்த கோபுர வாயிலுக்குள் அமைந்திருப்பது. இன்றைக்கு 180 ஆண்டுகட்கு முன்னர்க் காரைக்குடி நகரில் பிறந்தருளிய "கோவிலூர் ஆண்டவர்" எனப் பாராட்டப் பெறும் தவத்திரு முத்துராமலிங்க ஞானதேசிக சுவாமிகளை முதற்குருவாகக் கொண்டது இம்மடாலயம்.

## சிறப்பு

கோவிலூர் மடாலயத்தைத் தோற்றுவித்துச் சிவம் பரப்பிய பெரியார் முத்துராமலிங்க ஞானதேசிக சுவாமிகளே. அப் பெரியாரைச் சிறப்பித்துப் பின்வரும் பாடலைப் பாடினார் புலவர் ஒருவர்.

மடம்உண்டோ? சிவாலங்கள் மிகுதி உண்டோ?
வாசிட்டம் படிப்பதுண்டோ? மனத்துள் ஞானத்
திடம்உண்டோ? நால்வர்தமிழ் படிப்பார்
உண்டோ?
திவ்வியமாம் உதாரமுதல் குணங்கள் உண்டோ
விடம்உண்டோன் அடியர்குழாம் மிகுதிஉண்டோ
மெய்யறம், சத்திரம், விரைப்பூங் காவும்
உண்டோ?
வடகயிலைக்(கு) இறைவன்எனும் முத்து ராம
வள்ளல்திருக் கழனிநகர் வாரா முன்னம்.

எனவே முத்துராம வள்ளல் கழனிநகரில் அடியெடுத்து வைப்பதற்கு முன் மேற்குறித்த சிறப்புகள் எவையும் இல்லை என்பது தெரிய வரும்.

## பெற்றோர்

ஆண்டவரை ஈன்றெடுத்த பெருமை அவருடைய தாயார் வள்ளியம்மை ஆச்சி அவர்களுக்கும் தந்தையார் மெய்யப்பச் செட்டியார் அவர்களுக்கும் உரியது.

## ஞானத் தந்தை

மெய்யப்பச் செட்டியார், தஞ்சை மாவட்டத்தில், சிக்கல் என்னும் ஊரில் தொழில் செய்துவந்ததால் ஆண்டவரும் சிறுவயதிலேயே அவ்வூரில் இருந்து வந்தார். அருகேயுள்ள பொருள்வைத்தசேரியில் உகந்தலிங்க சுவாமிகள் என்ற முனிவர் இருந்தார்கள். இவர்களே ஆண்டவருடைய ஞான குருவாக அமைந்தார்கள்.

உகந்த குரு சுவாமிகளின் காலம் கி. பி. 1761 முதல் 1819 வரை என்பர். இவர் திருவள்ளுவர் போல வாழ்க்கை நடத்தி வந்ததாகத் தெரிகிறது. நெய்தல் தொழில் செய்து, அந்த வருவாயை மூன்று பகுதியாக்கி, முதற் பகுதியை மறு நாள் நெய்வதற்கு நூல் வாங்கவும், இரண்டாம் பகுதியை வீட்டுச் செலவுக்கும், மூன்றும் பகுதியை அடியார்களுக்கு அமுது அளிக்கவும் பயன்படுத்தி முறையான வாழ்வு வாழ்ந்து வந்தார்.

உகந்த குரு சுவாமிகளின் மாணாக்கரான இராயவேலூர் கந்தப்பசுவாமிகள், திருவண்ணாமலையில் ஈசானிய திக்கில் மடம் ஒன்று நிறுவி ஈசானிய தேசிகர் என்று பெயர் பெற்றார்,

அவருடைய வாழ்த்தும் ஆண்டவருக்குத் தம் 13-ஆவது வயதிலேயே கிடைத்தது.

## உபதேசிக்கப் பிறந்தவர்

இராமேசுவர யாத்திரையாக வந்து காரைக்குடியில் தங்கிய வடநாட்டு யோகி ஒருவர், இளைஞரான திரு. முத்துராமலிங்கத்தைப் பார்த்து 'உலகினர்க்கு உபதேசிக்கவும் ஞான அநுக்கிரகம் செய்யவுமே இவர் அவதரித்துள்ளார்' என்று கூற, அன்று முதல் நகரத்தார் அனைவரும் இவருடைய இயற்பெயரைக் கூறாது 'ஆண்டவர்' என்னும் சிறப்புப் பெயரால் மட்டும் குறிப்பிட்டு இவருக்குரிய மரியாதைகள் செய்து வரலாயினர்.

காரைக்குடியில் கோயில் கொண்டுள்ள கொப்புடைய அம்மன் என்ற மிகப் பழமையான கிராம தேவதை, ஆண்டவருக்கு நேரில் தோன்றும் (பிரத்யட்சம்) என்பர்

## வாசிட்ட சமாப்தி

வேதாந்த சாத்திரங்கள் 16 இவை அனைத்தையும் ஆண்டவர் கசடறக் கற்றார். 16-ஆவது நூலின் பெயர் வாசிட்டம். வாசிட்டம் படிப்பது, வேதாந்தத்தை முழுமையாக உணர்ந்ததற்கு அறிகுறி. அத்துறையில் பட்ட மேற்படிப்புப் படித்தமைக்கு ஒரு சான்று. எனவே வாசிட்டம் படித்ததும், மாணாக்கர் தன் குருவுக்கு ஆராதனை செய்யும் நிகழ்ச்சி, மரியாதை தெரிவிக்கும் சடங்கு, நன்றி கூறும் விழா, காணிக்கை செலுத்தும் நாள் ஒன்று உண்டு. வாசிட்ட சமாப்தி என்னும் அந்த ஏற்பாட்டைச் செய்ய ஆண்டவர் தன் தந்தையிடம் பணம் கேட்டார். தந்தையார் ஒரு பதிலும் கூறாது, பேசாமல் இருந்தார்.

## செவிடானதும், செவிடு நீங்கியதும்

'காது செவிடாகி விட்டதா?' என்று ஆண்டவர் கேட்க, அந்த நொடியிலேயே தந்தையாரின் செவிகள், கேட்கும் ஆற்றலை இழந்தன. உடனே தந்தையார் உகந்தலிங்க குருவிடம் ஓடி, நடந்ததைக் கூற, ஆண்டவரைக் குரு அழைத்து 'உன் பிதாவுக்கு உண்டான வருத்தம் தீர, திருநீறு தருக' என்றார். ஆண்டவர் தம் தந்தையாருக்குத் திருநீறு கொடுத்ததும், தந்தையின் மூடிய காதுகள் திறந்தன. பின்னர், அவர் தம் மகனுக்குத் தேவையான பணத்தைக் கொடுத்தார். துறவிகள் பலரை வரவழைத்து அவர்கள் முன்னிலையில் தம் ஆசிரியருக்குச் சிறப்பாக வாசிட்ட சமாப்தி செய்தார்.

## குருவின் பரிபூரணம்

உகந்த குரு சுவாமிகள் பரிபூரணம் அடைந்ததும், ஆண்டவர் தமிழ் நாட்டில் ஏராளமான மடங்களுக்குத் திருமுகம் அனுப்பி, அந்த மடங்களின் பிரதிநிதிகளாக வந்த துறவிகளின் முன்னிலையில் சமாதி வைத்துப் பின்னர் மண்டலாபிஷேகம், குருபூசை, மகேசுவர பூசை, முதலியவும் தக்கவாறு நடத்தி வைத்தார். அந்த அதிஷ்டானத்துக்கு ஆலயம் எடுப்பித்து, அதனைப் பேணி வர ஒரு மடம் நிறுவினார். அந்த மடத்திற்கு ஏராளமான பொருள் வழங்கிச் சிதம்பரம், கேணி மடத்து வீரபத்திர சுவாமிகளை அந்த மடத்தில் எழுந்தருளச் செய்தார்கள்.

## கோவிலூர்ப் பணி

கோவிலூரில் ஆண்டவர் செய்த பணிகளுக்கு உகந்தலிங்க சுவாமிகள் மறைமுகமாகக் காரணமாக இருந்தார்கள். தம் குருவின் மனைவியார், மயில் குஞ்சுகள் வேண்டுமென்றும், காரைக்குடிப் பகுதியிலுள்ள காடுகளில் மயில்கள் மிகுதி என்று கேள்விப்பட்டிருப்பதாகவும் ஆண்டவரிடம் கூறினார். அவ்வேண்டுகோளை நிறைவேற்ற, ஆண்டவர் தம் நண்பர் ஒருவருடன் (இன்றைய கோவிலூரான) காட்டிற்குச் சென்றார். அவ்வமயம், தான் கூரைக் கொட்டகைக்குள் செம்பூரான் கல்லாலான திருநெல்லை நாயகி அம்மனுடன்கூடிய கொற்றவாள் ஈசுவரர் கோவில்கள் இருப்பதை அறியலானார்.

அன்று முதல் அந்தத்தலம் ஆண்டவர் மனத்தை ஆட்கொண்டது. காரைக்குடியில் இருந்தபோது, திங்கள், வெள்ளிக் கிழமைகளில் ஆண்டவர், கோவிலூருக்குச் சென்று, இறைவனையும் இறைவியையும், மனமுருக வழிபட்டு வருவதைக் கடமையாகக் கொண்டார். ஒருநாள் பெருமழை பெய்து ஆண்டவர்

அங்கேயே தங்கும்படி ஆயிற்று. அப்போது கோவில் கொட்டகை சரிந்தது. கோவிலைக் கல் திருப்பணியாகக் கட்டி முடிப்பது என்று அந்த நேரத்திலேயே ஆண்டவர் முடிவு செய்து அந்த முடிவை நிறைவேற்றினார்கள்.

தமிழகம் எங்கும் பாடல் பெற்ற தலங்களில் உள்ள கோவில்களைக் கல் திருப்பணி ஆக்கும் முயற்சிக்கு அடிகோலுவதாகவும் ஆண்டவரின் கோவிலூர்ப் பணி அமைந்தது.

## புதுமை

ஆண்டவர் வாழ்வில் குறிப்பிடத்தக்க மற்றொரு நிகழ்ச்சியும் உண்டு. அவருடைய மாணக்கர்களுள் காரைக்குடி அண்ணாமலை ஐயா என்பவரும் ஒருவர். அவருக்கு மகப்பேறு இல்லை. அவர் மனைவியாரும் சுற்றத்தாரும், ஒரு குழந்தையைச் சுவீகாரம் செய்து கொள்ளும்படி வேண்டி வற்புறுத்தினார்கள். இச்செய்தியை அண்ணாமலை ஐயா, தம் ஆசிரியரான ஆண்டவரிடம் தெரிவித்தார். அதற்கு ஆண்டவர் 'நானே உனக்குப் பிள்ளையாக (மகனாக) இருக்கிறேன்; நீ எனக்குப் புதுமை* செய்து வை. உன் பங்குக்குரிய செல்வம் அனைத்தையும் கொடு. நான் கொற்றவாள் ஈசுவரர் திருப்பணியை அப்பணத்தைக் கொண்டு செய்து முடிக்கிறேன்' என்றார்கள். அண்ணாமலை ஐயாவும் உறவினர்களும் அவ்வாறே சம்மதித்தனர். புதுமைச் சடங்கும் நடந்தது. ஆண்டவருடைய திருமேனியைப் புண்ணிய தீர்த்தங்களால் நீராட்டிக் கடுக்கன், மோதிரம், மகர கண்டி, கௌரி சங்கம், பட்டு, பீதாம்பரம் முதலியவற்றால் அலங்கரித்து, வெல்லப் பாகினால் கப்பியரிசி (காப்பரிசி) செய்வித்து உறவினர்க்கெல்லாம் நான்கு நாட்களுக்கு அறுசுவை விருந்து படைத்து மொய்ப் பணமும் எழுதினர்.

## கவி இயற்றும் வன்மை

முத்துராமலிங்க ஞானதேசிகர் அவர்கள் பின்வரும் தெய்வங்களைப் பற்றிச் செய்யுள்கள் இயற்றியுள்ளார்கள்.

1. திருப்பெருந்துறை ஆத்மநாத சுவாமி.
2. மாத்தூர் ஐநூற்றீசுவரர்.
3. அரியக்குடிப் பெருமாள்.
4. காரைக்குடிக் கொப்புடைய அம்மன்
5. பிள்ளையார்பட்டிக் கற்பக விநாயகர்.
6. கழனிவாசல் பிடாரி.
7. சாலி என்னும் சிற்றூரிலுள்ள அஞ்சாத பெருமாள்.
8. அதளக் கண்மாய் அகத்தீசுவரர்.
9. மறவன்கோட்டைப் பிடாரி.

## மடம் நிறுவியது

கோவிலூரில் ஓர் ஆதீனத்தை நிறுவியவரும் ஆண்டவரே ஆவார். எனவே ஆதீனத்தின் புகழ் அனைத்தும் இவரையே சேரும்.

கல்லல், கானாடுகாத்தான், சாக்கோட்டை முதலிய பல ஊர்களிலும் ஆண்டவர் கற்கோவில் திருப்பணிகளைச் செய்திருக்கிறார்.

## கோவிலூரார் வீடு

ஆண்டவர் பிறந்த வீடு இன்றும் காரைக்குடியில் கொப்புடைய நாயகி அம்மன் கோவிலுக்கும் நகரச் சிவன் கோவிலுக்கும் இடையேயுள்ள கோவிலூரார் வீதியில் உள்ளது. "கோவிலூரார் வீடு" என்ற பெயர் அந்த வீட்டுக்கு வழங்கி வருகிறது. ஆண்டவர் குருபூசை நாளில் அவ்வீட்டார் கோவிலூருக்கு வந்து மடத்தில் விநாயகப் பானை வைப்பது மரபாக இருந்து வருகிறது. ○

*புதுமை என்பது நகரத்தார்கள் தமது மூத்த குழந்தைக்குச்செய்யும் மங்கலவிழா; ஓராண்டுநிறைவடையும்போது, உறவினர்அனைவரையும் அழைத்து குழந்தைகள் கைகளில் பொற்காப்பும், மார்பில் பாசிமணி முதலியவையும்அணிவித்துநீடுவாழ இறையருளைவேண்டும் சடங்கு; பிறந்த நாட் கொண்டாட்டம்;



2

# துறவு ஆண்டவர் அவர்கள்

## (1847—1849)

அ. லெ. நடராஜன்

தென் தமிழ் நாட்டில் ஒரு முக்கிய பகுதியாகத் திகழ்வது செட்டி நாடு. சுமார் 120 ஆண்டுகளுக்கு முன்னர் செல்வச் செழிப்பிலும், கல்வி கேள்விகளிலும், தானதர்மங்கள் செய்வதிலும் திருப்பணி செய்வதிலும் சிறப்புடன் விளங்கிற்று செட்டி நாடு.

செட்டி நாட்டின் முக்கிய நகரங்கள் இரண்டு: ஒன்று காரைக்குடி; மற்றொன்று தேவகோட்டை. மனிதன் மன நிம்மதி பெற்று மேன்மை அடைந்து வீடுபேறு பெறுவதற்கு, பொருட்செல்வம் மட்டும் போதாது என்னும் அரிய பெரிய உண்மையைக் கண்டறிந்த ஆன்ம ஞானிகள் இந்த இரு நகரங்களிலும் பிறந்திருக்கிறார்கள். கோவிலூர் மடத்தை நிறுவி, அதில் முதல் பட்டமாக எழுந்தருளி, ஆன்மீக ஞானத்தைப் பரப்பிய ஸ்ரீலஸ்ரீ ஆண்டவர் காரைக்குடியில் பிறந்தவர்கள். இவர்கள் பிறந்த நகரக் கோவில் பிரிவு பிள்ளையார் பட்டி.

இவர்களுக்குப் பின் அடுத்து அடுத்துப் பட்டத்துக்கு வந்த ஸ்ரீ—ல—ஸ்ரீ பெரிய துறவு ஆண்டவரும், ஸ்ரீ-லஸ்ரீ- சிதம்பர சுவாமிகளும் தேவ கோட்டையில் ஒரே குடும்பத்தில் பிறந்தவர்கள், இலுப்பைக்குடி என்னும் நகரக் கோயில் பிரிவைச் சேர்ந்தவர்கள். ஒரே குடும்பத்தில் பிறந்த இருவர் ஞான நாட்டம் கொண்டு, துறவு நெறியைத் தழுவி துறவிகளாய் வாழ்ந்தனரென்றால், இது சரித்திர ஏடுகளில் மிக அரிதாகவே காணக்கூடிய அரிய தொரு நிகழ்ச்சி ஆகும். இந்த நிகழ்ச்சி அன்று நிலவிய காலச் சூழ்நிலையையும், அவர்கள் இருவரும் பிறந்த குடும்பத்தின் சீலத்தையும் எடுத்துக் காட்டுகின்றது. செல்வச் செழிப்பு மட்டும் ஒருவனுக்கு மேன்மையைக் கொடாது என்னும் பேருண்மை ஒன்றைத் துறவு ஆண்டவர் வாழ்க்கையிலிருந்தும் கருணாநிதி சுவாமிகள் வாழ்க்கையிலிருந்தும் நாம் தெரிந்து கொள்கிறோம்.

ஸ்ரீ-ல-ஸ்ரீ ஆண்டவர், துறவு சுவாமிகள், கருணாநிதி சுவாமிகள் ஆகிய மூன்று மகான்களும் நகரத்தார் சமூகத்தில் பிறப்பதற்கு முன்னர், செட்டிநாட்டுப் பகுதிகளில் ஆன்மிக நாட்டமும் ஈடுபாடும் குறைவாய் இருந்தன என்பதைத் துறவு ஆண்டவரின் சீடரான சொர்ணநாதபுரம் பழநியப்ப ஐயா * அவர்கள் 'மடம் உண்டோ சிவாலயம் மிகுதி உண்டோ' என்ற பாடலில் குறிப்பிட்டுள்ளார்கள்.

கோவிலூர் ஸ்ரீ-ல-ஸ்ரீ ஆண்டவர் அவர்கள் தோன்றுவதற்கு முன்னே, செட்டி நாட்டுப் பகுதிகளில் மடங்கள் கிடையாது. ஆன்மிகத்தில் நாட்டம் இல்லை. உதாரம் முதலிய தரும சிந்தனைகள் இல்லை. அடியார் குழாமும் இல்லை. சத்திரம் இல்லை; நந்தவனம் இல்லை. நால்வர் தமிழைப் படிப்பவர்களும் இல்லை. என்று ஐயா அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். இதிலிருந்து அன்று செட்டி நாட்டில் நிலவிய சூழ்நிலையையும் மனநிலையையும் நாம் தெரிந்துகொள்ள முடிகிறது.

நகரத்தார்களிடையே அறுபத்து மூவர் மடத்துச் சொக்கலிங்க ஐயா, வயிநாகரம் ராமநாதன் செட்டியார், பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் போன்ற பிரபலமான சைவ சித்தாந்திகள் தோன்றி இருக்கிறார்கள். அதேபோல ஸ்ரீ-ல-ஸ்ரீ ஆண்டவர், ஸ்ரீ-ல-ஸ்ரீ பெரிய துறவு சுவாமிகள், ஸ்ரீ-ல-ஸ்ரீ கருணாநிதி சுவாமிகள் போன்ற பிரபலமான வேதாந்திகளும் தோன்றி இருக்கிறார்கள். நகரத்தார் சமூகத்தினர் பக்தி நெறியையும் ஞான நெறியையும் ஆன்மீகத்தின் இரு கண்

* சொர்ணநாதபுரம் பழநியப்ப ஐயா என்பதும் சேந்தினி பழநியப்ப ஐயா என்பதும் ஒருவரையே குறிக்கும்.

-களாக மதித்துப் போற்றி இருக்கிறார்கள் என்பது இதிலிருந்து தெரிகிறது.

கோவிலூர் மடத்தில் இரண்டாவது பட்டத்தில் எழுந்தருளி இருந்த துறவு ஆண்டவர் தேவகோட்டையில் பிறந்தவர்கள். தந்தையின் பெயர் வினைதீர்த்தான் செட்டியார்; தாயார் பெயர், முத்தாத்தாள் ஆச்சி.

இவர்களுக்கு இரண்டாவது மகனாகப் பிறந்தார் துறவு ஆண்டவர். இவர்களுடைய பிள்ளைத் திருநாமம் அருணாசலம். இவர்கள் 1815ம் ஆண்டு பிறந்தார்கள்.

ஒரே குடும்பத்தில் பிறந்த இருவர்—அதாவது துறவு ஆண்டவரும் கருணாநிதி சுவாமிகளும்—துறவு நெறியைத் தழுவியது அவர்கள் தாய் தந்தையர் செய்த பூர்வ புண்ணிய விசேஷம் என்றுதான் கூற வேண்டும்.

துறவு ஆண்டவரும் கருணாநிதி சுவாமிகளும் திருமணம் செய்து கொண்டு, இல்லற வாழ்க்கை வாழ்ந்து, வாலிபப் பருவத்திலேயே துறவு நெறியைத் தழுவி உள்ளார்கள். சங்கர மட சம்பிரதாயத்தை ஒட்டி, திருமணம் செய்து கொள்ளாமல் நோடியாய துறவு நெறியில் இவர்கள் இருவரும் செல்லவில்லை.

திருமணம் செய்து வைத்த பின்னர் தங்கள் மகன் அருணாசலத்தை வாணிபம் செய்யும் பொருட்டு, பெற்றோர் திருநெல்வேலிக்கு அனுப்பி வைத்தார்கள்.

திருநெல்வேலியில் கண்டனூர் அருணாசலம் என்பவரைத் தேவகோட்டை அருணாசலம் சந்தித்தார். கண்டனூர் அருணாசலம் துறவில் நாட்டமுடையவராய் இருந்தார். அதேபோல, தேவகோட்டை அருணாசலமும் இருந்ததால், இருவருக்கும் இடையே ஏற்பட்ட நட்பு ஆன்மிகத் தொடர்புள்ள ஒரு நட்பாக மலர்ந்து நெடுநாள் வரை நீடித்தது,

இருவரும் கோவிலூரை அடைந்து ஸ்ரீ-ல-ஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவரின் சீடராகி அவரிடம் வேதாந்த நூல்களைப் பாடம் கேட்டார்கள். அதன் விளைவாக இருவரிடமும் துறவற உணர்வு மிகுதியாயிற்று. அப்போது தேவகோட்டை அருணாசலத்துக்கு வயது 19. செல்வச் செழிப்புள்ள ஒரு குடும்பத்தில் பிறந்த ஒருவருக்கு 19 வயதில் துறவு மனப்பாங்கு உண்டானது, பழவினைப் பயன் என்றே நினைக்கத் தோன்றுகிறது.

துறவில் நாட்டம் கொண்டிருந்த இந்த இருவரும் தங்கள் குரு முத்துராமலிங்க தேசிகரின் அனுமதி பெற்று, நெடுங்குடி என்னும் ஊரில் இருக்கும் சிவாலயத்திலுள்ள தட்சிணாமூர்த்தி சந்நிதியில் துறவு பூண்டு, காவி உடை தரித்துச் சிதம்பரம் சென்றனர். தேவகோட்டை அருணாசலத்துக்குப் பெரிய துறவு என்றும், கண்டனூர் அருணாசலத்துக்குச் சின்னத் துறவு என்றும் பெயர்கள் ஏற்பட்டன.

சின்னத்துறவு ஆண்டவர் சிதம்பரம் வடகோபுர வாயிலில் தங்கி, மௌனத்தைக் கடைப்பிடித்துத் தவம் செய்தார். பெரிய துறவு சுவாமிகள் சிதம்பரம் கேணி மடத்தில்* தங்கி தவம் தியானம் முதலியவற்றைச் செய்து வந்தார்கள். ஆலய வழிபாட்டின்போது இருவரும் சந்திப்பது வழக்கம்.

இருவரும் கையில் பிச்சை வாங்கி உண்டு வாழ்ந்தார்கள். ஒரு வீட்டின் முன் நின்று கைகளைத் தட்டி ஓசை உண்டாக்கி இருவரும் பிச்சை கேட்பர். இல்லத்தரசிகள் அளிக்கும் பிச்சையை உண்டு திருப்தி அடைவர்.

வழக்கப்படி ஒரு நாள் பெரிய துறவு சுவாமிகள் ஒருவீட்டின் முன் நின்று கைதட்டிப்

---

*** கேணி மடம்**

இது சிதம்பரத்திலுள்ள பழமையான மடங்களில் ஒன்றாகும்; சுண்ணாம்புக்காரத் தெருவில், செல்வி அம்மன் கோவில் ஓரமாக அமைந்தது.

கோவிலூர் ஆண்டவர் தம் குருவின் பெயரால் பொருள்வைத்த சேரியில் மடம் நிறுவியபோது, கேணி மடத்துத் துறவி ஒருவரையே மடாதிபதியாக நியமித்தார்.

துறவு ஆண்டவர் சின்னத் துறவு சுவாமிகள் வரலாறுகளிலும் கேணி மடம் இடம் பெறுகிறது. அவர்கள் தில்லைத் தலத்தில் யாத்திரை மேற்கொண்டபோது இங்கேயே தங்கியிருந்தனர்.

கோவிலூர்ப் பரம்பரை ஸ்ரீ நித்தியானந்த சுவாமிகள் சமாதி இந்த மடத்தில் உள்ளது.

—பதிப்பாசிரியர்

பிச்சை கேட்டார். அடுப்பில் சாதம் வெந்து கொண்டிருந்தது. வீட்டு அம்மையார் வந்து பார்த்தபோது, துறவு சுவாமிகள் வெளியே நின்று கொண்டிருந்தார். இதைக் கவனித்த அம்மையார் பவ்வியமாக "சுவாமிகளே! கொஞ்சம் பொறுத்தருள வேண்டும். அமுது எடுத்து வருகிறேன்" என்று சொல்லிவிட்டு உள்ளே சென்றார். காக்க வைக்கக் கூடாது என்ற கருத்தில் விரைவில் திரும்பி அதிக சூட்டுடன் இருந்த அன்னத்தைச் சுவாமிகளின் கையில் படைத்தார். சூடு தாங்காது, அந்த அன்னத்தைச் சுவாமிகள் சுவரில் வீசி எறிந்தார். சிறிது நேரத்துக்குப்பின் சுவரில் ஒட்டியிருந்த சாதத்தை வழித்து பொறுமையுடன் சுவாமிகள் உண்டார். இதைக் கவனித்த இல்லத்து அரசி பதறிவிட்டாள். தான் செய்த அபசாரத்தை பொறுத்து அருளுமாறு இறைஞ்சினாள். அதற்குச் சுவாமிகள் "தாயே! உம்மீது குற்றம் இல்லை. காலதாமதம் ஏற்படக் கூடாது என்ற கருத்தில் நீ சூட்டுடன் அமுது படைத்தாய். அன்பின் வயப்பட்டுச் செய்யும் செயல் குற்றமாகாது" என்று கூறினார்.

இதன் பின்னர் இறைவழிபாட்டிலும் தியானத்திலும், சீடர்களுக்குப் பாடம் கற்பிப்பதிலும் அடியவர் தொண்டிலும் சுவாமிகள் ஈடுபட்டார்கள்.

பெரிய துறவு சுவாமிகள் கட்டழகு வாய்ந்த மேனியுடையவர். பொன்னை நிகர்த்த அவருடைய திருமேனி, தவத்தின் காரணமாகவும் வாலிபப் பருவத்தின் காரணமாகவும் பிறர் உள்ளத்தைக் கவரும் பேரழகுடன் விளங்கிற்று. ஒரு முறை ஒரு விலைமாதின் வீட்டின் முன் துறவு சுவாமிகள் பிச்சைக்காக நின்றபோது, சுவாமிகளின் வடிவழகைக் கண்டு அந்த விலைமாது தனது உள்ளத்தைப் பறி கொடுத்தாள். ஆகவே அவள் துறவு சுவாமிகளிடம் 'சுவாமிகளே! வீட்டுக்குள் வந்து அமுது அருந்துங்கள்" என்று விண்ணப்பித்துக் கொண்டாள். எவர் வீட்டிலும் உள்ளே சென்று அமுது உண்ணும் பழக்கம் இல்லாத துறவு சுவாமிகள் கணிகையின் மனப் போக்கைத் திருத்த எண்ணி, கணிகையின் விருப்பப்படி வீட்டுக்குள் போனார்கள். சுவாமிகள் உள்ளே வந்ததும் கணிகை கதவைச் சாத்தித் தாளிட்டாள். உள்ளே சென்ற சுவாமிகளோ ஆசனத்தில் அமர்ந்து, தியானம் செய்யலானார். நீண்ட நேரமாயிற்று. கணிகையின் விருப்பம் கைகூடவில்லை. தனக்குத் தீமை நேருமோ என்று அஞ்சிய கணிகை கதவைத் திறந்துவிட்டாள். சுவாமிகள் மௌனமாக வீட்டை விட்டு வெளியே வந்தார்கள். அன்று முதல் வீடு தேடிச் சென்று பிச்சை கேட்பதைத் துறவு சுவாமிகள் நிறுத்திக்கொண்டார்கள். 'இருக்கும் இடம் தேடி என் பசிக்கே அன்னம் உருக்கமுடன் கொண்டு வந்தால் உண்பேன்' என்னும் துறவு ஒழுக்கத்தைத் துறவு சுவாமிகள் கடைப்பிடித்தார்கள்.

ஒரு சமயம் பெரிய துறவு சுவாமிகள் குளத்தில் நீராடி விட்டு, ஈர வேட்டி காயும் பொருட்டு, தமது இரு கைகளிலும் அதைப் பிடித்துக் கொண்டு நின்றார்கள். அப்போது காற்று வேகமாக வீசியதால் அவர் கையில் இருந்த வேட்டி காற்றில் பறந்து போய்விட்டது. "நான் வேட்டி தரித்திருப்பது திருவருள் சம்மதம் இல்லை போலும்" என்று கருதி அன்று முதல் கோவணத்தை மட்டும் கட்டிக் கொண்டு துறவு சுவாமிகள் சஞ்சரித்தார்கள். மரங்களிலும் காடுகளிலும் சஞ்சரித்தபோது சமணத் துறவிகளைப்போல் பெரிய துறவு சுவாமிகள் திகம்பரராய்ச் சஞ்சரித்திருக்கிறார்கள்.

(1) நித்தியானந்த சுவாமிகள் (2) வளவனூர் சண்முக சுவாமிகள் (3) திருநெல்வேலி சுப்பிரமணிய சுவாமிகள் (4) மதுரை சுப்பராய சுவாமிகள் (5) பாகனேரி முத்துக்கருப்ப ஐயா, (6) மதுரை மெய்யப்ப ஐயா (7) சொர்ணநாதபுரம் பழநியப்ப ஐயா ஆகியோர் இவரிடம் பாடம் கேட்ட சீடர்கள் ஆவர். குருவிடம் சீடர்கள் எப்படி நடக்க வேண்டும் என்பது குறித்து சீடாச்சாரம் என்னும் ஒரு நூலைப் பெரிய துறவு சுவாமிகள் தொகுத்துள்ளார்கள். கைவல்லிய நவநீதம் என்றும் வேதாந்த நூலுக்கு பதம் சாரம் எழுதியுள்ளார்கள்.

பிரபல சைவ சித்தாந்தியான, யாழ்ப்பாணம் நல்லூர் ஆறுமுக நாவலர் அவர்கள், துறவு சுவாமிகளைச் சந்தித்து உரையாடி இருக்கிறார்கள். சுவாமிகளின் விருப்பப்படி நாள்

தோறும், ஆறுமுக நாவலர் கந்தபுராணச் சொற்பொழிவுகள் நிகழ்த்தி உள்ளார்கள்.

சின்னத் துறவு சுவாமிகள் காசியில் பரிபூரணம் அடைந்தபின், பெரிய துறவு சுவாமிகள் கோவிலூர் மடத்துக்கு வந்து தமது குரு ஸ்ரீ-ல-ஸ்ரீ முத்துராமலிங்க சுவாமிகளுக்குத் தொண்டு செய்து கொண்டிருந்தார்கள்.

தமது அந்திம காலத்தை அறிந்திருந்த முத்துராமலிங்க சுவாமிகள், பெரிய துறவு சுவாமிகளிடம், "அருணாசலம் இன்று முதல் மடத்து நிர்வாகத்தைச் செய்து வா" என்று கட்டளை இட்டார்கள். அதன்படி பெரிய துறவு சுவாமிகள், கோவிலூர் மடத்து நிர்வாகத்தைக் கவனித்து வந்தார்கள்.

1847ம் ஆண்டு ஸ்ரீ-ல-ஸ்ரீ முத்துராமலிங்க ஞான தேசிகர் பரிபூரணம் எய்தினார்கள்.

அதன் பின்னர், தமது 32வது வயதில் அருணாசல தேசிகர் (பெரிய துறவு ஆண்டவர்) கோவிலூர் மடத்தின் இரண்டாவது பீடாதிபதியாக அமர்ந்து, சீடர்களுக்கு ஆன்மிக நெறிகளைப் போதித்து வந்ததோடு, மடத்து நிர்வாகத்தையும் கவனித்து வந்தார்கள்.

ஞான முதிர்ச்சியின் விளைவாக நீண்ட காலம் பெரிய துறவு ஆண்டவர் பீடாதிபதியாக இருக்க விரும்பவில்லை. சுமார் ஒன்றரை ஆண்டுக்காலம் பதவியில் இருந்த பின் தமது 34வது வயதில் பெரிய துறவு ஆண்டவர் மடத்தின் ஆட்சிப் பொறுப்பை, தன் உடன் பிறந்த தம்பி கருணாநிதி சுவாமிகளிடம் ஒப்படைத்துவிட்டு, பரிபூரணம் எய்தினார்கள். ஆதிசங்கர பகவத் பாதர் ஞான முதிர்ச்சியின் விளைவாக தமது 32வது வயதில் பரிபூரணம் எய்தினார்கள். அவர்களைப் பின்பற்றி, துறவு ஆண்டவர் அவர்களும் தமது 34வது வயதில் பரிபூரணம் எய்தி இருப்பது, இங்கே கவனத்தில் கொள்ளத்தக்கது.

ஆண்டவரிடமும் துறவு சுவாமிகளிடமும் வேதாந்தம் கற்ற சொர்ணநாதபுரம் பழநியப்ப ஐயா அவர்கள் அந்த மூன்று ஆண்டவர்களையும் குறித்து, தனித்தனியே பாடல்கள் பாடியுள்ளார்கள். பெரிய துறவு ஆண்டவர் பரிபூரணம் எய்திய பின் இரங்கல் பா ஒன்றும் பாடி இருக்கிறார்கள். அந்த நான்கு பாடல்களும் கீழே தரப்பட்டுள்ளன.

வெய்யவினை தீர்க்கும் அடி; மேலோர் வணங்கும் அடி
ஐயம்திரிபை அகற்றும் அடி—மெய்யன்பர்
உய்யும்நெறிகாட்டுஅடி; ஒப்பில் கழனியில் வாழ
ஐயன் முத்துராமன் அடி. 1.

இன்பம் அளிக்கும் அடி; என்வினையைநீக்கும் அடி
துன்பங்கள் : எல்லாம் துலைக்கும் அடி—அன்பார்
கருணாகரனும் கழனி நகர் வாழும்
அருணா சலன்சே வடி. 2.

மதம்படுகடைமினுர் தம் மையனுள் படாமல் ஈசன்
பதம்பெற எனக்கு மேன்மை பாலிக்கும் அருளைக் குன்றின்
இதம்பெறு துணைவன் ஆகி என் உயிர்த்துணையுமான
சிதம்பரம்பெரியோரைசெம்பொற் சேவடி சென்னி சேர்ப்போம். 3.

பெரிய துறவு ஆண்டவர் பரிபூரணம் எய்தியபின் சொர்ணநாதபுரம் பழனியப்பா ஐயா அவர்கள் பாடிய இரங்கல் பா வருமாறு:

செங்கமல மலர் போன்ற முகம்தான் எங்கே?
சிறியனைவா என்றழைத்த திருவாய் எங்கே?
அங்கமெலாம் நீறணியும் அழகு எங்கே?
அரியவெண் கோவணம் கட்டும் அரைதான் எங்கே?
சங்கையறப்பொருள் ஓதும் சமர்த்தும் எங்கே?
தாயினும் மிகச் சிறந்த தயைதான் எங்கே?
மங்கயரை மிகப் பழிக்கும் கவிதான் எங்கே?
வளர் அருணாசலமுன்போல்வந்து ஆள்வாயே!

திருவாவடுதுறை ஆதீன மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள் காரைக்குடி கு மெய்யப்ப செட்டியார் அவர்கள், திரு. கோபால அய்யா அவர்கள் ஆகியோர் ஸ்ரீ-ல-ஸ்ரீ துறவு ஆண்டவரின் பெருமையைக் குறித்துப் பாடல்கள் பாடி உள்ளார்கள். ★

சொர்ணநாதபுரம் பழநியப்ப ஐயா அவர்கள் சமாதி, கோவிலூர் மடத்தை அடுத்துள்ள பனங்கொல்லையில் இருக்கிறது. இந்தக் கட்டுரை ஆசிரியர் அ. லெ. நடராஜன், பழநியப்ப ஐயா அவர்களின் மகன் வழிப்பேரன் ஆவார்.

# 3

# தவத்திரு கருணாநிதி சுவாமிகள் அவர்கள்

## (1849 - 1865)

"கவிஞர்கோ" "பொற்கிழிக் கவிஞர்"
அரு. சோமசுந்தரன், M. A., B. T.
தேவகோட்டை

புகழ்மிக்க கோவிலூர் மடத்தின் புனிதமான இரண்டாவது பட்டத்தில் வீற்றிருந்த துறவாண்டவர்க்குப் பிறகு அவருடைய உடன் பிறந்த தம்பியாகிய கருணாநிதி சுவாமிகள் கோவிலூர் மடத்தின் மூன்றாவது பட்டமாக எழுந்தருளினார்கள். இப்படி அண்ணனும் தம்பியும் அடுத்தடுத்து ஓர் ஆதீனத்தின் தலைவர்களாகப் பட்டமேற்ற பெருமை கோவிலூர் ஆதீனத்திற்கே உரியதாகும்.

கருணாநிதி சுவாமிகள் தேவகோட்டையில் கி. பி. 1812 ஆம் ஆண்டில் வினைதீர்த்தான் செட்டியார் என்பவருக்கும் முத்தாத்தாள். ஆச்சிக்கும் நன்மகவாக அவதரித்தார்கள். இவர்களது இயற்பெயர் சிதம்பரம் என்பதாகும்.

கருவிலேயே திருவுடைய சிதம்பரம் அவர்களுக்கு இயல்பிலேயே துறவுள்ளம் அமைந்திருந்தது. ஆகவே அவர்களுடைய அருள் நோக்கம் கோவிலூரின்பால் திரும்பியது. தமது அண்ணனாகிய துறவாண்டவரைப் பின்பற்றிச் சிதம்பரம் அவர்களின் பற்றற்ற உள்ளமும் கோவிலூர் ஆதீனத்தின்பால் பதிந்ததில் வியப்பில்லை. அடிக்கடி சிதம்பரம் அவர்கள் கோவிலூருக்கு வந்தார்கள். துறவிகளுடன் மனம் கலந்து பழகினார்கள். அவ்வப்பொழுது வேதாந்த சாஸ்திரக் கடலில் மூழ்கித் திளைக்கும் வாய்ப்புக் கிட்டியது. அத்துடன் முத்துராமலிங்க ஞானதேசிகர் அவர்களிடம் 12 ஆண்டுகள் தோத்திர சாஸ்திர நூல்களைத் தொடர்ந்துபயிலும் பெரும்பேறும் வாய்த்தது.

பற்றற்ற சிதம்பரம் அவர்கள் பேரும் ஊரும், சுற்றமும் சூழலும் துறந்து கோவிலூர் ஆதீனத்திலேயே பிறகு ஒன்றிவிட்டார்கள். அப்படி ஒன்றிய ஆண்டு கி. பி. 1848 ஆகும். அப்பொழுது அவர்களுடைய வயது 36 ஆகும். துறவு பூண்ட சிதம்பரம் அவர்கள் கருணாநிதி சுவாமிகள் எனும் திருப்பெயர் பூண்டார்கள்.

கி. பி. 1849ஆம் ஆண்டில் கருணாநிதி சுவாமிகள் தமது 37 ஆம் வயதில் கோவிலூர் ஆதீனத்தின் மூன்றாவது ஆதீனகர்த்தராகப் பட்டத்திற்கு வந்தார்கள். அது முதல் 11 ஆண்டுகள் நேமத்தான்பட்டி ஐயா என்ற பழநியப்ப சுவாமிகளும், கோட்டையூர் ஐயா என்ற அண்ணாமலை சுவாமிகளும் கருணாநிதி சுவாமிகளுக்கு உறுதுணையாக இருந்து 11 ஆண்டுகள் கோவிலூரில் வேதாந்தப் பாடங்களைச் சீரும் சிறப்புமாக நடத்துவித்தனர்.

தவத்திரு கருணாநிதி சுவாமிகள் தமது அருளாட்சிக் காலத்தில் செய்த திருப்பணிகள் அளவிடற்கரியன. அவற்றுள் சில வருமாறு : சிதம்பரம் மூலஸ்தானம் ஈஸ்வரன் கோவில் கும்பாபிஷேகம் சிறப்பாக நடத்துவித்தார்கள். மதுரையில் உள்ள பழைய சொக்கநாதர் மீனாட்சி அம்மன் கோவில் கும்பாபிஷேகமும் செய்வித்தார்கள். கோவிலூரில் உள்ள ஆண்டவர் கோயில் கல் திருப்பணியும் ?களத்தூரில் உள்ள சிவன் கோயில் கல் திருப்பணியும் இவர்களது ஒப்பற்ற பெரும் பணியாகும். மேலும் கோவிலூரில் உள்ள மாபெரும் திருக்குளமும், அழகான ?மையமண்டபமும் இவர்களது கனத்த திருப்பணிகளாகும். கோவிலூரில் உள்ள சோமாஸ்கந்தருக்கு நீலநிறக் கல்லால் எழில் மிகும் மண்டபம் ஒன்றும் அமைத்தார்கள். காரைக்குடிக்கும் கோவிலூருக்கும் இடையே உள்ள இரண்டு மைல்

சாலை நெடுகிலும் இன்றும் பசுமையாகத் திகழ்ந்து நிழல்பரப்பும் தென்னை மரங்களைப் பயிராக்கி உருவாக்கிய பெருமை கருணாநிதி சுவாமிகளுக்கே உரியதாகும். கருணாநிதி சுவாமிகள் ஆழ்ந்த கல்வியும், அரிய சொல்வன்மையும், கருணை உள்ளமும், கற்றறிந்தார் நட்பும் பெற்றிருந்தார்கள். அவர்களது வாக்குவன்மை பிரசித்தி பெற்றதாகும். அதன் காரணமாகவே அவர்கள் கருணாநிதி என்ற சிறப்புப் பெயருக்கு உரியவர்கள் ஆனார்கள்.

கருணாநிதி சுவாமிகள்
"பிரும்ம நாமாவளி,"
"குரு ஸ்துதி குசமாஞ்சலி"

எனும் நூல்களை இயற்றி வெளியிட்டுள்ளார்கள்

எல்லையற்ற கருணையும், இணையற்ற தெய்வாம்சமும் பெற்றிருந்த கருணாநிதி சுவாமிகள் கோவிலூர் மடத்தின் வளர்ச்சிக்கும், வேதாந்தக் கருத்துக்களின் மலர்ச்சிக்கும் அரும் பணிகள் பல புரிந்து கி. பி. 1865 ஆம் ஆண்டில் இறைவன் திருவடி நீழலை எய்தினார்கள்.

இவர்களின் பெருங்கருணைத் திறத்தை நன்கு கண்டு மகிழ்ந்த மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் இவர்களைப் போற்றிப் பாடிய பாடல் வருமாறு :

மேலாய துறவினுக்கோர் துணையாகி உள்ளான்
விரிந்தபலபுவனமுங் கானிற்சோதி கண்டோன்
நாலாய மறைமுடியின் பொருள்விளங்க எடுத்து
நலமான வர்க்கருளித் தன்மயமாக் கிடுவோன்
பாலாய சிவதருமம் பற்றறப்பா லிப்போன்
பரப்பிரம சுவாநுபூதி யிற்சிறந்த மேலோன்
நூலாய யாவுமுணர்ந் தவர்நடுவண் எடுத்து
நுவலுமொரு சிதம்பரதே சிகன் எனுமா
பெரியோன்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இணையற்ற பெரும்புலவராக விளங்கிய மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்களின் பாடல் மூலம் இலக்கியத்தில் இடம்பெற்ற கருணாநிதி சுவாமிகள் தமது இணையற்ற திருப்பணிகள் மூலம் கோவிலூரில் இன்றும் சாகாவரம் பெற்றுத் திகழக் காண்கிறோம்.

வினைதீர்த்தான் முத்தாத்தாள் பெற்றபிள்ளை
ஆகி
வேதங்கள் தேர்க்கதனித் துறவறத்தை ஏற்று
மனைநீங்கிக் கோவிலூர் மடாதிபதி ஆகி
மாமுனிவர் முத்துராமலிங்கரிடம் கற்றுப்
பலவயளவு திருப்பணிகள் பார்வியக்கச் செய்து
பரமனருள் பெற்றகரு ணாநிதியாம் சுவாமி
சுனையிலுறு தேமலரோ! சொற்றமிழின் சாறோ
சொக்கேசர் மீனாட்சி தவப்பயனோ வாழ்க!!

என்று அடியேனும் ஒரு பாடல் பாடிக் கருணாநிதி சுவாமிகளின் பாதகமலத்தில் வைத்துப் பணிகிறேன். ★

---

## கோவிலூர்ச் சிதம்பர ஐயா என்ற சிதம்பர ஞானதேசிகர்

(கட்டளைக் கலித்துறை)

சீரார் கழனிச்சிதம்பர தேசிகச் செய்கையால்
ஏரார் தரவருள் செய்மா நிதியையென் னென்
றுரைக்கேன்
நீரார் சிந்தாமணி யென்கோ விரண்டு நிதிய
மென்கோ
ஆரார் தரவறி வாரவன் பேரரு ளாயினதே.

இது கோவிலூர்ப் புராணம் இயற்றிஅரங்கேற்றிய பின்னர், சிதம்பர ஐயா சன்மானம் செய்தபொழுது பாடியது. (கழனி–கோவிலூர்)

கொச்சக் கலிப்பா

சிதம்பரவு பிரமசபையிடத்தினிது வீற்றிருந்து
முதம்பரவப் பொழிதருகொண் மூவெனச்
சொன் மழைபொழிந்து
பதம்பரவு மடியவர்க்குப் பாசமொழித் தின்
பருளும்
சிதம்பரதே சிகவினிது திருக் கண்ணால் நோக்கு
கவே.
—மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை.



4

# இராமசாமி ஞான தேசிகர் அவர்கள்

## (1876—1883)

சுவாமிகள் 1838—ல் காரைக்குடியில் நகரத்தார் மரபில் பிறந்து பொருள் வைத்த சேரியிலும், கோவிலூரிலும் சாத்திரங்களைப் படித்தார்கள்.

இவர்கள் 38-வது வயதில் 1876—ல் கோவிலூர் மடாலயத்தில் அருளாட்சி செய்யும் பொறுப்பை ஏற்றார்கள்.

இவர்களுடைய மாணாக்கர் பலர். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் சாக்கோட்டை வீரப்பசுவாமிகளும் காளையார் கோவில் செல்லப்ப சுவாமிகளும் ஆவர்.

இராமசாமி ஞான தேசிகர் அவர்கள் தங்கள் காலத்தில் ஆண்டவர் கோயிலைச்சுற்றிப் புதிதாக மதில் சுவர் கட்டினார்கள். அருள்மிகு கொற்றவாள் ஈசர் கோயிலில் அஷ்டலட்சுமி மண்டபம் கட்டினார்கள். கோவிலூர் மடாலயத்தில் உணவு படைக்கும் மண்டபத்தை அமைத்தவர்கள் இவர்களே ஆவார்கள்.

ஏழு ஆண்டுகட்கு மேல் அருளாட்சி செலுத்திய பிறகு 1883—ம் ஆண்டில் மார்கழித் தேய்பிறைச் சஷ்டியில் சுவாமிகள் பரிபூரணம் அடைந்தார்கள்.



5

# திருக்களர் ஆண்டவர் அவர்கள்

## (1883-1911)

கோவிலூர் மடாலயத்தில் ஐந்தாவது பட்டமாக எழுந்தருளியவர்கள் தவத்திரு வீரசேகர ஞான தேசிக சுவாமிகள் ஆவார்கள். இவர்களுக்குத் திருக்களர் ஆண்டவர் என்னும் சிறப்புப் பெயர் நின்று நிலவுகிறது. வீரப்ப சுவாமிகள் என்றும் இவர்களைக் கூறுவர்.

பிறப்பு : 1848 கிலக ஆவணி 12
பிறந்த ஊர் : புதுவயல், இராமநாதபுர மாவட்டம்

தாய் : உமையாள் ஆச்சி.

தந்தை : அருணாசலம் செட்டியார்.

இளமை : புதுவயலில் அழகப்ப ஐயா என்ற வேதாந்தி ஒருவர், 'பட்டணத்துப் பிள்ளையார் பாடல்கள்,' தத்துவராய சுவாமிகளின் அடங்கன் முறையின் ஒரு பகுதியான அஞ்ஞவதைப் பரணி என்ற நூல்களை இவர்களிடம் கொடுத்துப் படிக்கச் சொன்னார்கள். அவற்றைப் படித்ததும், துறவியாக வேண்டும் என்ற ஆர்வம் வீரசேகரருக்கு உண்டாயிற்று. அழகப்ப ஐயா விரும்பியவாறு இவர்கள் கோவிலூரை அடைந்தார்கள்.

ஆசிரியர் : 'கருணாநிதி' என்னும் சிதம்பர ஞான தேசிகர்.

காவியாடை அணிந்து துறவியான தலம் : கீக்கல்-பொருள் வைத்த சேரி உகந்த லிங்க ஞான தேசிகர் சந்நிதி.

துறவுக்கு உரிய மந்திர உபதேசம் செய்து வைத்தவர் : சட்டையப்ப சுவாமிகள்.

துறவியான பிறகு பாடம்கேட்ட நூல்கள்: நாநா ஜீவ வாதக் கட்டளை தொடங்கி ஞான வாசிட்டம் வரை 16 நூல்கள்.

தல யாத்திரைகள் :- (பிச்சை ஏற்றுக் கால்நடையாகச் சென்ற பயணங்கள்) :-

1. கோவிலூர் முதல் காளையார்கோவில் வரை.
2. காளையார் கோவிலிலிருந்து சிதம்பரம் வரை.

தவம் :

சிதம்பரம் மௌன சுவாமிகள் மடாலயத்தில், பிச்சை ஏற்று உண்டு இடையறா நிட்டையில் ஆழ்ந்து 12ஆண்டுகள் தவம் செய்தார்கள்.

பட்டத்தில் அமர்தல் :

நான்காவது பட்டத்தில் இருந்த இராமசாமி ஞான தேசிகர் 1883ல் பரிபூரணம் அடைந்த பிறகு, வீரசேகரரை அப்பட்டத்தில் அமர்த்த, பொன்னம்பல சுவாமிகள் முடிவு செய்தார்கள். ஆனால் வீரசேகரர் அதை விரும்பவில்லை, வளவனூர் சென்று அங்குள்ள சண்முக சுவாமிகள் மடாலயத்தில் மறைந்து கொண்டார்கள். "கோவிலூர் மடத்தைப் பேண, தக்கவர் வேறு எவரும் இல்லை. நாம் கோவிலூர் மடத்தால் கடைத்தேறினோம். எனவே அந்த மடம் தொடர்ந்து புகழுடன் விளங்கச் செய்வது நம் கடமை" என்று பொன்னம்பல சுவாமிகள் வீரசேகர சுவாமிகளிடம் வலியுறுத்தினார்கள். வேறு வழியின்றி வீரசேகரர் உடன்பட்டார்.

பொன்னம்பல சுவாமிகளும் (சிதம்பரத்தை விட்டுப் புறப்பட்டு) கோவிலூரிலேயே தங்கி இராமனுக்கு இலக்குவன் போல, வீரசேகர ஞான தேசிக சுவாமிகளுக்கு உறுதுணையாக இருந்து வந்தார்கள்.

செயல் திறனும் பணிகளும் :

கோவிலூர் மடத்தை யாவரும் வியக்கும் வண்ணம் செய்த சிறப்பு இப் பெரியவருக்கு உரியது. மடாலயத்தில் பல பெரிய கட்டிடங்கள் இவர்கள் காலத்திலேயே அமைக்கப் பெற்றன. கோவிலூரிலுள்ள சிவன் கோவில் திருப்பணியைச் சிறப்பாக, கலை நுட்பங்கள் மல்கச் செய்து முடித்து 1908-ஆம் ஆண்டில் குட நீராட்டு விழாச் செய்தார்கள். கோவிலூரைக் கலை மலிந்த ஒரு மாதிரிச் சிற்றூர் ஆக ஆக்கியவர்கள் இவர்களே என்று தமிழ்க்கடல் சிவமணி இராய சொ. அவர்கள் எழுதியிருக்கிறார்கள்.

சுவாமிகள் கோவிலூரில் எழுப்பிய கட்டிடங்கள் முதலியவற்றில் குறிப்பிடத் தக்கவை :

1. கயிலாசக் கோட்டகை.
2. பிரம்ம சபை.
3. குரு பூசைக் கட்டு.
4. நெற் களஞ்சியம்.
5. பூ மண்டபம்.
6. ஊருணிக்குக் கற் படித்துறைகள்.
7. அடியார் பலர் இருப்பதற்குத் தனித் தனி ஆசிரமங்கள்.
8. கொற்றவாளீ ஈசுவரர் கோவிலில் பல புதிய மண்டபங்கள்.
9. திருநெல்லை அம்மன் சந்நிதி கருங்கல் இழைப்பு வேலை

சிருங்ககிரிப் பணி :

சிருங்ககிரி என்னும் சிருங்கேரி கருநாடக மாநிலத்தில் உள்ள தலம். அங்கு ஆதிசங்கரர் நிறுவிய மடம் உளது. அந்த மடத்துக்கும் கோவிலூர் மடத்துக்கும் இருந்து வந்த தொடர்பு இவர்கள் காலத்தில் மேலும் உறுதியாயிற்று.

நகரத்தார்களிடம் பணம் வசூலித்து வீரசேகர ஞான தேசிக சுவாமிகள் சிருங்க கிரியில் இருந்த சாரதரம்பாள் கோவிலைக் கருங்கல் திருப்பணியாகக் கட்ட ரூ. 50,000/ஐ (அது 1890-ஆம் ஆண்டு விலைவாசியில்-இன்றைய மதிப்பில் பத்து லட்சம் ரூபாய் ஆகும்) சிருங்கேரி மடத்திற்குக் கொடுத்தார்கள்.

திருக்களரில் திருப்பணி :

சோழ வள நாட்டில் சம்பந்தர் பாடல் பெற்ற தலம் திருக்களர். அக்கோவிலைப் புதுப்பிக்கும் வேலையை வீரசேகர சுவாமிகள் தம் திருக்கரங்களாலேயே உளிகொண்டு கொத்தி தச்சு வேலையைத் தொடங்கினார்கள். அக்

காலத்தில் நான்கு லட்சம் ரூபாய்ச் செலவில் திருப்பணி நிறைவேறியது.

## செல்வாக்கு

எதையும் சிறப்பாகவும் திறமையாகவும் செய்யும் இயல்பு சுவாமிகளிடம் இருந்தது. எனவே கோவிலூர் மடம், கோவிலூர்-சிருங்கேரி-திருக்களர் கோவில்களில் திருப்பணிகள் ஆகியவற்றிற்கு இவர்கள் பணம் கேட்டபோது மறுத்து உரைக்காமல் நகரத்தார் அனைவரும் ஈந்தனர். செட்டி நாட்டில் இவர்களுக்கு அவ்வளவு செல்வாக்கு இருந்தது. ராஜ ரிஷி என்று பெயர் பெற்றார்கள். திருக்களர்த் திருப்பணிக்கு ரூ. 4 லட்சம் வழங்கியது தவிர தனிப்பட்ட நகரத்தார்கள் திருக்களரில் சுவாமிகளின் ஆணையின் வண்ணம் பின்வரும் அறச் செயல்களைச் செய்துள்ளார்கள்.

| நன்கொடை வழங்கியகுடும்பத்தார். | அறச்செயல் | 1910-ஆம் ஆண்டு விலை நிலவரப்படி மதிப்பு ரூபாய். |
|---|---|---|
| காரைக்குடி சா. நா. அ. அழ. | 16கால் மண்டபம். | 15, 000/. |
| காரைக்குடி பழ. வெ. ராம. | இருக்கு வேத பாடசாலை | 60,000/. |
| காரைக்குடி ஆத. பழ. | எசுர்வேத பாடசாலை | 6, 000/- |
| காரைக்குடி முத்து அரு. மு. அரு<br>பாகனேரி பெரி. அழ. மு. | தேவாரப் பாடசாலையும்<br>குரு பூசை மடமும் | 70, 000/- |
| ஆத்தங்குடி சா. நா. | சாம வேத பாடசாலை | 6, 000/- |
| காரைக்குடி ஆத. மெ.<br>காரைக்குடி ஆத லெ. ஆத. | பசு மடம் | 8, 000/- |
| காரைக்குடி சா. நா. அ. சொ. | திருக்குளம் | 12, 000/- |
| காரைக்குடி ஆத. மெ.<br>காரைக்குடி ஆத. லெ. ஆத. | நந்தவனம் | 6, 000/- |
| அழகாபுரி சி. சு. | வெள்ளிக் கேடகம் | 10, 000/- |
| காரைக்குடி பழ. வெ. ராம.<br>காரைக்குடி ஆத. மெ. | அம்மனுக்குத் தங்க அங்கி | 12, 000/- |

## மாணுக்கர்கள்

திருக்களர் ஆண்டவர் அவர்களிடம் பயின்ற மாணுக்கர் பலர் ஆவர். விவரம் இம்மலரில் பிறிதோர் கட்டுரையில் காண்க.

## பரிபூரணம் அடைதல்

திருக்களரில் வைகாசி விசாக விழாவின் போது வீரசேகர ஞான தேசிக சுவாமிகள் தேர்வடம் பிடித்தபின் நடராசப் பெருமான் துர்வாச மஹரிஷிக்கு தரிசனம் அளித்த திருச்சந்நிதியில் தேர் வரும்பொழுது இருகரம் கூப்பி வழிபட்டு மகாதேவா என்று குரல் கொடுத்தவராய் இறைவனோடு இரண்டறக் கலந்து பரிபூரணம் எய்தினார்கள்.

## குருபூசை

ஆண்டுதோறும் வைகாசி விசாக நாளில் இவர்களுடைய குரு பூசை திருக்களரில் மிகச் சிறப்பாக பக்தியுடன் கொண்டாடப் பெறுகிறது.

## சமாதிக் கோவில்

வீரசேகர ஞான தேசிக சுவாமிகளுடைய சமாதிக் கோயில் திருக்களரில் இவன் கோயிலுக்கு அருகே இருக்கிறது. ★

6

# அண்ணாமலை ஞானதேசிகர் அவர்கள்

## (1911-1919)

புலவர், வெ, சு. அழகப்பன், எம். ஓ. எல்., எம்.லிட்.
அழகப்பா கல்லூரி காரைக்குடி,

அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது. அதிலும் துறவும் தூய்மையும் அறிவும் ஆற்றலும் வாய்த்தவராய் இலங்கல் பெரிதும் அரிது. அதிலும் இளந்துறவியாய் இருந்து, இனிய பணிகளை நிலையாய்ச் செய்து, வடக்கிலும் தெற்கிலும் பக்தி பரவ வழிகோலியவராய் விளங்கல்—இன்னும் அரிது. அதிலும் நகரத்தார் குடியில் பிறந்து, இத்தகு செயற்கரிய செயல்களைச் செய்தவராய்ப் பொலிதல் மேலும் அரிது. இத்தகு புகழுக்கும் புண்ணியத்திற்கும் உரியரராய் ஒருவர் விளங்கினர். அவர் யார்? அவரே, அண்ணாமலை ஞான தேசிகர் இவர்கள் 49 ஆண்டுகாலம் வாழ்ந்து சைவம் தழைக்கவும் தமிழ் மேன்மை கொள்ளவும் பணி புரிந்தனர்.

### வரலாறு

சுவாமிகள், இராயவரம் நாச்சியப்பச் செட்டியாருக்கும், ஏகம்மையாச்சிக்கும் 1870 ஆண்டு மகவாய்த் தோன்றினர். தேனிபட்டிக்குப் பிள்ளை வளரச் சென்றனர். இவரைப் பிள்ளையாய்க் கூட்டிக் கொண்டவர்கள், அருணாசலம் செட்டியாரும் உமையாள் ஆச்சியுமாவர். தத்து எடுத்துக்கொண்ட தந்தையார், கோவிலூர் மடத்தில் வரப்போக இருந்ததோடு வேதாந்தம் கற்று வந்தனர். தந்தையோடு உடன் சென்று வந்த சுவாமிகள் தாமும் படித்துத்தேற விரும்பினர். ஐந்தாவது பட்டம் திருக்களர் ஆண்டவரிடம் வேதாந்தம் படித்தார்கள். அருள் நாட்டம் கொண்ட அவர்கட்கு, கல்வி கேள்விகளில் தேர்ச்சியும் கை வந்தது. நாளாக நாளாகத் துறவில் மனம் விரைந்தது. தாயின் கையிலேயே பிச்சை ஏற்று, அதாவது உடன்பாடு பெற்று—துறவியானூர்கள். அப்போது அவர்கட்கு வயது 16 மட்டுமேயாம். ஆயினும் திருக்களர் ஆண்டவர் இவர்கட்குத் துவர் ஆடை (காஷாயம்) கொடுக்கச் சம்மதிக்கவில்லை. துறவில் உறுதிப்பாடும் நிலையான மனமும் உண்டா என்பதைச் சோதிக்க விரும்பினார் போலும்!

அவரது ஆசிரியர்-ஞானவாசிட்டம் தவிர பிற எல்லா சாத்திர தோத்திர நூல்களைக் கற்பித்தார். கருவிலே திருவுடைய அவர்கள், அனைத்தையும் சாலக் கற்றுத் தேர்ந்தார்கள். துளசி தோன்றும்போதே மணக்கும் என்பது போல இவர்கள் இளமையிலேயே கல்வியில் தேர்ச்சியுற்றனர்.

பின்னர், தல யாத்திரை தொடங்கினூர்கள் காசி, நேபாளம் போன்ற தலங்கட்குச் சென்றூர்கள். காசியில், சில ஆண்டுகள் தங்கி காசிநாதரையும் விசாலாட்சியையும் தொழுதனர். அப்போதுதான் வடமொழியையும் கற்றுக் கொண்டார்கள். அதிலும் நல்ல புலமை பெற்றூர்கள். இக்கல்வி, இவர்கட்குப் பின்னர் வடமொழி நூல்களை மொழி பெயர்க்க உதவியது. வடபுலத்திலும் நகரத்தார்கள் பணி தொடர வழி வகுத்தது.

காசியோடன்றி நேபாளம், பத்திரிநாத் போன்ற தலங்கட்குச் சென்று திரும்பினூர்கள். தென்னகம் திரும்பியபின், இவர்களின் ஆசிரியர் துவராடை கொடுத்தனர். இவர்களது தூய்மை, துணிவு, செயல் ஆற்றல், கல்வி இவற்றைக் கருதி இவர்களுக்கே தலைமைப் பட்டமும் வந்தது. சூரியனுக்கு விளம்பரம் வேண்டுமா என்ன? தானே அவன் விளக்கமாய் இருப்பது போல், இவர்களின் ஆற்றல் இவர்கட்குப் பட்டம் வருமாறு ஆக்கியது,

### துறவும் தொண்டும்

**கல்விப்பணி :** 1911ல் பட்டம் ஏற்றூர்கள். அப்போது அவர்கட்கு வயது 41. இளவயது தான். இவர்கள் ஆட்சி 8 ஆண்டு நடந்தது.

இந்தக் காலத்தில் சில குருக்கள் இவர்கட்குக் குறுக்கிடு செய்தனர். கைக்குடை நிலைவை உலகில் வரவொட்டாமல் செய்துவிட இயலுமா? தடைகளைத் தகர்த்தனர். தாம் கற்றதைச் சொல்லமாட்டாதவன் "நாறு மலர்" என்றார் வள்ளுவர்: சுவாமிகளோ, பாடம் சொல்லுவதில் கவனம் எடுத்துக் கொள்வார்கள். கேட்பார் களிக்கவும் கேளாதார் வாய்ப்பிழந்தமைக்காக வருந்துமாறும் பாடஞ் சொல்லுவார்கள். ஸ்மிருதி, ஆகமம், புராணம், தருக்கம், இலக்கணம், இவை சொல்ல வல்லார்கள் அஞ்சுவதைப் பரணி என்ற நூலில் தனித் தேர்ச்சியும் முதிர்ச்சியும் கொண்டவர்கள். சொற்பொழிவு ஆற்றுவதிலும் திறமை மிக்கவர்கள்.

தாம் கற்ற வடமொழிப் புலமையை, தமிழ்ச் செடி வளர, உரமாக்கிய அறிவுமேதை நம் அடிகளாவார்கள். 18 புராணங்களையும் வட மொழியில் இருந்து, தமிழ் மொழிக்கு—மொழி பெயர்த்தார்கள். தமிழ் நூல்கள் பரவ வேண்டும் என்ற வேணவா காரணமாக அச்சகங்கள் தமது கிளைமடங்களில் ஏற்பட வழி செய்தனர். இத் தொண்டிற்காகக் காசி கானந்த சுவாமிகள், சின்னச் சுப்பையா சுவாமிகள் போன்றவர்களைத் துணையாக்கினார்கள்.

கோவிலூரில் 11 நாள் ஆடிப்பூரத்திருவிழா நடந்தபோது பேரவை (சதஸ்) கூட்டி காலைமாலை-இருவேளையும் பல அறிஞர்களையும் கலைஞர்களையும் அழைத்துப் பங்கு பற்றச் செய்து அவர்கட்குப் பொன்னும் பட்டும் வழங்கி அறிவுப்பயிர் எங்கும் தழைக்க வழி செய்தனர்.

### சமயப்பணி

திருக்களர் ஆண்டவர்க்காக "ரதம்" கட்ட ஏற்பாடு செய்தனர் எனினும் அது முற்றுப் பெறவில்லை, இவர்கள் காலத்தில்தான் கொற்றவாளீசுவரருக்குப் பள்ளியறை ரூ 60000 செலவில் கட்டப்பெற்றது. சிதம்பரத்தில் தனிச் சிறப்பான "கொஸ்துப் பாவாடை"க் கட்டளை ஏற்படுத்தினார்கள். மடத்துக்குரிய நெல்லை விற்று 50000 வரை மிஞ்சுமாறு செய்து இருப்பு வர ஏற்பாடு செய்தார்கள். துறவிகளின் உணவிற்காக நிலம் வாங்கினார்கள். திருக்களரில் 25 ஆயிரம் செலவில் மடம் கட்டினார்கள்.

### வடபுலப்பணி

சிருங்கேரியில் நரசிம்மபாரதி சுவாமிகளின் சமாதிக்குக் கோயில் எழுப்பினர். இவர்கள் காசியில் இருந்தபோது இருவருக்கும் தொடர்பிருந்திருக்கலாம். மதிப்போ நன்றியோ காரணமாதல் கூடும். சிருங்கேரியில் சாரதா தேவிக்கு கோயில் கட்டி, கும்பாபிடேகம் நடக்க ஏற்பாடு செய்தனர். அதற்குத் தாமே நேரிலும் சென்றனர். கிருட்டின இராசேந்திர மகா ராஜா, தம் அரண்மனைக்கு இவர்களை அழைத்து மரியாதை செய்தார்கள். இவர்கட்கு இருந்த செல்வாக்கையும் சிறப்பையும் சமயப் பொறையையும் இவை காட்டுமன்றோ? இவர்கள் பணி பிறருக்கு முன்மாதிரியாகும். 1919ல் பரிபூரணம் அடைந்தார்கள் சுவாமிகளின் திருவடியை வாழ்த்தி வணங்குவோம்!



## வாழ்த்து

கோவிலூர் என்றும் வாழ்க! கொற்றவா ளீசர் வாழ்க!
தாயெனும் நெல்லை யன்னை தண்ணளிக் கருணை வாழ்க!
தூயராய் மடத்தில் வாழும் துறவியர் பாதம் வாழ்க!
நேயமிக் குலடைய அன்பர் நீண்டநாள் நிறைந்து வாழ்க!

—சொ. சொ. மீ. சுந்தரம்.

# மகாதேவ ஞான தேசிகர் அவர்கள்

## (1919-1946)

எந்நாட்டினுஞ் சிறந்த நந்நாடாகியதும் எல்லா வளங்களுடன் சிறப்புற்றோங்குவதும் ஆய, தேவ கோட்டையென்னும் திவ்ய மாநகரில் ஸ்ரீ சுப்பிரமணிய செட்டியார் என்ப வரும் அன்னாரின் மனைவி சிட்டாளாச்சி என்ப வரும் எல்லா நற்பண்புகளும் நல்லொழுக்கங் களும் உடையவர்களாய் வசிட்டர் அருந்ததி யைப் போன்று தவச் சீலமுடையவராய் இனிது இல்லறம் நடாத்தி வந்தனர்.

அன்னாருக்கு இகச்செல்வத்திற்குச் செல்வ மிருந்தும் சுகச் செல்வமாகிய மகச் செல்வ மின்மையின் மனம் மிக நொந்து எல்லாம் வல்ல இறைவனை இடைவிடாது மகப் பேற்றை வேண்டி மிகவும் பிரார்த்தித்து வந்தார்கள்.

அன்னாரின் பக்தி வடிவ வேண்டுகோளுக் கிணங்கி எல்லாம் வல்ல இறைவன் திருவுள மிரங்கி புத்திரசந்தான முண்டாக அனுக் கிரகஞ் செய்தருளினர்.

அவ்வனுக்கிரக வலியால் சிட்டாளாச்சி அம்மையார் கர்ப்பந்தாங்கினர்.

கருவிலேயே திருவுடைய நம் மகாதேவ ஞானதேசிகரவர்கள் சித்திரபானு ஆண்டு சித்திரை பூரட்டாதி நாளில் அவதரித்தனர்.

அன்னார் ஐந்தாவ தாண்டில் அருந் நந்தையார் கல்வி பயில நல்லாசிரியரிடம் நன் முகூர்த்தத்தில் அமர்த்தி வைத்தார். 15 வயதில் எல்லாக் கல்வியையும், ஐயம், திரிபு, அறியாமை, என்னும் முக்குற்றங்களும் அற நன்றாகப் பயின்று பூர்த்தி செய்தனர். அன்னாருக்கு ஆவனயனைத்து மிகவும் மகிழச் செய்தனர்.

திரை கடலோடியுந் திரவியந்தேடு என் னும் ஆன்றோர் வாக்குக்கும் குலமரபுக்கும் இணங்க, கடல் கடந்து சென்று அரும் பொருள் அதிவிரைவில் ஈட்டி சில ஆண்டுகளுக்குள் தம் நாட்டுக்கு வந்து சேர்ந்தார். அன்னாருக்கு விசாலாட்சி என்ற ஒரு சகோதரியும் உண்டு.

ஷை யார் சிவானுக்கிரகத்திற் பிறந்தமை யின் சிவஞானத்தை அடைய வேண்டுமென்ற இச்சை இயற்கையாகவே அமைந்து நாள் தோறும் பெருகலாயிற்று.

தனது அருந்தந்தையார் தன் அரிய மகற்கு அரிய திருமணம் அன்போடு செய்ய வேண்டு மென்று அதிக விழைவுற்று அன்னாரிடத்தில் வினவினர்.

அதற்கு மகாதேவனார், தமக்குத் திருமணம் வேண்டாமென்று அன்போடு அறிவித்தார். அதற்குக் காரணம் சிவஞானத்தை அடைய வேண்டுமென்ற இச்சை அதிகமாக வளர்ந்து கொண்டேயிருந்ததினால்தான்.

அதற்கு அன்னாரின் தந்தையார் நம் முன்னோர் காலத்திலிருந்து வளர்ந்துவந்த குலமரபு நின்னோடு முடிவுறலாகாது ஆகை யினால் திருமணஞ் செய்து கொள்ள வேண்டு மென்று மிகவும் வற்புறுத்தினார்.

அதன் பேரில் தந்தை மொழியை வேத மொழியாகக் கருத வேண்டுமென்ற ஆன்றோர் வாக்கிற்கிணங்க ஒருவகையாக உடன்பட் டார்.

அதன் பிறகு அருந்ததியைப் போல் கற்பின் மிக்க அலமேலு என்ற பெயருடன் கூடிய அலமேலாச்சியை நன்முகூர்த்தத்தில் திருமணஞ் செய்து வைத்தார்.

கொஞ்ச நாளில் தாயுந் தந்தையும் முன் பின்னாகச் சிவபதம் அடைந்தார்கள். அன்னாரி களுக்குச் செய்ய வேண்டிய செய் கடன்கள் அனைத்தும் சிறப்புறச் செய்து முடித்தார்.

அதன்பின் ஷை அம்மையாருடன் வசிட்டரி முதலியவர்களைப் போன்று இல்லற தர்மத்தை

இழுக்கில்லாது இசைவோடு நடாத்தி வந்தனர். அன்னருக்கு அண்ணாமலையென்ற ஒரு புத்திரரும் திருநெல்லையென்ற ஒரு புத்திரியும் பிறந்தனர். அதன்பின் தனது தந்தையின் ஆணை முடிந்துவிட்டது என்று திருவுளத்தில் கருதினர்.

அதனுல் முன்னே எண்ணியபடி சிவானுபூதி ஞானத்தை அடைய வேண்டுமென்ற இச்சை தீவிரமாக வளர்ந்து அதற்குரித்தாகிய விவேகாதி சாதனங்கள் நான்கையும் அடைந்தார்.

ஆனபின் மனைவி மக்கள் அர்த்த வேடனைகள்
மூன்றில்
கானவர் வலையிற்பட்டுக் கைதப்பி ஓடும்
மான்போல்
போனவன் வெறுங்கையோடே
போகாதவண்ணஞ் சென்று
ஞான சற்குருவைக் கண்டு நன்ருக
வணங்கினனே.

என்ற ஆன்ருேர் வாக்குக்கிணங்க இல்லறத்தை விட்டுத் துறந்து, அதிவிரைவாக அடைதற்கரிதாகிய ஆண்டவன் எழுந்தருளியிருக்கும் கோவிலூரையடைந்து பெரியோரின் துணைக்கொண்டு பத்திரபலாதிகளுடன் ஷெ மடாலயத்தில் ஐந்தாவது குருமூர்த்தமா யெழுந்தருளியிருக்கும் வீரமாமுனிவரை மிகவும் அன்போடு கண்டு வணங்கி யெழுந்து வாய் பொத்தி நின்றனர்.

ஷெ குருநாதர் அன்பரின் முகத்தை ஆதரவோடு நோக்கி, அன்புடன் என் என வினவினர். ஷெ வினவிற்கு அன்பர் "அளவினாத் துன்புடைய பிறவிக் கடலிலாழ்ந்து மிகவும் வருந்தினேன். ஆகையினுல் அத்துன்பக் கடலினின்றும் கரையேற அனுக்கிரகிக்க வேண்டும்" என்று பணிவுடன் விண்ணப்பித்துக்கொண்டார்.

ஷெ அமலன் அன்பரின் முகத்தை நோக்கி அதிகாரமனைத்தும் அமைந்திருப்பதை அறிந்து சிசுவைப் போன்றும் ஆமை மீன் பறவை போலும் நோக்கித் தடவிச் சந்நிதியிலிருத்தி அனுக்கிரகஞ் செய்யத் திருவுளங்கொண்டார்.

அதுமுதல் கோவிலூர் மடாலயத்தில் ஆன்ருேர்கள் இயல்பாக நடத்திவரும் நாஞசிவவாதக் கட்டளை முதல் ஞான வாசிட்டம் ஈருக பெருமைமிக்க ஞான நூல்கள் பதினுறையும் அன்புடன் உபதேசிக்கத் திருவுளங்கொண்டு நன்னுள் நன்முகூர்த்தத்தில் நாஞசிவவாதக் கட்டளையென்றும் நூலை உபதேச மொழியாக அருளிச் செய்தனர். அதுமுதல் பதினுறு நூல்களையும் கிரமமாகப் பாட முறையில் உபதேசித்துக் கடைசி நூலாகிய ஞான வாசிட்டத்தை முடித்து கோவிலூர் மடாலயத்தில் ஆன்ருேர்கள் நடாத்திவரும் ஞான வாசிட்டஏடு வாங்கும் முறையும் சிறப்பாகச் செய்து முடித்தார்.

கோவிலூர் மரபுப்படி முதல் பாடம் ஒவ்வொன்றுக்கும் இரண்டாம் பாடம் கேட்க வேண்டும் என்ற ஆன்ருேர்கள் சம்பிரதாயப்படி, ஷெ கோவிலூர் வேதாந்த மடாலயத்தில், ஆறுவது குருமூகூர்த்தமாக எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிகர் அவர்களிடத்தில் முறையாக அந்தப் பதினுறு நூல்களையும் இரண்டாம் பாடமும் கேட்டுப் பூர்த்திசெய்தார்.

அதன்பின் தன் குருமூர்த்தமாகிய வீரசேகர முனிவரிடத்தில் அளவிலா அன்பு பூண்டு நான்குவித பணிவிடைகளையும் தன் குருநாதனுக்கு மிகவும் அன்புண்டாகும்படி அனுவளவும் குறைவில்லாது செய்து வந்தனர்.

ஷெ ஐந்தாவது குருமூர்த்தமாகிய வீரமாமுனிவர் அவர்கள் சரித்திரத்தில் திருவாய் மலர்ந்தபடி கோவிலூர் திருப்பணிகள் கும்பாபிஷேகத்தையும் திருக்களரில் திருப்பணி கும்பாபிஷேகத்தையும் சிறப்புடன் செய்து முடித்து பிர்ம்மோற்சவத்தையும் நடாத்தி வந்தார்கள். அந்தக் கும்பாஷேகத்திற்கும் உற்சவத்திற்கும் ஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிகருடன் ஸ்ரீ மகாதேவ சுவாமிகளும் இன்னும அளவு கடந்து துறவற அடியார்கள், அன்பர்களும் உடனிருந்து அந்தக் கும்பாபிஷேகத்தையும் உற்சவற்தையும் அன்புடன் இருந்து தரிசித்து வந்தார்கள்.

பிர்ம்மோத்சவத்தின்போது தேர்விழாவன்று மகாமகிமையுடைய வீரசேகரமுனிவர் தெற்கு வீதியில் நடராசர் சந்நிதிக்கெதிரில் திருத்தேர்

முன்னின்று நின்மல நிர்த்தனத்துடன், மகா தேவ என்ற மந்திரத்தை அநேகந்தரம் உச்சரித்து நிமல பதவியை நிலையாக அடைந்தனர்.

அன்னாரின் அழகிய திருமேனியையும் அன்னாரின் சரித்திரத்தில் அறைந்தபடி சமாதி வைத்த ஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிகர் கோவிலூர் மடாலயத்தில் ஆறுவது குருமூர்த்தமாசவமர்ந்துசெய்ய வேண்டியவை அனைத்தையும் சிறப்புறச்செய்து முடித்தார். ஸ்ரீ மகாதேவ சுவாமிகளும் உடனிருந்தே அவற்றைச் செய்து முடித்தார்கள்.

அண்ணாமலை ஞானதேசிகர் தமது குருமூர்த்தமாகிய வீரமாமுனிவரது சமாதியாலயத் திருப்பணி செய்ய வேண்டுமென்றும் ஸ்ரீ ஆண்டவரின் நித்தியப்படி பூசை குருபூசைகளுக்கும் அடியார்கள் அன்னவஸ்திராதிகளுக்கும் ஆண்டவரின் அருஞ்சங்கற்பப்படி அருள்மிகு ஸ்ரீ அமிர்தவல்லி சமேத அருள்தரு ஸ்ரீ பாரிசாதவனேசுவர சுவாமிக்கு நித்தியப்படி அமுதுபடியும் சூடனும் கொடுத்துவர வேண்டுமென்ற சங்கற்பத்திற்கு இணங்கவும் விளைநிலங்களும் வாங்கிவைக்க வேண்டுமென்று கருதினர்.

அதன்பின் ௸ திருப்பணிக்கும் மேலே காட்டிய ஏனைய காரியங்களுக்கும் அன்புமிக்க தனவைசியரிடத்தில் ஆதரவோடு தனந்திரட்டி வந்தார்கள். ௸ தனத்தைக் கொண்டு திருக்களர் கிராமத்திலும் மருதவனம் கிராமத்திலும் 26 சாசனங்களாக நஞ்சை புஞ்சை யுள்பட 110 ஏக்கர் ஐம்பத்தையாயிரம் ரூபாய்க்கு சாசனங்கள் வாங்கி ௸ சாசனங்களின் விவரப்படி முப்பத்தெண்ணாயிரத்து எழுநூற்றெழுபத்திரண்டு போய் ௸ நிலங்களின் பாக்கியாகவும் பிராம்சேரி நோட்டின் மூலமாகவும் கைமாத்து மூலமாகவும் நிறுத்திக்கொண்டு பதினையாயிரத்துச் சொச்சம் பணம் கொடுத்து ௸ சாசனங்களைப் பூர்த்தி செய்தார்கள். ௸ கடன்களின் விவரம் ௸ சாசனங்கள் 10ல் காட்டப்பட்டிருக்கிறது.

அதன் பின் மகாமகிமை பொருந்திய வீரமாமுனிவரின் சமாதித் திருப்பணியை 1912ல் ஆரம்பித்து 1915க்குள் கர்ப்பக்கிரகம், அர்த்த மண்டபம், முன் நந்தி மண்டபத்துடன் மேல் சுற்று மண்டபம் ஆகியவற்றைச் சிறந்த கலை நுட்ப வேலைப்பாடுகளுடன் 1915ம் வருடத்தில் ௸ திருப்பணியைப் பூர்த்தி செய்து ௸ வருடத்தில் எல்லாச் சிறப்புடனும் கும்பாபிஷேகமுஞ் செய்து முடித்தார்கள். ௸ மகா தேவ முனிவரும் உடனிருந்து கும்பாபிஷேகத்தை நடத்தினார்கள்.

௸ அண்ணாமலை ஞான தேசிகர் கோவிலூர் மடாலயத்தில் 6வது குருமூர்த்தமாக எழுந்தருளியவுடன் நமது மகா தேவ முனிவரை திருவண்ணாமலை ஈசானிய மடத்திற்கு மடாதிபதியாக நியமித்தார்கள். ௸ மடாதிபதி பதவியை யேற்றுக் கொள்வதற்குச் சம்மதமில்லாதிருந்தும் அன்னாரின் வற்புறுத்தலின் பேரில் சம்மதித்தார்கள். அதுமுதல் ஈசானிய மடத்தில் குருமூர்த்தமாக எழுந்தருளியிருந்து ஸ்ரீ நடேச சுவாமி முதல் அனேக பக்குவிகளாகிய மாணாக்கர்களுக்கு மேலே காட்டிய முறைப்படி நானா சீவவாதக் கட்டளை முதல் வேதாந்த நூல்களை கிரமமாகப் பாட முறையில் உபதேசித்து வந்தார்கள்.

அதன் பின் 1919ம் வருடத்தில் மேலே காட்டிய விவரப்படி கோவிலூர் மடாலயத்தின் 6வது குருமூர்த்தமாக எழுந்தருளியிருந்த ஸ்ரீ அண்ணாமலை ஞான தேசிகரின் சீவன் முத்தி தசை நீங்கி விதேக முத்தியடையும் தசை நெருங்கி வந்ததையுணர்ந்து உடன் திருவண்ணாமலை ஈசானிய மடத்திலிருந்த ௸ மகாதேவ முனிவரை விரைவாக அழைப்பித்தார்கள். ௸ அழைப்பிற்கிணங்க விரைவில் வந்து சேர்ந்தார்கள். அப்போது கோவிலூர் மடாலயத்தின் குருஸ்தானத்தை ஏற்றுக் கொள்ளத் தகுந்தவர்கள் சிலர் இருந்தும் மகாதேவ முனிவரைத் தான் இருக்க வேண்டுமென்று வற்புறுத்தினார்கள். ௸ யாரும் இரண்டாவது குரு முகூர்த்தமாக இருந்ததினால் ௸ திருவாக்கியத்தை திருப்பாது ஏற்றுக் கொண்டனர் அதன்பின் 10-5-1919ல் 7வது குருமூர்த்தமாக எழுந்தருளச் செய்து ஸ்ரீ மகாதேவ ஞான தேசிகர் என்ற பட்டமும் வழங்கி ௸ தேதியில் உயிலும் எழுதி வைத்தனர்.

அதன் பின் அண்ணாமலை ஞான தேசிகரவர்களும் சீவன் முத்தி தசை நீத்து விதேக

முத்தி தசையையடைந்தார்கள். ஷை மகா தேவ ஞான தேசிகர் அண்ணுமலை ஞான தேசிகருக்குச் செய்ய வேண்டிய எல்லாக் காரியங்களையும் அதிக அன்போடும் ஆர்வத்தோடும் அளவிலாச் சிறப்புடன் ஆற்றி முடித்தார்கள்.

ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞான தேசிக சுவாமிகளும் குருஸ்தானத்தில் அன்போடும் எழுந்தருளியிருந்து நான்கு சாதனங்களும் நலமுடன் அமைந்த நல்லடியார் அனேகருக்கு நாலு சிவவாதக் கட்டளை முதல் ஞானவாசிட்டம் யீறுகவுள்ள பெருமை மிக்க நூல்கள் பதினுறையும் சிறப்பாக உபதேசித்து வந்தார்கள். ஒவ்வொரு நூலும் மனனஞ் செய்த பின்னர்தான் மேற்படி நூல் பாடங் கேட்க வேண்டும் என்ற சம்பிரதாயப்படியே ஒவ்வொரு வருடத்திற்கும் ஒவ்வொரு நூல்தான் பாடம் கேட்க வேண்டும் என்ற சம்பிரதாயப்படி பாடம் கேட்டும் நல்லடியார்களுக்கு நயமுடன் உபதேசித்தும் வந்தார்கள்.

கோவிலூர் மடாலயத்தில் அதிகமான அடியார்கள் வசித்துப் பாடம் கேட்டு வந்தது ஐந்தாவது குருமூர்த்தமாகிய ஸ்ரீ வீரமா முனிவர் காலத்திலும் 7வது குருமூர்த்தமாகிய ஸ்ரீ மகாதேவ ஞான தேசிகர் காலத்திலுந்தான் என்று சொல்ல வேண்டும். ஷை 7வது குருமூர்த்தியின் காலத்தில் கொஞ்சம் கூடவே இருந்ததாகக் கூடச் சொல்லலாம்.

மேலே காட்டிய 16 நூல்களையும் கிரமமாகப் பாடம் கேட்டுப் பூர்த்தி செய்வதென்றால் சுமார் 12 ஆண்டுகளுக்கு மேலே தான் ஆகும். 5வது குருமூர்த்தமாகிய ஸ்ரீ வீரசேகர ஞான தேசிகர் ஏழு முறை கிரமமாக வாசிட்டம் வரை பூர்த்தி செய்து வாசிட்ட ஏடு வழங்கும் சம்பிரதாயப்படி பூர்த்தி செய்திருக்கிறார்கள். 7வது குருமூர்த்தமாகிய ஸ்ரீ மகாதேவ ஞான தேசிக சுவாமிகளும் ஷை கிரமப்படி 7 முறை வாசிட்டம் வரை பூர்த்தி செய்திருக்கிறார்கள். முதல் முறை மேலே காட்டிய திருவண்ணுமலை ஸ்ரீ நடேச சுவாமிகள் முதலியோர் முதல் முறையாகும். திருக்களர் கிருஷ்ணுநந்த சுவாமி வகையராக்கள் மூன்றாவது முறையாகும்.

ஸ்ரீ கிருஷ்ணுனந்த சுவாமிகள் 1919ம் வருடத்திலேயே கோவிலூர் ஏழாவது குருமூர்த்தமாகிய ஸ்ரீ மகா தேவ ஞான தேசிக சுவாமிகளை முறைப்படி குருவாக அடைந்தார். அதே வருடத்தில் அதே முறைப்படி இன்னும் சிலரும் குருவாக அடைந்தார்கள்.

ஏழாவது குருமூர்த்தமாகிய ஸ்ரீ மகா தேவ ஞான தேசிகர் தமது குருசந்நிதானமாகிய திருக்களர் கோ. ஆ. வீர. மடாலயத்தையும் ஷை ஆண்டவர் சமாதிக் கோயிலையும் அமோகமாக விருத்தியடைய வேண்டுமென்ற தீவிரமான அவாவுடையவர்களானர்கள். ஷை அவா பூர்த்தியாக யாரை நியமிக்கலாமென்று ஆலோசித்து அதற்குத் தகுதியுடையவர் ஸ்ரீ ஆண்டவரின் மூத்த சீடரும், ஆங்கிலம், தமிழ் ஹிந்தி, சமஸ்கிருதம் ஆகிய 4 பாஷைகளிலும் கடலெனப் புலமையுடையவரும் வேதாந்த நூல்கள் அனைத்தையும் வடமொழியிலிருந்து தமிழில் மொழி பெயர்த்தவரும் உரையெழுதியவரும் நான்கு மொழிப் பண்டித சிரோன்மணியும் சென்னையில் உள்ள அன்பர்கள் அனைவரும் லோக குருவென்று பெருமையுடன் கொண்டாடப் பெற்றவரும் சென்னையம்பதியினரும் ஷை தமது குருமூர்த்தியிடத்தில் அளவிலா அன்புடையவரும் ஆகிய வீர. சுப்பையா ஞானதேசிகரை மேற்படி திருக்களர் மடாலயத்துக்கு மடாதிபதியாக எழுந்தருளியிருந்து திருக்களர் சந்நிதானத்தை அமோகமாக விருத்தி செய்ய வேண்டுமென்று, 1920ல் மடாதிபதியாக நியமிக்க ஏழாவது மடாதிபதியாகிய ஸ்ரீ மகா தேவ ஞான தேசிகரவர்கள் கேட்டார்கள். சுப்பையா சுவாமிகள் சம்மதமில்லாதிருந்தும் குருமூர்த்தியினிடத்துள்ள அளவுகடந்த அன்பால் ஆம் என்று ஒத்துக் கொண்டார்கள். அதன் பேரில் அவர்களைத் திருக்களர் மடாலயத்துக்கு மடாதிபதியாக நியமித்தார்கள் எல்லா விசேடங்களையும் நடத்தி வருவதற்கும் மேற்படி கடன்களுக்கும் வட்டி கொடுத்து மேற்படி காரியங்களையும் சிறப்பாக நடத்திவர சங்கடப்பட்டு மேற்படி பதவி தனக்கு வேண்டாமென்று விலகிக் கொண்டு தனது யதாஸ்தானமாகிய சென்னையம்பதியைச் சேர்ந்து விட்டார்கள். அதன் பின் திருக்களர் மடாலயத்துக்கு யாரை நியமிக்கலாமென்று தமது குருமூர்த்தியின் நற்சீடர்களாகிய திருக்களர் நாராயணசாமி முதலிய அநேகரோடு கலந்தாலோசித்து இப்போது திருக்களரிலிருக்கும் கிருஷ்ணனந்த சுவாமிகள் தான் அதற்குரியவர் என்று தீர்மானித்து

மேற்படியாரை அழைப்பித்து நீ திருக்களர் மடாலயத்தில் மேலே காட்டிய சுப்பையா ஞான தேசிகருக்குப் பதிலாக ஸ்ரீ ஆண்டவர் சந்நிதானத்தை நடத்தி வரவேண்டுமென்று ஆக்ஞாபித்தார்கள். அதற்கு மேற்படி கிருஷ்ணனந்த சுவாமியும் தனக்கு 26 வயதுக்குள் தானுகிறது. அதனுல் இளமைப் பிராயமாயிருப்பதனுலேயும் கோவிலூர் வந்து ஒரு வருஷந்தான் ஆகிறதென்றும் நானுசிவ வாதகக்கட்டளை ஒரு பாடந்தான் கேட்டிருக்கிறேனென்றும் பாக்கி 15 பாடங்களும் கேட்க வேண்டியிருக்கிறதென்றும் மேற்படி மடாலயத்தின் நிர்வாகத்தை மகாபண்டிதரும் நிபுணருமாகிய சுப்பையா ஞான தேசிக சுவாமிகளே நடத்தச் சங்கடப்பட்டு விலகிக் கொண்டார்கள். அப்படியிருக்க தன்னுல் எப்படி நடத்த முடியும் என்று மிகவும் பயந்து வேண்டிக் கொண்டார்கள்.

அதற்கு ஸ்ரீ மகாதேவ ஞான தேசிகரவர்களும் முன் ஆலோசனையில் கலந்த மற்றவர்களும் சேர்ந்து பாடம் படிக்க வேண்டியதை நாம் திருக்களர் வந்து தங்கியிருந்து முடித்துக் கொடுப்போமென்றும் கைவல்லிய நூல் முதல் மற்ற வாசிட்டம் வரையிலுள்ள நான்கு பெரிய நூல்களை இவ்விடத்துக்கு அழைப்பித்து பாடம் சொல்லி பூர்த்தி செய்து கொடுப்போமென்றும் சொல்லியும் மேற்படி ஆண்டவர் சந்நிதானத்தில் அன்போடும் ஆதரவோடும் அயராது நடத்த முயற்சிப்பாயேல் அமோகமாக விருத்தியடையும் அஞ்சற்க என்று அபயங் கூறி நீதான் போய் கவனிக்க வேண்டுமென்றும் ஆக்ஞாபித்து அமோக விருத்தியடையக்கடவது என்று கூறி திருநீறும் அன்போடளித்து அனுப்பினுர்கள்.

அது முதல் கிருஷ்ணனந்த சுவாமிகளும் திருக்களர் வந்து குருவின் ஆக்ஞைப்படி எல்லா நிலங்களையும் பண்ணைச் சாகுபடி வைத்து தீவிர சாகுபடி நடத்தி வந்தார்கள். மேற்படி குருவியின் அனுக்கிரகத்தினுலும் ஸ்ரீ ஆண்டவரின் அனுக்கிரகத்தினுலும் மேற்படி நிலங்களும் அமோகமாக விளைந்து வந்தன. அந்த வருமானத்தைக் கொண்டு பழைய கடன்களை அடைத்துக் கொண்டு மடாலயச் சாதுக்கள் செலவும் ஸ்ரீ ஆண்டவர் கோவில் செலவும் சிவன் கோவிலில் அமுதுபடிச் செலவும் நடத்திக் கொண்டு வந்தார்கள்.

மகாதேவ ஞான தேசிகர் அவர்கள் தமது குருமூர்த்திக்கு இராசகோபுரமும் வெளிச்சுற்று மண்டபமும் கட்டும்படியும் அதற்குத் தகுந்த பொருள் தான் தருவதாகவும் ஆக்ஞாபித்தார்கள்.

அந்த ஆக்ஞைப்படி உரிய திருப்பணிவேலையை 1924ல் துவங்கி 1929ல் பூர்த்தி செய்தார்கள். 1930ல் மேற்படி கும்பாபிஷேகமும் சிறப்பாக நடந்தது. ஸ்ரீ ஆண்டவர் சந்நிதானமும் மடமும் இரு குருமூர்த்திகளின் அநுக்கிரகத்தினுல் அமோகமோக நடந்து வருகிறதென்பது கண்கூடாகக் காணப்படுகிறது. ஷை இரு குருமூர்த்திகளின் அனுக்கிரகத்தினுல் எல்லாக் கடன்களும் அடைபட்டும் மேற்படி நிலவருமானத்தைக் கொண்டு திருக்களர் அருள்மிகு ஸ்ரீ அமிர்த வல்லி உடனுறை ஸ்ரீ பாரிசாதவனேசுவர சுவாமி கோயிலை இரண்டாவது முறையாக பழுதுபார்த்து கும்பாபிஷேகம் செய்யப்பட்டதுடன் மருதவனம் சிவன் கோவில் ஸ்ரீ அண்ணுமலை ஞானதேசிகரால் திருப்பணி ஆரம்பிக்கப்பட்டதைக் கட்டி முடித்து, சமீபத்தில் கும்பாபிஷேகமும் செய்வித்து ஷை யூர் ஸ்ரீஐயனுர் கோவில் ஸ்ரீ மாரியம்மன் கோவில் புதிதாகக் கட்டி கும்பாபிஷேகங்களும் சிவன் கோவில் இரண்டாம் தடவையாகப் புதுப்பித்துக் கும்பாபிஷேகமும் நடத்தப்பட்டது.

நல்லூர் கிராமத்தில் சிவன் கோவில் திருப்பணி செய்து கும்பாபிஷேகமும் நடத்தப்பட்டது. மேற்படிமடாலயத்திலும்கிராமங்களிலும் கட்டிடங்கள் புதிதாகக் கட்டியும் பழுது பார்த்தற்கும் மேலேகாட்டிய எல்லாச்செலவும் சேர்ந்து சுமார். 8½ லட்சம் ரூபாய்வரை ஆகியிருக்கிறது. முன்னிருந்த நிலங்களுடன் மீண்டும் மடாலயத்திற்குச் சொந்தமாக சுமார் 300 ஏக்கர் (முன்னுள்ள நிலங்களுடன் சேர்த்து 410 ஏக்கர்) நஞ்சை நிலங்கள் காலத்துக்குத் தகுந்த கிரயப்படி வாங்கப்பட்டு மடாலயத்துக்குச் சொந்தமாக இருந்து வருகிறது.

1971ல் திருக்களர் சிவன் கோவிலில் எல்லாப் பகுதிகளும் மிகவும் பழுதுற்றதை

சீர்செய்தும் ஷை ஆண்டவர் கோவிலில் புதிதாகக் கருங்கல் தளவரிசை போட்டும் கருங்கல் திருமதில் எழுப்பிச் சீர்செய்தும் இரண்டு கும்பாபிஷேகங்களும் 1972ல் விமரிசையாக நல்ல முறையில் செய்யப்பட்டன. இந்தச் செலவுகளுக்காக சுமார் 4 லட்சம் ரூபாய் வரை ஆகியிருக்கிறது. இப்போதும் குரு பூசை முதல் எல்லாக் காரியங்களும் சிறப்பாக நடந்து வருகின்றன.

மேலே காட்டிய எல்லா விஷயங்களும் மனுஷ யத்தனத்தில் கிஞ்சிற்றும் நடந்ததில்லையென்று உறுதியாகச் சொல்லலாம். அவனன்றி ஓரணுவும் அசையாது என்ற ஆன்றோர் வாக்கியபடி நடந்தும் நடந்துகொண்டும் நடக்கவும் இருக்கிறதென்பது முற்றும் உணரத்தக்கது.

ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாதேவ ஞானதேசிகர் கோவிலூர் மடாலயத்தில் 10—5—1919க்குச் சரியான சித்தார்த்தி ஆண்டு சித்திரை மீ 28 இல் ஏழாவது குருமூர்த்தியாகப் பதவியேற்று சுமார் 28 வருஷம் பதவியிலிருந்து வந்திருக்கிறார். சர்வசித்து ஆண்டு ஆனி மீ 12 வ குருவாரம் நவமிதிதி அஸ்த நட்சத்திரம் துலாலக்கினம் சித்தயோகம் கூடிய சுபதினத்தில் சிவன்முத்தி தசைநீத்து விதேக கைவல்ய முத்தியை எய்தினார்கள். அன்னார்தான் முத்தி நிலையடைவதற்கு முன்னமே 13—12—1946ல் தனது சீடராகவுள்ள சோமசுந்தர ஞானதேசிக சுவாமிகளை மேற்படி கோவிலூர் மடாலயத்திற்கு 8வது குருமூர்த்தமாக நியமித்திருந்தார்.

சோமசுந்தர ஞானதேசிகர் அவர்களும் கிருஷ்ணானந்த சுவாமிகள் உள்பட எல்லாச் சிஷ்யர்களும் கூட இருந்து சமாதி வைத்தல் முதலிய எல்லாக் காரியங்களையும் சிறப்பாகச் செய்து முடித்தார்கள். ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாதேவ ஞானதேசிகர் சீடர்கள் அனேகர் கோவிலூர் மடாலயத்தில் இருந்ததோடு வெளியிலும் இருந்து சிறப்புற்று வந்தார்கள். இப்போதும் சிலபேர் இருந்து வருகிறார்கள்.

மேற்படி மகாதேவ ஞானதேசிகருக்கும் 1948 ல் மே மாதத்துக்குச் சரியான சர்வதாரி ஆனிமாதம் அஸ்த நட்சத்திரத்தில் வரும் வருடாந்தரக் குருபூசைகளும் சமாதி ஆலயத் திருப்பணியும்முடித்து வருடாந்தரக் குருபூசையும் கும்பாபிஷேகமுஞ் சிறப்பாக நடத்தப்பட்டது

அது முதல் மேற்படி குருபூசை முதலிய செலவுகள் மூலதனத்துக்காக காரைக்குடி சந்திரசேகரபுரத்தில் ஒரு வீடும் திருக்களர் மருதவனம் நல்லூர் கிராமத்தில் நஞ்சை நிலங்களும் மூலதனமாக வாங்கி வைக்கப்பட்டு மேற்படி வருமானங்களிலிருந்து மேற்படி பூசையை ஆண்டுதோறும் ஸ்ரீ கிருஷ்ணானந்த சுவாமிகள் சிறப்பாக நடத்தி வருகிறார்கள். ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாதேவ ஞானதேசிகர் பெரிய மகானாகவும் ஞானசித்தராயும் சபானுக்கிரக சாமர்த்திய முடையவராயும் மகாசாந்த மூர்த்தியாயும் இன்சொல் உடையவராயும் விளங்கி வந்தார் என்பதை உலகம் நன்கறியும்.

## மகாத்மா காந்தியும் கோவிலூர் மடமும்

*கோவிலூர் மடத்தின் கிளை மடமாகிய சிதம்பர பொன்னபல சுவாமிகள் மடத்தில் பரஞ்சோதி சுவாமிகள் என்பவர்கள் தலைவராக இருந்தபோது மகாத்மா காந்தி அங்கு வருகை புரிந்தார்.*

# ஸ்ரீ-ல-ஸ்ரீ சோமசுந்தர ஞான தேசிகர் அவர்கள்

பிறந்த ஊர் பள்ளத்தூர்
பிறந்த ஆண்டு 1890
பட்டத்துக்கு வந்த ஆண்டு 1947
பட்டத்தில் இருந்த காலம் 24 ஆண்டுகள்

செய்த பணிகள் :-

சுவாமிகள் மாணவர்களுக்குப் பாடம் நடத்துவதில் மிக்க ஆர்வம் உடையவர்கள். கம்பீரமாகப் பொருள் கூறுவார்கள்.

சிதம்பரம் கோ. சித. மடாலயத்தில் மடாதிபதிகளாக 17 ஆண்டுகள் இருந்தார்கள். அங்கு பல கட்டளைகள் நன்ருக நடைபெறச் செய்தார்கள். தத்துவராய சுவாமிகள் சமாதிக் கோயிலைச் சீர்திருத்திக் கட்டி, குடமுழுக்கு நடத்திஞர்கள்.

இவர்கள் காலத்தில் பல நூல்கள் அச்சிட்டு வெளியிடப் பெற்றன.

இந்து சமய அறநிலையத்துறையின் கட்டுப் பாட்டிலிருந்தும், கோவிலூர் ஆதீனம் இவர்கள் காலத்தில் உயர்நீதி மன்றத்தாரால் விலக்கப் பெற்றது

இவர்கள் கோவிலூர், சிதம்பரம், எறும்பூர், திருக்களர், பொருள்வைத்த சேரி, மானமதுரை ஆகிய பல மடங்களுக்கும் தாம் ஒருவரே ஏக மடாதிபதியாக இருந்து வந்தது குறிப்பிடத்தக்கது.

1941ல் பர்மா, மலேசியா முதலிய நாடுகளை ஜப்பான் படை எடுத்தது. இதன் விளைவாக நகரத்தார்களுக்குச் சொல்லொணு இன்னல்கள் ஏற்பட்டன. மடத்திற்கு உயிர்நாடியாக இருந்த இனும் கிராமங்களை அரசு எடுத்துக் கொண்டது. மடத்தின் வளர்ச்சி இதனுல் பெரிதும் பாதிக்கப்பட்டது.

முதுமை நிலையில் இருந்தபொழுது இவர்கள், மடத்தின் செயல்கள் சீராக அமைய வேண்டும் என்ற பெரு விருப்பத்தால், நகரத்தார் பலரின் வேண்டுகோளை அன்புடன் ஏற்று திருவண்ணமலை ஈசான்ய ஞான தேசிகர் மடத்தில் தலைவராக இருந்த தவத்திரு இராமநாத ஞானதேசிகர் அவர்களை, கோவிலூர் மடத்தின் ஒன்பதாவது பட்டமாக நியமித்தார்கள்.

பரிபூரணம் :- 1971

## தனிச்சிறப்பு

பொதுவாக, கோயில் திருப்பணி செய்தவர்களை, அந்த இறைவன் இறைவியை வழிபடும் முறையில், மகா மண்டபத்துத் தூண்களில் வடிப்பது சில இடங்களில் வழக்கமாக உள்ளது. ஒரு சில தலங்களில், திருப்பணி செய்தவர் அவர் மனைவி ஆகியோர், கருவறையிலேயே பாவை விளக்கு வடிவங்களில் நிறுத்தப் பெற்றுள்ளனர்.

திருநெல்லை அம்மன் கோயிலில், அதைக் கற்கோயிலாக்கிய கோவிலூர் ஆதீனத்தின் ஆதிகர்த்தர் ஆண்டவர் முத்துராமலிங்க ஞானதேசிகர் அவர்கள் தரையில் விழுந்து, கரம் கூப்பிய முறையில் (சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து) இறைவியை வழிபடும் காட்சி கொடி மரத்துக்கு அருகே சிலா வடிவில் அமைக்கப் பெற்றிருக் கிறது. இது வேறு எந்தக் கோயிலிலும் இல்லாத தனிச் சிறப்பு எனலாம்.

காஞ்சி காமகோடி பீடம் புதுப் பெரியவர்களான ஜெயேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள் அவர்கள் இதனைக் கண்டு இந்தச் சிறப்பான அமைப்பையும் ஆழ்ந்த பக்தியையும் வியந்து போற்றியிருக்கிறுர்கள்.

9

# ஸ்ரீ-ல-ஸ்ரீ இராமநாத ஞான தேசிகர் அவர்கள்

(16-2-1971 முதல்)

**வித்துவான் சொ. அழகப்பன்** பி. ஏ., சி. ஏ. ஐ ஐ. பி.

தலைவர்

இந்து மதாபிமான சங்கம், காரைக்குடி

தென்னாட்டின் வேதாந்தத் தாயகம் கோவிலூராகும். வேதாந்தத்தைத் தமிழில் முறையாகக் கற்பித்த ஒரே மடாயலம் இதுவேயாம். தமிழ் உரை நடையிலும் செய்யுள் வடிவிலும் ஏராளமான வேதாந்த நூல்கள் இவண் நூலகத்தில் உள்ளன. இம் மடாலய அதிபர்கள் தமிழில் வேதாந்தத்தைப் போதிப்பதற்கு ஒரு பாடத் திட்டம் வகுத் திருக்கிறார்கள். நூல்களையும் அமைத்திருக்கிறார்கள்! இவை நாநாசீவ வாதக் கட்டளை முதல் ஞான வாசிட்டம் ஈறாகப் பதினாறாகும்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த ஆதீனத்தின் எட்டாம் பட்டத்தில் இருந்த திருப்பெருந்திரு சோமசுந்தர ஞானதேசிகர் அவர்கள் 16-2-71ல் பரிபூரணம் அடைந்தார்கள். 1969ம் ஆண்டில் அந்த சுவாமிகள் எழுதி வைத்திருந்த விருப்ப ஆவணத்தின்படி (will) திருப்பெருந்திரு இராமநாத ஞான தேசிகர் அவர்கள் ஒன்பதாவது குரு மகா சந்நிதானமாய் அருளாட்சி நடத்தி வருகிறார்கள்.

## குழந்தைப் பருவம்

நகரத்தார் வாழும் ஊர்களுள் நாட்டரசன் கோட்டை என்பது நனி சிறந்த ஊர். இவ்வூரில் தான் கவிச்சக்கரவர்த்தி கம்பர் விரும்பி சமாதியடைந்த ஆலயம் இருக்கிறது.

இவ்வூரில் வீராண்டான் குளம் என்ற ஓர் ஊருணி இருக்கிறது. சிவன் கோவில், திருமால் ஆலயம், கண்ணுத்தாள் ஆலயம், குலதெய்வமாகிய கறுப்பர் கோவில் முதலிய யாவும் இக் குளத்தைச் சுற்றியே இருக்கின்றன. இக் குளத்தை ஒரு முறை வலம் வந்தால் இவ்வாலயங்களையெல்லாம் சுற்றி வந்த புண்ணியம் கிடைக்கும்.

இந்நகரில் திரு. வேலாயுதஞ்செட்டியார் திருமதி முத்துக்கறுப்பி ஆச்சி இருவரும் செய்த தவப்பயனாய் 1908-ஆம் வருடத்தில் இவர்களுக்கு இரண்டாவது ஆண்குழந்தை பிறந்தது. பிள்ளை பிறந்ததும் இவ்வூர் வழக்கப்படி கம்பர் சமாதியிலிருந்து எடுத்து வந்த திருமண்ணைக் கரைத்துப் பிள்ளைக்கு ஊட்டினார்கள். இதுவே இப்பிள்ளையின் பிற்காலச் சிறப்புக்களுக்கெல்லாம் காரணமாக அமைந்தது போலும்.

## கல்வி

நாட்டரசன்கோட்டையில் திரு. சிதம்பர வாத்தியார் நடத்தி வந்த திண்ணைப் பள்ளிக் கூடத்தில் கறுப்பையாவின் கல்வி துவங்கியது. பின்னர் அது கம்பர் கலாசாலையில் தொடர்ந்தது. இது அவ்வூர்ச் செல்வர் திரு. வெள்ளைக் காசிச் செட்டியார் என்பவரால் நிறுவப்பட்டது. அவர்கள் அக்காலத்தில் திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டைக் கோவிலின் அறங்காவலராகவும் இருந்தார்கள். வருடந்தோறும் பள்ளிச் சிறுவர்களுடன் சேர்ந்து பங்குனி உத்திரத்தன்று கம்பர் சமாதிக் கோவிலுக்குச் சென்று கறுப்பையாவும் மலர் வணக்கம் செய்வது வழக்கமாக அமைந்தது.

## பள்ளிப்பருவ நிகழ்ச்சி

பள்ளியில் சிறுவர்கள் பனை ஓலையில் (சட்டம், சரவை) எழுத்தாணியால் எழுதிப் பழகுவது அக்கால வழக்கம், காகிதம், பேனா, பென்சில் முதலியன வழக்கத்தில் இல்லாத காலம் சிறுவன் கறுப்பையா எழுதிப் பழகக்

குண்டு எழுத்தாணி கொடுக்கப் பெற்றது. கறுப்பையாவுக்கு மடக்கு எழுத்தாணி கொண்டுபோக வேண்டுமென ஆசை உண்டா யிற்று. மற்றவர்கள் கொண்டு வராததைத் தான் கொண்டு சென்றால் பெருமை எனப் பிள்ளைகள் நினைப்பது இயல்புதானே. தந்தை யார் கண்டிப்பாக மறுத்துவிட்டார். இரண்டு மூன்று நாட்கள் சென்றபின் வீட்டில் யாருக் கும் தெரியாமல் கறுப்பையா மடக்கு எழுத் தாணியை எடுத்துக் கொண்டு பள்ளிக்குச் சென்றான். கண்ணாத்தாள் கோவிலுக்கு முன்னால் ஒரு மண்டபம் உண்டு. அதில் உள்ள தூண்களில் ஒன்றில் ஒரு பிள்ளையார் திருவுரு வம் இருக்கிறது. வழக்கம் போல, கறுப்பையா அந்த பிள்ளையாருக்கு எண்ணெய்யும் பூவும் சாத்தி வணங்கியவன் அங்கேயே மடக்கு எழுத் தாணியை வைத்துவிட்டு மறந்து போய்ப் பிறகு வீட்டிற்கு வந்ததும் வேலாயுதம் செட்டி யார் மடக்கு எழுத்தாணி எங்கே? என்று கேட்க, சிறுவன் 'நான் எடுக்கவில்லை' எனச் சாதித்தான். கோபத்தில் தந்தையார் மகனைத் தூணில் கட்டி வைத்துவிட்டார். தற்செயலாக அங்கே வந்த அவ்வூர்ச் சோதி டரின் தம்பி, "ஏன் பிள்ளையைத் தூணில் கட்டி வைத்திருக்கிறீர்கள்?" எனக் கேட்க 'அவன் மடக்கு எழுத்தாணியைப் போக்கிவிட்டு பொய்யும் சொல்லுகிறான்' என வேலாயுதஞ் செட்டியார் சொன்னார்கள். உடனே வந்தவர் 'இதுதானா? பாருங்கள்' என அவ்வெழுத்தாணி யைக் கொடுக்க "ஆம்" எனத் தந்தையார் அதை வாங்கிக் கொண்டார்கள். இவ்வெழுத் தாணி வரும் வழியில் வாயிற்படியின் அருகில் இருந்தது என அவர் சொன்னார். பிள்ளையார் அருகில் வைத்து மறந்துவிட்டு வந்த மடக்கு எழுத்தாணி எவ்வாறு வீட்டு வாசற்படிக்கு வந்தது என்பது கறுப்பையாவுக்குப்புரியவில்லை இதுவும் பிள்ளையாரின் திருவருட்செயலே என எண்ணிச் சிறுவன் மகிழ்ந்தான்.

## 'இராமநாதன்' ஆதல்

1917ஆம் ஆண்டில் 10ஆவது வயதில் காரைக்குடிக்கு வீ. சித. ராம. சித குலம் விளங்கப் பிள்ளையாய் வந்தான் கறுப்பையா. இங்கு இராமநாதன் எனப் பெயர் சூட்டப் பெற்றது.

## காரைக்குடியில் கல்வி

இந்நகருக்கு வந்தபின் ரெங்க வாத்தியார் பள்ளிக்கூடத்தில் படிப்புத் தொடர்ந்தது. பின்னர் இந்து மதாபிமான சங்கத்தின் இராம கிருஷ்ண கலாசாலையில் பண்டித சு. சிதம்பர அய்யர் அவர்களிடம் தமிழ் இலக்கண இலக் கியம் பயின்றான் இராமநாதன். கம்பன் அடிப்பொடி சா. கணேசன் அவர்கள், அ. தெ. மு. மு. அருணாசலம் அவர்கள் முதலியோர் உடன் கற்றவர்கள்.

இராமநாதனது அறிவுப் பெருக்கத்திற்குக் காரணமாக இருந்தவர் திரு. பி. ஸ்ரீ அவர்கள். அவர்கள் கட்டுரைகளெல்லாம் பெரும்பாலும் இராமநாதனது கையாலேயே எழுதப்பட்டன. திரு. பி. ஸ்ரீ அவர்கள் 1953ஆம் ஆண்டு திரு. சொ. முருகப்பனார் மணி விழா மலரில் எழுதியிருப்பது ஈண்டு நினைவு கூரத்தக்கது.

> "இப்போது திருவண்ணாமலை ஈசான்ய மடத்தின் அதிபராய்த் திகழும் ஸ்ரீ ராமநாதசுவாமியும் இளங் குமரராய்க் "குமரன்" கோஷ்டியை அந்நாளில் அணி செய்தவர். இவர் அப்போதும் சாது குணத்தினரே இந்த இளங்குமரர்களுடன் பழகுவதும் தமிழிலக்கியத்தின் அருமை பெருமை கள் குறித்து உரையாடுவதும் எனக் குப் பேரின்பமாக இருந்தன. அந்த இளைஞர் குழாத்தில் திரு. சா. கணேச னின் நட்பையும் ஸ்ரீ ராமநாதசுவாமி யின் பழக்கத்தையும் இன்றும் பெரும் பேறாக மதிக்கிறேன்."

திரு. பி. ஸ்ரீ. அவர்கள் 'திருஅண்ணாமலைத் தீபவிழா" என்ற ஒரு நூலை எழுதி திருவண்ணா மலை ஈசான்ய மடம் இராமநாத அடிகளுக்குச் சமர்ப்பணம் செய்திருப்பது அவர்கள் சுவாமி களிடம் கொண்டுள்ள அன்பை வெளிப்படுத்து கின்றது.

## பொதுநலத் தொண்டு

இளமையிலேயே நாட்டுத் தொண்டு, சமூக சீர்திருத்தம், சமயப் பணி முதலியன இராம நாதனை ஈர்த்தன.

இந்து மதாபிமான சங்கம், தனவைசிய ஊழியர் சங்கம், காரைச்சிவன் அடியார் திருக் கூட்டம் முதலியவற்றில் பங்கு கொண்டு, பெரும் தொண்டு ஆற்றினார்கள். காரைச் சிவன் அடியார் திருக்கூட்டத்துக்குக் காரியதரிசி யாகவும் இருந்தார்கள்.

## தொழில்

குல ஆசாரப்படி பர்மாவிலுள்ள இரங்கூன், தோஞ்சை என்ற ஊர்களுக்குத் தொழில் நிமித்தம் சென்று வந்தார் இராம நாதர்.

## அறிஞர் தொடர்பு

இராமநாதர் அவர்களும் கம்பன் அடிப் பொடி சா. கணேசன் அவர்களும் ஒரே வீட்டில் வசித்து வந்ததால் இருவருக்கும் விளையாட்டுப் பருவ முதலே நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது.

தென்னாட்டு இராஜாராம் மோஹன்ராய் என்ற புகழுக்கு உரிய சொ. முருகப்பா அவர் களுடனும் தமிழ்க் கடல் இராய. சொ. அவர் களுடனும் நெருங்கிப் பழகும் வாய்ப்பு இவருக்கு ஏற்பட்டது. சொ. முரு. அவர்கள் இராமநாதரை அருகில் வைத்துக் கொண்டு பலவிதத்திலும் பக்குவமுடையராகச் செய் தார்கள்.

புதுமைப்பித்தன் என்ற திரு சொ. விருத்தாசலம், திரு. ப. ரா., திரு. எஸ். டி. எஸ். யோகி, திரு. வ. ரா., திரு. தி. ஜ. ர. முதலிய வர்கள் நெருங்கிய நண்பர்கள் ஆனார்கள். திரு. வ. ரா. அவர்கள் 'ஊழியனில்' உதவி ஆசிரிய ராக இருந்தார்கள். இவர்களின் நட்பால் இராமநாதரின் அறிவும் மனமும் 'செம்மை பெற்றன.

## திருப்பராய்த்துறைப் பயணம்

மன்னார்குடியில் திரு. ச. து. சு. யோகியார் இல்லத்தில் தங்கியிருந்த போது வேறு எங்காவது ஆசிரமங்களில் சேர்ந்து பணியாற்ற வேண்டுமென்ற கருத்து உதித்தது.

திருப்பராய்த்துறை ஸ்ரீமத் சித்பவானந்த சுவாமிகள் அவர்கள் தொடங்கியுள்ள ஸ்ரீ இராமகிருஷ்ண தபோவனம் நமது சுவாமி களைக் கவர்ந்தது. திருப்பராய்த்துறை சென்று ஸ்ரீமத் சித்பவானந்த சுவாமி அவர்களுடன் உரையாடியதில் இல்லறத்தில் ஈடுபட்டுப் பின்னர்த் துறவறம் பூண்டு வருபவர்களை அங்கே சேர்த்துக் கொள்வதில்லை. பிரம்மச் சாரியாக வருபவர்களை மட்டுமே சேர்த்துக் கொள்வது மரபு என்பதைக் கண்டார்கள்.

அங்கு அலுவலகத்தில் கண்ணாடி போட்டு மாட்டப்பெற்றிருந்த ஒரு படம் சுவாமிகளை மிகவும் கவர்ந்தது. அது சுவாமி விவேகானந்தர் திருவுருவப் படம். அதன் கீழ்

THEY ALONE LIVE
WHO LIVE FOR OTHERS
THE REST ARE MORE DEAD
THAN ALIVE

Swami Vivekananda

என்ற வாசகம் காணப் பெற்றது. இதுவே சுவாமிகளின் வாழ்க்கை லட்சியமாக உறுதி பெறலாயிற்று. அன்றே தபோவனத்திலிருந்து மேற்கூறிய சுவாமி விவேகானந்தர் திருவுருவப் படத்தைப் பெற்று வந்தார்கள். அந்தப் படம் திருவண்ணாமலையில் ஈசான்ய மடாலயத்தில் சுவாமிகள் உபயோகத்துக்கென ஒதுக்கப் பெற்றுள்ள அறை வாயிலின் மேல், நிலைப்படி யில் யாவரும் காணும் வகையில் இன்றும் அணி செய்கின்றது.

"என் கடன் பணி செய்து கிடப்பதே"

என்னும் அப்பர் பெருமானின் அருள் வாக்கு சுவாமிகளின் தாரக மந்திரமாகும்.

## துறவறத்துக்குத் தூண்டுகோல்

இராமநாதர் வியாபார நிமித்தம் அடிக்கடி சென்னைக்குச் சென்று வருவதுண்டு. சென்னை யில் இருக்கும்போது ஒரு நாள் திரு. ப. ரா அவர்கள் திரு. இராஜாஜி அவர்கள் தமிழில் செய்திருந்த கடோப நிஷத்தைப் படிக்கும்படி தூண்டினார்கள். உபநிஷத்தைப் படித்து எப்படிப் புரிந்து கொள்வது என நினைத்தாலும் திரு. இராஜாஜி அவர்கள் எழுதியிருப்பதால் அதைப் படிக்கலாம் என ஆவல் உண்டாயிற்று. படித்தார்கள். அதன் காரணமாக வாழ்க்கையில்

மாற்றம் ஏற்பட்டது. வாழ்க்கையில் அனுபவித்த சில நிகழ்ச்சிகளும் அதற்குத் துணையாயின.

## இராமநாதசுவாமிகள் ஆதல்

1943–ஆம் வருடம் 35–வது வயதில் துறவறம் மேற்கொண்டார்கள். மன்னார்குடியில் திரு ச. து. சு. யோகியார் அவர்களுடன் தங்கியிருந்த பொழுது, சூட்டுக்கோல் இராமலிங்க சுவாமிகள் ஆலயத்தில் கல்லாடை தரித்து இராமநாத சுவாமிகள் ஆனார்கள். மூர்த்தி, தலம், தீர்த்தம் முறையாக வணங்கினார்கள். அடிக்கடி திருப்பதியில் அங்கப் பிரதட்சணம் (உடம்பால் வலம் வருவது) செய்வது வழக்கம்.

பின்னர் கோவிலூர் ஆதீனத்தைச் சேர்ந்த சிக்கல் பொருள் வைத்த சேரி மடாலயத்திலிருந்து சிலகாலம் பணி செய்தார்கள்.

## ஈசான்ய மடாலய அதிபர்

1943இல் திருவண்ணாமலை ஈசான்ய மடத்தின் பொறுப்பை சுவாமிகள் ஏற்றார்கள். மடத்தின் பொருளாதாரத்தைச் சீர் செய்தார்கள். இருமுறை மலாய் நாடு சென்று பொருள் சேர்த்து வந்தார்கள். மலேயா, சிங்கப்பூரிலிருந்த நகரத்தார் எல்லோரும் மன மகிழ்ச்சியோடு சுவாமிகளை வரவேற்றுப் பொருள் வழங்கியது குறிப்பிடத்தக்கது.

## அருணையில் கல்விப்பணி

1958இல் சேவாஸ்ரம் நிறுவினார்கள். ஏழை மாணவர்கட்குக் கல்வியுடன் உறைவிடம், உணவு, சீருடை வழங்கப்பட்டன. ஆங்கில மொழிப் பயிற்சியுடன் கூடிய தொடக்கப்பள்ளி ஏற்படுத்தினார்கள்.

30– 9– 1960 இல் உயர் தொடக்கப் பள்ளியைத் தொடங்கினார்கள். ரூ. 45,000 செலவில் கட்டிடம் அமைக்கப்பெற்றது. தேவகோட்டை தி. சு. பழ. ப. சிதம்பரஞ்செட்டியார் அவர்கள், காரைக்குடி அ. சொ. அண்ணாமலை செட்டியார் அவர்கள், மேற்படியூர் சா. ராம. சா. நாராயணன் செட்டியார் அவர்கள், இராயவரம் ப. வ. குழந்தையன் செட்டியார் அவர்கள் ஆகியோர் இதன் புரவலர்களாக உள்ளனர்.

திருவண்ணாமலையில் உள்ள அறுபத்து மூவர் மடாலயம் கோட்டையூர் க வீ. செ. சா. அழ. சித. அழகப்ப செட்டியாரால் சுவாமிகளின் கல்வித் தொண்டுக்கெனச் சுவாமிகளிடம் அளிக்கப் பெற்றது. அதில்தான் சேவாசிரமத் தொடக்கப்பள்ளி நடைபெற்று வருகிறது.

## பிற பணிகள்

அருணையிலிருந்த அம்மன் தேர் சீர்திருத்தி அமைக்கப்பெற்றது, சுவாமிகள் அவர்கள் மேற்பார்வையில் இப்பணி சிறப்பாக நிறைவேறியது.

இளமையிலிருந்தே சுவாமிகளுக்கு அருணகிரிநாதரிடம் ஈடுபாடு அதிகம். திருவண்ணாமலையில் முதன் முதலாக அருணகிரி நாதர் விழாவைத் துவக்கியதோடு ஆண்டுதோறும் அஃது சிறப்பாக நடைபெறப் பேராதரவு கொடுத்து வருகிறார்கள்.

## நூல்களில் ஆர்வம்

சுவாமிகள் ஈசான்ய மடாலயத்தில் ஒரு சிறந்த நூலகம் அமைத்துள்ளார்கள். சுவாமிகள், "திருவண்ணாமலைத் தல வரலாறு" ஒன்று எழுதியிருக்கிறார்கள். இஃது அண்ணாமலையார் கோவில் வெளியீடாக வெளிவந்திருக்கிறது. சுவாமிகளின் தூண்டுதலின் பேரில் சில சிறந்த நூல்களை அண்ணாமலையார் கோவில் அறங்காவலர்கள் வெளியிட்டுள்ளனர். தமிழ்க் கடல் இராய. சொ. அவர்களின் அரிய குறிப்புரையுடன் அருணாசல புராணம் வெளிவந்தது. அவ்வமயம் அன்னாருக்கு 'வண் கவி வள்ளல்' என்ற பட்டம் வழங்கப்பெற்றது. பெருஞ்சொற் கொண்டல் புரிசை முருகேச முதலியார் அவர்களின் 'சோண சைல மாலை' வெளியிடப் பெற்றபோது அவர்கட்கு 'காவியப் பேரறிஞர்' என்ற பட்டம் கொடுக்கப்பெற்றது. இவற்றுக்கெல்லாம் காரணம் நம் சுவாமிகள் அவர்களின் தூண்டுதலேயாம்.

1976இல் வெளியான திருவண்ணாமலைக் கும்பாபிஷேக மலருக்கு ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள்

அவர்களே மலர்க்குழுத் தலைவராக இருந்து சிறந்த முறையில் வெளிவரச் செய்தார்கள். இவர்கள் கொடுத்த தகவல்களாலும், குறிப்புக் களாலும், அரிய அறிவுரைகளாலுமே அந்தச் சிறப்பு மலரை ஆசிரியர் உருவாக்க முடிந்தது.

திருவண்ணாமலைப் பெருந்திருப்பணி இனிது நிறைவேறவும் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுவாமிகள் அவர்கள் பல வழிகளிலும் பேருதவியாயிருந்தார்கள்.

## திருச்சி சுவாமிகள் நட்பு

சுமார் 25 ஆண்டுகளுக்கு முன் சென்னையில் தம்புசெட்டித் தெருவில் திருச்சி சுவாமிகள் அவர்களைச் சந்திக்க தவத்திரு அனந்தானந்த சுவாமிகளுடன் நம் சுவாமிகள் சென்றார்கள். அவர்களைப் பார்த்தவுடன் நம் சுவாமிகளுக்கு உடல் உணர்வு இழந்துவிட்டது. ஆவேசம் வந்தவர்கள்போல் ஏதோ சொல்லிவிட்டுச் சிறிது நேரத்தில் திரும்பிவிட்டார்கள். பிறகு தவத்திரு அனந்தானந்த சுவாமிகள் இந் நிகழ்ச்சியைப்பற்றிப் பின்வருமாறு கூறியுள்ளார்கள்.

ஸ்ரீ-ல-ஸ்ரீ திருச்சி சுவாமிகளைப் பார்த்தவுடன் நம் சுவாமிகள் சொன்னது.

'ஏன் என்னை விட்டுவிட்டுப் போய் விடுகிறாய்?'

ஸ்ரீலஸ்ரீ திருச்சி சுவாமிகள் "நான் எங்கே விட்டுப் போகிறேன்? நீதான் அடிக்கடி விட்டு விட்டுப் போகிறாய்."

அன்றுமுதல் இரு சுவாமிகளுக்கும் ஏற்பட்ட நெருங்கிய தொடர்பு இன்றும் வளர்பிறையென வளர்ந்து வருகிறது.

## திருத்தணி முருகன்

நம் சுவாமிகள் அருணையிலிருந்த காலத்தில் திருத்தணித் திருப்படித் திருவிழாவுக்கு வரும்படி தணிகைக் கோவில் அறங்காவலர் குப்புசுவாமி முதலியார் அவர்கள் மிகவும் வற்புறுத்தினார்கள். பெருங்கூட்டங்கட்குச் செல்லுவது சுவாமிகளுக்குப் பிடிக்காத ஒன்று. ஆகவே முதலில் தயங்கினார்கள். வற்புறுத்தலுக்கு இணங்கி ஒருவாறு தெளிந்து திருத்தணிக்குப் பயணமானார்கள். அரக்கோணம் சந்திப்பில் பம்பாய் மெயிலில் மிக முயன்றும் சுவாமிகளால் இடம் பிடிக்க முடியவில்லை. திருத்தணிக்குச் செல்ல வேண்டாம் என்ற முடிவோடு சுவாமிகள் திரும்பி வெளி வாயில் அருகே வந்துவிட்டார்கள். அப்போது ஒரு டி. டி. ஆர். (இரயில் டிக்கட் சோதனை அலுவலர்) சுவாமிகளைப் பார்த்தார். சுவாமிகள் அவரை முன்னர் பார்த்ததே இல்லை. அவர் 'எங்கே சுவாமிகள் போகிறீர்கள்?' என்று கேட்டதும் சுவாமிகள் நிலைமையைச் சொன்னார்கள். 'உங்களுக்கு யார் இடமில்லை என்றது' சீக்கிரம் வாருங்கள் எனச் சொல்லி முதல் வகுப்புவண்டியில் கதவைத் திறந்து ஏற்றிவிட்டார். 'என்னிடம் இரண்டாம் வகுப்புச் சீட்டுத்தானிருக்கிறது' எனச் சுவாமிகள் சொன்னார்கள். 'அதைப் பற்றிக் கவலை வேண்டாம். நான் பார்த்துக் கொள்ளுகிறேன். வண்டி புறப்படப் போகிறது நானும் கூடவே வருகிறேன்' எனச் சொல்லி அவர் சென்றுவிட்டார். திருத்தணி சேர்ந்ததும் அந்த டி. டி. ஆருக்கு நன்றி தெரிவிக்கும் பொருட்டு சுவாமிகள் அவரைத் தேடினார்கள். ஆனால் அவரைக் கண்டுபிடிக்க முடியவில்லை. 'திருத்தணி முருகன் வழிதுணைத் வருவான்' என்ற பிரபல மொழியை அனுபவத்தில் கண்ட சுவாமிகள் வியப்பில் ஆழ்ந்தார்கள்.

## ஆதீன கர்த்தர் ஆதல்

16. 2. 71இல் கோவிலூர் மடாலயப் பொறுப்பை இவர்கள் ஏற்று இராமநாத ஞான தேசிகர் ஆனார்கள். பொறுப்பேற்றது முதல் இவர்கள் ஆற்றிவரும் பணிகள் பல.

## ஆண்டவர் மன்றம்

முதலில் மடாலய நிருவாகத்தை ஒழுங்கு படுத்தினார்கள். ஆண்டவர் மன்றம் ஏற்படுத்தி நிருவாகப் பொறுப்பை அதனிடம் ஒப்படைத்தார்கள். அதன் நிரந்தரத் தலைவர் சுவாமிகள் அவர்கள். இரு உபதலைவர்கள், ஒரு செயலர், ஒருதுணைச் செயலர், ஒரு பொருளாளர், 8 உறுப்பினர்கள் ஆக பதினால்வர் கொண்ட நிருவாகக்குழு பொறுப்பேற்று இயங்கி வருகிறது.

ஆதீனம், கிளைமடங்கள் ஆகியவற்றின் தஸ்தாவேசுகளையும் ஆதாரங்களையும் ஒழுங்கு படுத்தித் தொகுத்து வைத்திருப்பது சுவாமிகள் சாதித்துள்ள பெரிய சாதனை.



ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாதேவ ஞான தேசிக
சுவாமிகள் அவர்கள்



ஸ்ரீ-ல-ஸ்ரீ சோமசுந்தர ஞான
தேசிக சுவாமிகள் அவர்கள்



ஸ்ரீ-ல-ஸ்ரீ இராமநாத ஞான தேசிக சுவாமிகள் அவர்கள்



ஸ்ரீ-ல-ஸ்ரீ இராமநாத ஞான தேசிக சுவாமிகள் அவர்கள்

சிதம்பரம் முதலான மற்றைய கிளைமடங்களிலும் நிருவாகம் சீர்திருத்தப்பட்டது. எல்லா ஊர்களிலும் மடாலயக் கட்டிடங்கள் புதுப்பிக்கப் பெற்றன. காலத்திற்கேற்ற நவீன வசதிகள் அமைக்கப்பட்டன.

கோவிலூர் நுழைவாயிலில் இருந்த தேர் மண்டபங்கள் பல வருடங்களுக்கு முன்பு புயலில் விழுந்து விட்டன. ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் அருளாட்சி ஏற்பட்டதும் அவை மீண்டும் புதுப் பொலிவோடு என்றும் அழியாத காங்கிரீட் மண்டபங்களாக கம்பீரமாகக் காட்சியளிக்கின்றன. கோட்டையூர் திருப்பணி செல்வர். அ. க. அ. சித. அழ. சிதம்பரஞ் செட்டியார் அவர்களின் கொடைத்திறனால் இவை மீண்டும் உருவாயின. இவர்கள் கோவிலூர் மடாலயத்தில் அதிலும் சுவாமிகளிடத்தில் மிக்க ஈடுபாடு உடையவர்கள்.

## கும்பமேளா யாத்திரை

1977ஆம் வருடம் ஸ்ரீலஸ்ரீ திருச்சி சுவாமிகளுடனும் சாதுக்களுடனும் நம் சுவாமிகள் அலகாபாத் பிரயாகையில் நடைபெற்ற கும்பமேளாவுக்குச் சென்று ஸ்ரீ காசி முதலான வடநாட்டுத் தல யாத்திரை மேற்கொண்டு திரும்பினார்கள். இந்த யாத்திரை ஸ்ரீலஸ்ரீ திருச்சி சுவாமிகள் அவர்களின் திட்டப்படியும் ஏற்பாட்டின்படியும் அன்பர்களால் சிறப்பாகச் செய்யப் பெற்றது.

## அருள்மிகு திருநெல்லை அம்மை தோற்றம்

வருடந்தோறும் விஜயதசமி அன்று காலை அம்பு போடுவதற்கு திருநெல்லை அம்மை காரைக்குடி மகார் நோன்பு அக்கிரகாரத்துக்கு எழுந்தருளுவது வழக்கம்.

சென்ற 1976ம் ஆண்டு விஜயதசமிக்கு முதல் நாள் இரவு, நம் சுவாமிகள், மறு நாள் அதிகாலையில் எழுந்து புறப்பட ஆயத்தமாகி விட வேண்டும் என்ற எண்ணத்துடன் படுத்தார்கள். விஜயதசமி அன்று காலை 5 மணிக்கு விழித்துக்கொண்டு விட்டார்கள். படுத்திருந்த இடத்துக்கு அருகில் ஒரு சிறு பெண் மிகவும் வருத்தத்தோடு நிற்பதைக் கண்டார்கள். மடாலயத்துள் பெண் குழந்தை நிற்கிறதே, அதுவும் வருத்தம் தோய்ந்த முகத்துடன் இருக்கிறதே என்று வியப்புத் தோன்ற கண்களை நன்றாகத் தேய்த்து விட்டுப் பார்த்தபோது தோற்றம் மறைந்துவிட்டது. அருள்மிகு திருநெல்லை அம்மையே சுவாமிகளுக்குக் காட்சியளித்து நிலைமையை விளக்கியதுபோல் தோன்றியது.

காரைக்குடிக்கு வந்ததும் அங்கு சுவாமி தரிசனத்துக்கு வந்திருந்த நகரத்தார்களிடம் கோவிலூர் கோவில் கும்பாபிஷேகம் நடந்து சுமார் எழுபது ஆண்டுகள் ஆகின்றன. கோவிலைப் பழுது பார்த்துக் குடமுழுக்குச் செய்ய வேண்டும் என்ற கருத்தை வெளியிட்டார்கள்.

அங்கு கூடியிருந்த நகரத்தார் எல்லோரும் ஒரே மனமாக 'செய்ய வேண்டியதுதான் அதையும் சுவாமிகள் காலத்திலேயே செய்து விட வேண்டும்' என மனமகிழ்வோடும் ஆர்வத்தோடும் சொன்னார்கள். அன்று முதல் சுவாமிகள் இப்பணியில் கருத்தைச் செலுத்தினார்கள். நகரத்தார் பெருமக்கள் எல்லோரும் உவகையோடும் உற்சாகத்தோடும் ஆலயப்பணிக்கும் குடமுழுக்கு விழாவிற்கும் உதவி வந்திருப்பது பாராட்டத்தக்கது.

1977-ல் ஓய்வு பெறும் பொருட்டு, காளையர்கோவில், மதுரை மடாலயங்களின் மடாதிபதியான தவத்திரு அரு. இராமநாத சுவாமிகளைத் தம் வாரிசாக ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் நியமித்திருக்கிறார்கள்.

ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் அவர்களின் அருளாட்சி நீடியதாக, நாடு செழிப்பதாக, நகரம் ஓங்குவதாக; நற்றவர் நனி சிறந்து வாழ்வாராக, செல்வம் பெருகுவதாக; சீரும் சிறப்பும், அன்பும் இன்பமும் பெற்று மக்கள் வாழ்வாராக; சிவம் சிறப்பதாக என அம்மை அப்பரின் இணை அடிகளை இறைஞ்சி ஏத்துவோமாக! ★

கோவிலூரர் ஆதீனத்தின் ஒன்பதாவது குருமூர்த்திகளாய் எழுந்தருளி இருக்கின்ற தவத்திரு இராமநாத ஞான தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் அவர்கள் மீது பாடியது.

## பிள்ளையார் வணக்கம்

### குறள் வெண்பா

யானும் பொருள்சார்ந் தெழில்செய் கவிபாடற்
கானைமுகத் தாயெற் கருள.

### நேரிசை யாசிரிப்பா

குவலயம் போற்றுங் கோவிலூ ரதனிற்
றவநிலைப் பீடத் தலைமை யேற்று
ஒன்பதா மதிபராய் ஒளிபெறத் திகழ்ந்தே
அவனியி லுள்ள அன்பர் தம்மை
சிவநிலை யெய்தச் செய்திடுஞ் சீலா!
பராவரு மாண்டவர் பண்புடை வழிசால்
இராமநா தஞான தேசிக இனியோய்!
புண்ணிய முதல்வ! புகழ்சால் புனித!
இளமை யிற்சீர் திருத்தச் செம்மல்
முருகப் பாவோ டொன்றி நின்றனை
நாட்டுத் தொண்டில் நாட்ட முற்றனை
சமுகப் பணியைச் சளையா தாற்றினை
நிலையா யாக்கை நீர்மை யோர்ந்து
நிலைத்த இன்பம் பெறவே நினைந்து
இல்லற வாழ்வை இனிதே விடுத்து
நல்லறத் துறவை நயந்தனை நல்லோய்!
சிக்கல் சென்று சின்னாள் தங்கினை
வேதாந் தத்தை விரும்பிக் கற்றனை
சிற்பர முதல்வன் சீருட னுடும்
சிதம்பரஞ் சென்று சிவத்தைக் கண்டனை
அவன்ற னூட்டமே அவனியி னூட்டம்
அயனு மாலு அடிமுடி அறியா
அண்ணு மலையை யடைந்தனை ஐய!
அடியவ ருளத்தை அன்புட னீர்த்துப்
படியினி லுயர்த்தும் பதியது வாமே,
ஆண்டே தங்கினை யாண்டுகள் பலவே
எழில்நிறை ஈசான் யமட மதனில்
இருந்தனை முதல்வரா யாவரும் போற்ற
அண்ணு மலையான் அணிதிகழ் தேரைப்
பன்னரு முறையால் பாங்குடன் செய்தனை
சாது சமாசம் தழைக்கச் செய்தனை
சேவா சிரமம் செய்தனை சீராய்
ஒழுக்கமும் கல்வியும் ஒண்பொரு ளென்றே
உயர்ந்தோர் யாவரு முரைத்த படியே
சிறக்கச் செய்ய சிந்தனை கொண்டு
சிறுவர் தமக்கே சிறப்புடைக் கல்வி
சிறந்த வுண்டி சீருடை யுதவி
அவற்றிற் காக அல்லும் பகலும்
உழைத்துழைத் துன்னுட லோடா யினதை
நன்பே ருலகம் நன்கறி யுமன்றே
மக்கட் பணியே மாதவப் பணியாய்
எக்கா லத்து மேற்றிடு மேந்தால்
பற்பல நாடும் பற்பல தலமும்
பற்பல மூர்த்தியும் பற்பல தீர்த்தமும்
படிந்து வந்த பண்புடை யாளா!
அநுபவ வறிவு மான்மிக வறிவும்
நிறையப் பெற்ற நிமலபல் லாண்டு
கொற்றவா ளீசர் கொடியிடை நங்கை
நற்றிரு நெல்லை நாயகி யருளால்
எந்தங் குருவா யெழில்பெற
வாழிபல் லூழியும் வாழிவா ழியவே!

—வித்துவான் சொ. அழகப்பன், 1971



# கோவிலூர் ஆதீன இளவரசு
# ஸ்ரீ அரு. இராமநாத சுவாமிகள் அவர்கள்

இவர்கள் புதுக்கோட்டை மாவட்டம் அரிமழம் என்னும் ஊரில் நகரத்தார் மரபில் செல்லப்ப செட்டியார், மீனாட்சி ஆச்சி ஆகியோரின் மகனாகப் பிறந்து ஆங்கேயே உயர் நிலைப் பள்ளியில் படித்தார்கள். பின்னர் காரையார் கோவில் செல்லப்ப சுவாமிகள் மடத்தை தமது இருபதாவது வயதில் 1948-ல் அடைந்து அருணாசல சுவாமிகளின் தலை மாணாக்கர் ஆயினர். வேதாந்த பாடங்களைப் படித்து தீட்சையும்பெற்றுக் கொண்டார்கள்.

இவர்கள் 1968-ல் சந்நியாசம் பெற்றுக் கொண்டார்கள்.

1970 முதல் காரையார் கோவில் செல்லப்ப சுவாமிகள் மடாலயம், மதுரை குட்டைய சுவாமிகள் மடாலயம் ஆகியவற்றின் மடாபதியாகவும், 1976-முதல் சிதம்பரம் கோ.சித மடாலயத்தின் மடாதிபதியாகவும் இருந்து வருகிறார்கள்.

கோவிலூர் ஆதீனத்தின் ஒன்பதாவது ஆதீன கர்த்தர் ஸ்ரீ-லஸ்ரீ இராமநாத ஞான தேசிகர் அவர்கள் 1976-ல் ஸ்ரீ அரு. இராமநாத சுவாமிகள் அவர்களைத் தம் வாரிசாக நியமித்துள்ளார்கள் கோவிலூர் மடாலயம் ஆண்டவர் மன்றத்தின் தலைவராகவும் அரு. இராமநாத சுவாமிகள் அவர்கள் இருந்து வருகிறார்கள்.

சுவாமிகள் இனிய இயல்புகள் வாய்க்கப் பெற்றவர்கள். துறவிகளிடம் சடுபாடு உடையவர்கள்.

காரையார் கோவிலில் திருவிழாக்களை இவர்கள் சிறப்பாக நடத்தி வருகிறார்கள்.

பாடல்பெற்ற சிவாலயங்கள் பலவற்றிற்கும் சென்று வழிபாடு செய்திருக்கிறார்கள். 1973ல் காசியாத்திரை மேற்கொண்டார்கள். சோதிலிங்க தலங்கள் பன்னிரண்டிற்கும் சென்று வந்துள்ளார்கள்.



## மேலமடம், காரைக்குடி

காரைக்குடி நகரச் சிவன் கோவிலுக்கு அருகே 63-வர் மடம் ஏற்பட்டு அதில் சொக்கலிங்க ஐயா என்ற பெரும்புலவர் சைவ சித்தாந்தப் பாடம் கற்பித்து வந்தார்கள். அது போல வேதாந்தப் பாடம் பயில்பவர்களுக்குத் தனியே ஒரு மடம் தேவை என்று கருதி கோவிலூர் ஆண்டவரின் சீடர் பழநியப்ப ஐயா என்பவர், நகரத்தார்களிடம் நன்கொடை பெற்று இந்த மடத்தைக் கட்டினார். இதில் ஒரு பிள்ளையார் கோவிலும் உளது. வேதாந்தப் பாடம் படிப்பவர்கள் இங்கு தங்கியிருந்தனர். ஸ்ரீமதி ஆண்டவர், துறவு ஆண்டவர், கருணாநிதி சுவாமிகள் படங்களும் வைக்கப் பெற்றுள்ளன.

இங்கு 1969 முதல் காசி நகரச் சத்திர அலுவலகம் இருந்து வருகிறது.

வைகாசி மாதத்தில் கொப்புடையம்மன் கோவில் தேர் புறப்படுகிற அன்று கோவிலூர் ஆதீனத் தலைவர், மேல மடத்தில்தங்கி, தேரை வழிபட்டு ஆண்டவர் வீட்டில் பகலுணவு உண்பது வழக்கம்.



# கோவிலூர் ஆதீன ஞானாச்சார்ய பரம்பரை

பரம்ஆக ஒளிர்சக்தி தானந்தம் ஆம் விண்டு
பங்கயன் விசிட்டர் சத்தி
பராசமர் முனிமகா வியாசர்சீர் சுகர்கௌட
பாதர் கோவிந்த யோகி
அருளுருவம் ஆம்சங்க ராசாரி யார் இறைவன்
அமரபதம் பாதர் உயர்அத்
தாமலகர் தோடகா சிரியர்வார்த் தீகர்வித்
தியாரண்யர் ஆகும் உரவோர்
இருள் உருவம் அற்றஅவர் மரபு அதனில் வந்த
சுப்பிரமணிய தேவன் நயின
ஈசன் அழ கப்பஆ ரியன்வீர பத்ரகுரு
இன்பமுத்தைய அடிகள்
தெருளுருவம் ஆம் உகர் தையன் நன்மைகளிலாத
தீயனேன் தனையும் ஆண்ட
சீர்முத்தி ராமலிங்கேசதே சிவன் இவர்கள்
திகழ்பதம் இறைஞ்சுவோமே.

1. பரம்பொருளான சச்சிதானந்தம் 2. விஷ்ணு 3. பிரம்மா 4. வசிஷ்டர் 5. சத்தி 6. பராசரர் 7. வியாசர் 8. சுகர் 9. கௌட பாதர் 10. கோவிந்தயோகி 11. சங்கராச்சாரியர் 12. பத்மபாதர் 13. அஸ்தாமலகர் 14. தோடகாச்சாரியர் 15. வார்த்திகாச்சாரியார் 16. வித்தியாரண்யர்.

அவர்கள் மரபில் வந்தவர்கள்:

1. சுப்பிரமணிய தேசிகர் 2. நயிநதேசிகர் 3. அழகப்ப தேசிகர் 4. வீரபத்திர தேசிகர் 5. முத்தைய தேசிகர் 6. உகந்த லிங்க ஞான தேசிகர் 7. முத்துராமலிங்க ஞான தேசிகர் ஆவர்

## (1) கோவிலூர் ஆதீன குரு முதல்வர் கோவிலூர் ஆண்டவர் என்னும் ஸ்ரீலஸ்ரீமுத்துராமலிங்கஞானதேசிகர் மாணுக்கர்கள்

1. துறவு ஆண்டவர் என்னும் அருணாசல ஞான தேசிகர்.
2. கருணாநிதி என்னும் சிதம்பர ஞான தேசிகர்
3. சின்னத்துறவு சுவாமிகள் என்னும் கண்டனூார் அருணாசல சுவாமிகள்

4. அரசப்ப சுவாமிகள், மதுரை
5. குட்டைய சுவாமிகள், மதுரை
6. பரிபூரண சுவாமிகள், இடைக் காட்டூர்
7. நாகலிங்க சுவாமிகள், கண்டனூர்
8. அழகப்ப சுவாமிகள், முத்துப்பட்டணம்
9. அண்ணாமலை ஐயா (சுவிகாரத் தந்தை) காரைக்குடி
10. நேமத்தான்பட்டி பழநியப்ப சுவாமிகள்
11. பள்ளத்தூர் முத்துவீரப்ப ஐயா
12. கோட்டையூர் அண்ணாமலை ஐயா
13. மேலமடம் பழநியப்ப ஐயா
14. கல்லல் வெள்ளையப்ப ஐயா
15. காரைக்குடி சின்ன அழகப்ப ஐயா
16. பள்ளத்தூர் சின்னையா ஐயா
17. காரைக்குடி நல்லான் செட்டியார்
18. தேவகோட்டை இராமநாதன் செட்டியார்
19. காரைக்குடி சாத்தப்ப செட்டியார்
20. மதுரை பாலச் சுவாமிகள்
21. தேவகோட்டை சுப. அண்ணாமலை ஐயா
22. ஞானி சின்னன் செட்டியார்
23. ராயவரம் இராமநாதன் செட்டியார்
24. கண்டனூர் கருத்தய்யா
25. அரிமளம் சுப்பிரமணிய ஐயா
26. அப்பா போலீஸ்
27. கண்டனூர் நாகப்ப ஐயா
28. பெரிய பெரியண ஐயா
29. குமரப்ப ஐயா
30. வேங்கடாசல ஐயா
31. குப்பையா
32. கருங்குளம் நாராயண ஐயா
33. கண்டனூர் இராம ஐயா
34. கண்டனூர் பெரிய வெள்ளையப்ப ஐயா
35. பள்ளத்தூர் குப்பான் செட்டி ஐயா
36. தேவகோட்டை காசி பழநியப்ப ஐயா

## குறியீட்டு எண்கள்

மாணாக்கர் பட்டியலில் சில குறியீட்டு எண்கள் கொடுக்கப்பட்டுள்ளன. சான்று 1/2/4/7, 1/31/1 போன்றவை.

இது குறித்த விளக்கம் வருமாறு :

1 என்பது கோவிலூர் ஆதீனம் நிறுவிய முத்துராமலிங்க ஆண்டவரைக் குறிக்கும். 1/1/5 என்பது ஆண்டவரின் மாணவரான துறவு சுவாமிகளின் மாணாக்கரான திருக்களர் ஆண்டவரைக் குறிக்கும்.

## 1/1 கோவிலூர் ஆதீனம் இரண்டாவது குருமூர்த்தி துறவு ஆண்டவர் என்னும் ஸ்ரீலஸ்ரீ அருணாசல ஞானதேசிகர் மாணாக்கர்கள்

1. கோட்டாறு நித்தியானந்த சுவாமிகள்
2. சிதம்பரம் கேணிமடம் நித்தியானந்த சுவாமிகள்
3. வளவனூர் ஷண்முக சுவாமிகள்
4. பஞ்சலட்சண வித்வான் மதுரை சுப்பராய சுவாமிகள்
5. திருநெல்வேலி சுப்பிரமணிய சுவாமிகள்
6. வன்னியம் பிரம்மானந்த சுவாமிகள்
7. கோவிந்த சுவாமிகள்
8. மதுரை மெய்யப்ப ஐயா
9. பாகனேரி முத்துக்கறுப்ப ஐயா
10. காரைக்குடி சபாபதி ஐயா
11. கோட்டையூர் சொக்கப்ப ஐயா
12. பழையூர்பட்டி சேது ஐயா
13. ,, பழநிக்குமார் சுவாமிகள்
14. ,, மலையாண்டி ஐயா

## 1/2 கோவிலூர் ஆதீனம் மூன்றாவது குருமூர்த்தி கருணாநிதி என்னும் ஸ்ரீலஸ்ரீ சிதம்பர ஞான தேசிகர் மாணாக்கர்கள்

1. இராமசாமி ஞான தேசிகர் (கோவிலூர்)
2. சிதம்பரம் பொன்னம்பல ஞான தேசிகர்
3. திருவாரூர் சிவானந்த சுவாமிகள்
4. மானாமதுரை நாராயண சுவாமிகள்
5. திருக்களர் ஆண்டவர் என்னும் வீரப்ப ஞான தேசிகர்
6. பொருள் வைத்த சேரி முத்தைய சுவாமிகள்
7. ,, சட்டையப்ப சுவாமிகள்
8. பஞ்சநதிக்குளம் அருணாசல சுவாமிகள்

9. வளவனூர் நமசிவாய சுவாமிகள்
10. மதுரை கண்ணப்ப சுவாமிகள்
11. ஆவுடையார் கோவில் மஹாதேவ சுவாமிகள்
12. திருவண்ணாமலை மகாதேவ சுவாமிகள்
13. சிதம்பரம் ஆறுமுக சுவாமிகள் (மௌன சுவாமிகள் மடாலயம்)
14. சிதம்பரம் அ. இராமசாமி சுவாமிகள் (ஆயிகுளம் தென்கரை)
15. கீழப்பூங்குடி சேவுக சுவாமிகள்
16. ஆண்டியப்பன்காடு சிதம்பர ஐயா
17. தேனிபட்டி அருணாசல ஐயா
18. கருங்காலங்குடி வைரவ ஐயா
19. கீழப்பூங்குடி கண்ணப்ப ஐயா
20. தேவகோட்டை லெட்சுமண ஐயா
21. கண்டனூர் சின்னையா ஐயா
22. அழகிச்சிபட்டி இராமசாமி ஐயா
23. நாகைக் காரோணம் ஷண்முக சுவாமிகள்
24. பனமூர்பட்டி குருசாமி ஐயா
25. ,, மலை மந்தைய ஐயா
26. மழஞ்சான் அழகு ஐயா
27. ,, பெரியகருப்ப ஐயா

1/2/1 கோவிலூர் ஆதீனம் நான்காவது குருமூர்த்தி ஸ்ரீலஸ்ரீ இராமசாமி ஞானதேசிகர் மாணாக்கர்கள்

1. சாக்கோட்டை வீரப்ப ஞான தேசிகர்
2. கானையார் கோவில் செல்லப்ப ஞான தேசிகர்
3. சாக்கோட்டை முத்துக் கருப்ப சுவாமிகள்

1/2/5 கோவிலூர் ஆதீனம் ஐந்தாவது குருமூர்த்தி ஆண்டவர் என்னும் ஸ்ரீ-ல-ஸ்ரீ வீரப்ப ஞானதேசிகர் மாணாக்கர்கள்

1. அண்ணாமலை ஞான தேசிகர் (கோவிலூர் ஆறுவது குருமூர்த்தி)
2. நாட்டரசன் கோட்டை மெய்யப்ப ஞான தேசிகர் (பொருள் வைத்த சேரி மடாதிபதி)
3. மகாதேவ ஞான தேசிகர் (கோவிலூர்— ஏழாவது குருமூர்த்தி)

சென்னை வீர. சுப்பையசுவாமிகள் (நான்கு
4. மொழிகளில் நாவன்மை படைத்தவர்)
5. ஏகாம்பரக்குப்பம் பேட்டை சிவானந்த யதீந்திர சுவாமிகள் (வேத மொழி பெயர்ப்பு ஆசிரியர்)
6. திருப்பூவணம் மடாதிபதி காசிகானந்த ஞானாச்சார்ய சுவாமிகள்
7. திருக்களர் (நா. சுவாமிகள் என்னும்) நாராயண சுவாமிகள் (கேரளம்)
8. பொருள்வைத்தசேரி மாரிமுத்து சுவாமிகள்
9. மைசூர் அனந்தபத்மநாப சுவாமிகள்
10. பசுபதிகோவில் சிதம்பர சுவாமிகள்
11. மானாமதுரை வெள்ளியங்கிரி சுவாமிகள்
12. மானாமதுரை சதாசிவ சுவாமிகள்
13. திருவண்ணாமலை சதானந்த சுவாமிகள்
14. ஆத்தூர் வேலாயுத சுவாமிகள்
15. புதுச்சேரி வேதானந்த சுவாமிகள்
16. மதுரை பிரம்மானந்த சுவாமிகள் மடாலயத்தின் தலைவர் சோமசுந்தர சுவாமிகள்
17. மழபாடி சதாசிவ சுவாமிகள்
18. வேப்பஞ்சேரி ஞானவளி சொக்கலிங்க சுவாமிகள்
19. குன்றக்குடி மேலமடம் கணபதி சுவாமிகள்
20. பிரமசபை அருணாசல சுவாமிகள் (சின்னமரெட்டிபட்டி)
21. விருத்தாசலம் கணபதி சுவாமிகள் (இரண்டாம் பாடம்)
22. கையகம் சதாசிவ சுவாமிகள்
23. பஞ்சநதிக்குளம் வைத்தியலிங்க சுவாமிகள்
24. கண்ணுடிக்கார இராமசாமி சுவாமிகள்
25. அகிலாண்டபுரம் ஷண்முக சுவாமிகள்
26. பெங்களூர் பிரம்மானந்த சுவாமிகள்
57. எட்டையபுரம் சித்தலக்கரை வெள்ளையப்ப சுவாமிகள்
23. ஆண்டியப்பன்காடு வேதவன சுவாமிகள்
29. பழையூர்பட்டி அருணாசல சுவாமிகள்
30. ஏம்பல் சாத்தப்ப சுவாமிகள்
31. பூண்டி (வட ஆர்க்காடு) சுப்பராய சுவாமிகள்

32. ஆருவயல் முத்தைய சுவாமிகள்
33. அம்பாசமுத்திரம் ஆற்றங்கரைநாராயண சுவாமிகள்
34. கங்காதர சுவாமிகள்
35. மண்டபப்பட்டு வேங்கடாசல ரெட்டியார் (வேங்கட முனிவர்)
36. காரைக்குடி வேங்கடாசல ஐயா
37. கோட்டையூர் அழகப்ப ஐயா
38. தேனிபட்டி அடைக்கப்ப ஐயா
39. திருவளர்சோலை கோவிந்த ஐயா
40. பழையூர்பட்டி அ. மந்தைய ஐயா
41. பழையூர்பட்டி பெருமாள் ஐயா
42. சுப்பிரமணிய ஐயா
43. பசுமடம் அருணாசல சுவாமிகள்
44. குட்டைய ஐயா
45. குமரப்ப ஐயா
46. மாணிக்க ஐயா

1/2/5/1 கோவிலூர் ஆதீனம் ஆருவது குரு மூர்த்தி ஸ்ரீலஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிகர் மாணாக்கர்கள்

1. சோமசுந்தர ஞானதேசிகர் (கோவிலூர்)
2. திருக்களர் ஷண்முக சுவாமிகள்
3. புனல்வாசல் மஹேஸ்வரானந்தகிரி சுவாமிகள்
4. புனல்வாசல் கணபதி சுவாமிகள்
5. குச்சனூர் ஆறுமுக சுவாமிகள்
6. துறையூர் பெருமாள் சுவாமிகள்
7. கீழப்பழுவூர் சின்னையா செட்டியார்
8. ஆத்தங்குடி பழனியப்ப ஐயா
9. சுவாமிநாத உபாத்தியாயர்

1/2/5/3 கோவிலூர் ஆதீனம்ஏழாவது குருமூர்த்தி ஸ்ரீலஸ்ரீ மஹாதேவ ஞான தேசிகர் மாணாக்கர்கள்

1. சேலம் குகை இராமசாமி சுவாமிகள்
2. காரியானூரார் நடேச சுவாமிகள்
3. மானாமதுரை சிவப்பிரகாச சுவாமிகள்
4. திருமழபாடி இராமசாமி சுவாமிகள்
5. திருக்களர் கிருஷ்ணாநந்த சுவாமிகள்
6. கொப்பமாபுரி மஹா கோவிந்த சுவாமிகள்
7. கரந்தை வாசுதேவ சுவாமிகள்
8. மானாமதுரை அமிர்தலிங்க சுவாமிகள்
9. திருச்சிராப்பள்ளி அத்வைதானந்த சுவாமிகள்
10. திருச்சிராப்பள்ளி கிருஷ்ணாநந்தகிரி சுவாமிகள்
11. திருவண்ணாமலை கந்தசாமி சுவாமிகள்
12. திருவண்ணாமலை வேலாயுத சுவாமிகள்
13. கீழப்பழுவூர் பாலகிருஷ்ண சுவாமிகள்
14. பிள்ளையார்பட்டி குழந்தைவேல் சுவாமிகள்
15. பிள்ளையார்பட்டி சந்திரசேகர சுவாமிகள்
16. மதுரை சிவானந்த சுவாமிகள்
17. வேலூர் நாராயண சுவாமிகள்
18. காஞ்சிபுரம் கோபாலானந்த சுவாமிகள்
19. மழபாடி இராகவ சுவாமிகள்
20. அம்பாசமுத்திரம் சுப்பைய சுவாமிகள்
21. சிதம்பரம் பரமசிவ சுவாமிகள்
22. குன்றக்குடி இராமசாமிசுவாமிகள்
23. ஸ்ரீரங்கம் சிவராம சுவாமிகள்
24. ஏம்பல் சுப்பைய சுவாமிகள்
25. கோவிலூர் முத்தைய சுவாமிகள்
26. கோவிலூர் பரமசிவ சுவாமிகள்
27. கோவிலூர் வேங்கடாசல சுவாமிகள்
28. எறும்பூர் விசுவநாத சுவாமிகள்
29. எமனேசுவரம் முத்தைய சுவாமிகள்
30. மானாமதுரை ரெங்கநாத சுவாமிகள்
31. குடியாத்தம் நாகப்ப சுவாமிகள்
32. பெங்களூர் இராமசாமி சுவாமிகள்
33. இடைக்காட்டூர் சண்முக சுவாமிகள்
34. பசுமடம் பெருமாள் சுவாமிகள்
35. மழபாடி சாந்தானந்த சுவாமிகள்
36. பொருள்வைத்தசேரி அம்பலவாண சுவாமிகள் (யாழ்ப்பாணம்)
37. சேலம் சின்ன மாணிக்க சுவாமிகள்
38. இலக்கணம் இராமசாமி சுவாமிகள்
39. வைத்தியலிங்க சுவாமிகள்
40. கணபதி சுவாமிகள்
41. பூரிணாநந்த சுவாமிகள்

42. முத்துலிங்க சுவாமிகள்
43. வித்வான் சேர்மசுந்தர ஐயா
44. காரைக்குடி வேங்கடாசல ஐயா
45. மலையானம் கிருஷ்ண ஐயா
46. மழபாடி சின்னமடம் மாணிக்க ஐயா
47. கோவிலூர் மாரிமுத்து ஐயா

ஸ்ரீலஸ்ரீ மஹா தேவ ஞான தேசிகரிடம் சந்நியாசம் பெற்ற நகரத்தார்கள்

1. தேவகோட்டை ஜமீன்தார் சுவாமிகள் (காளையார் கோவில்)
2. கோனாபட்டு சிவானந்த சுவாமிகள் (சிவா பழநியப்பா)
3. ஆத்தங்குடி அருணாசல சுவாமிகள் (பில்ல மங்கலம்)
4. கோட்டையூர் அழகப்ப சுவாமிகள் (கோவிலூர்)
5. பட்டமங்கலம் அடைக்கப்ப சுவாமிகள்
6. பள்ளத்தூர் முத்துவீரப்ப சுவாமிகள் (கோவிலூர்)
7. கீழப்பூங்குடி சேவுக சுவாமிகள்
8. கிழப்பூங்குடி (சுப. சேவு) சொக்கலிங்க சுவாமிகள்

1-2-5-1-1 கோவிலூர் ஆதீனம் எட்டாவது குருமூர்த்தி ஸ்ரீலஸ்ரீ சோம சுந்தர ஞான தேசிகர் மாணுக்கர்கள்

1. இராமநாத ஞான தேசிகர் (கோவிலூர்)
2. பொருள்வைத்தசேரி இராமலிங்க சுவாமிகள்
3. மேட்டுப்பாளையம் (வ. ஆ.) சொரூபானந்த சுவாமிகள்
4. கோவிந்த சுவாமிகள்
5. கோபால் சுவாமிகள்
6. பசுபதி சுவாமிகள்
7. திருவாரூர் முத்தைய சுவாமிகள்
8. விநாயகானந்த சுவாமிகள் (பொதட்டூர்ப் பேட்டை)
9. வேலூர் (வ. ஆ.) வடிவேல் சுவாமிகள்
10. சிதம்பரம் சோமசுந்தர சுவாமிகள்
11. சிதம்பரம் வீரப்ப சுவாமிகள்
12. கீழப்பூங்குடி சொக்கலிங்க ஐயா (சந்நியாசம்)

1-2-5-6. திருப்பூவனம் ஸ்ரீமத் காசிகாநந்த ஞானாச்சார்ய சுவாமிகள் மாணுக்கர்கள்

1. வேதாரண்யம் சிவானந்த சுவாமிகள்
2. விவேகானந்த சுவாமிகள்
3. ராஜு ஐயா
4. காவேரி ஐயா

1-2-5-7. திருக்களர் ஸ்ரீமத் வீர நாராயண சுவாமிகள் மாணுக்கர்கள்

1. மதுரை சின்மயானந்த சுவாமிகள்
2. பழநி சுவாமிகள்
3. களப்பால் தொப்பைய முதலியார்
4. களப்பால் வேதம் அண்ணியார்
5. களப்பால் சுந்தரம் அம்மையார்

1-4. மதுரை ஸ்ரீமத் அரசப்ப சுவாமிகள் மாணுக்கர்கள்

1. பிரம்மானந்த சுவாமிகள்

1-4-1 மதுரை-பிரம்மானந்த சுவாமிகள், ஸ்ரீமத் . மாணுக்கர்கள்

1. பாலானந்த சுவாமிகள்
2. சுத்த பிரம்மானந்த சுவாமிகள்
3. சங்கரானந்த சுவாமிகள்
4. அத்வைதானந்த சுவாமிகள்

1-5. மதுரை-ஸ்ரீமத் குட்டைய சுவாமிகள், மாணுக்கர்கள்

1. சின்னைய சுவாமிகள்
2. புதுவயல் வீரப்ப ஐயா

1-2-5-2-1. காளையார் கோவில் ஸ்ரீல ஸ்ரீ அருணாசல ஞான தேசிகர் மாணுக்கர்கள்

1. மதுரை சங்கர சுவாமிகள்
2. அரு. இராமநாத சுவாமிகள் (கோவிலூர் இளைய சந்நிதானம்)

1-2-5-2-1-1. மதுரை ஸ்ரீமத் சங்கர சுவாமிகள் மாணுக்கர்கள்

1. வேப்பஞ்சேரி சிவானந்த ஐயா
2. இளையாங்குடி குப்பையா

## 1-10. நேமத்தான்பட்டி பழநியப்ப சுவாமிகள் மாணுக்கர்கள்

1. மகாதேவ சுவாமிகள்
2. கிருஷ்ண சுவாமிகள்
3. முத்துக்குமார சுவாமிகள்
4. வெங்கடாசல சுவாமிகள்
5. பூங்குடி கண்ணப்ப ஐயா
6. கடியாபட்டி அருணுசல ஐயா

## 1-2-2. சிதம்பரம் ஸ்ரீமத் பொன்னம்பல ஞான தேசிகர் மாணுக்கர்கள்

1. காசிவாசி சிதம்பர ஞான தேசிகர்
2. திருவளர்சோலை சுப்பராய சுவாமிகள்
3. வேதாரண்யம் கந்தசுவாமி சுவாமிகள்
4. சிதம்பரம் குஞ்சிதபாத சுவாமிகள்
5. திருவாரூர் சுவாமிநாத சுவாமிகள்
6. திருவண்ணுமலை வீரப்ப சுவாமிகள் (பவழக்குன்று மடம்)
7. குமாரபாளையம் சிதம்பர சுவாமிகள்
8. புனல் வாசல் சிதம்பர சுவாமிகள்
9. எறும்பூர் முத்துக்கிருஷ்ண சுவாமிகள்
10. கண்டனூர் முத்துராம ஐயா
11. சேவுக ஐயா
12. எறும்பூர் பொன்னுச்சாமி ஐயா
13. எறும்பூர் தாண்டவராய ஐயா
14. முள்ளங்குடி நாராயணசாமி ஐயா

## 1-2-2-1. ஸ்ரீமத் காசிவாசி சிதம்பர ஞான தேசிகர் மாணுக்கர்கள்

1. பரஞ்சோதி சுவாமிகள்
2. திருநீலகண்ட சுவாமிகள்
3. சின்னசுப்பைய சுவாமிகள், திருவண்ணுமலை
4. சொக்கலிங்க சுவாமிகள், லெட்சுமிபுரம்
5. குப்புசாமி சுவாமிகள், திருவண்ணுமலை
6. பண்டித-சங்கத்து நாராயண சுவாமிகள்
7. பழங்கோவில் (வ . ஆ .) சின்னச்சாமி சுவாமிகள்

## 1-2-1-2. காளையார் கோவில் ஸ்ரீமத் செல்லப்ப ஞான தேசிகர் மாணுக்கர்கள்

1. காளையார் கோவில் ஜமீன்தார் சுவாமிகள்
2. பெத்தநாயக்கன் பாளையம் பொன்னம்பல சுவாமிகள்
3. சேலம் மாரிமுத்து சுவாமிகள்
4. இளையாங்குடி சிவானந்த சுவாமிகள்
5. பழநி முத்துசாமி சுவாமிகள்
6. முதுகுளத்தூர் சுப்பைய சுவாமிகள்.
7. சாக்கோட்டை நாராயண சுவாமிகள்
8. கரூர் முத்தைய சுவாமிகள்
9. பெருமாள் சுவாமிகள்

## 1-2-1-1. சாக்கோட்டை ஸ்ரீமத் வீரப்ப ஞான தேசிகர் மாணுக்கர்கள்

1. சங்கர சுவாமிகள்
2. வேதானந்த சுவாமிகள், புதுச்சேரி

## 1-2- -1-2. புதுச்சேரி ஸ்ரீமத் .வேதானந்த சுவாமிகள் மாணுக்கர்

அறிவானந்த சுவாமிகள்,
கருவம்பாளையம்.

## 1-2-1-3. சாக்கோட்டை ஸ்ரீமத் முத்துக் கறுப்ப சுவாமிகள் மாணுக்கர்

மேட்டுப்பாளையம் (வ.ஆ.)
கந்தசாமி சுவாமிகள்

## 1-2-5-2. பொருள்வைத்தசேரி ஸ்ரீமத் மெய்யப்ப ஞான தேசிகர், மாணுக்கர்கள்

1. காளையார்கோவில் அருணுசல தேசிகர்
2. குச்சனூர் முத்தானந்த சுவாமிகள்
3. நாட்டரசன் கோட்டை கண்ணப்ப சுவாமிகள் (பெருமாள்கோவில்)
4. புத்தூர் கிருஷ்ண சுவாமிகள்

## 1-2-5-4. சென்னை ஸ்ரீமத் வீர. சுப்பைய சுவாமிகள் மாணுக்கர்கள்

1. வீர சு. அனந்தாநந்தசுவாமிகள்
2. வீர. சு. சண்முகானந்த சுவாமிகள்
3. அலமலானந்த சுவாமிகள்
4. சிவானந்த சுவாமிகள்
5. ஞானனந்த சுவாமிகள்
6. கிருஷ்ணுனந்த சுவாமிகள்
7. கணபதியானந்த சுவாமிகள்
8. மலையனூர் நித்தியானந்த சுவாமிகள்

9. சொருபானந்த சுவாமிகள்
10. மாணிக்க ஐயா

1–2–4. மானாமதுரை ஸ்ரீமத் நாராயண சுவாமிகள் மாணாக்கர்

வேலாயுத சாமிகள்

1–1–6. வன்னியம் ஸ்ரீமத் பிரமானந்த சுவாமிகள் மாணாக்கர்கள்

1. வல்லநாடு சிவராமலிங்க சுவாமிகள்
2. கமுதி கணபதியானந்த சுவாமிகள்
3. கோவில்பட்டி முத்தானந்த சுவாமிகள்
4. அறிவானந்த சுவாமிகள்
5. சிவசங்கர சுவாமிகள்

1–16–2. கமுதி ஸ்ரீமத் கணபதியானந்த சுவாமிகள் மாணாக்கர்கள்

1. புத்தூர் அத்வைதானந்த சுவாமிகள்
2. திருப்பரங்குன்றம் மகாதேவ சுவாமிகள்

1-1-6-3. கோவில்பட்டி ஸ்ரீமத் முத்தானந்த சுவாமிகள் மாணாக்கர்

அம்பாசமுத்திரம் ஆதிமானந்த சுவாமிகள்

1–1–6–3–1. அம்பாசமுத்திரம் ஆத்மானந்த சுவாமிகள் மாணாக்கர்

அமலானந்த சுவாமிகள்

1-2–5–3–2. காரியானூர் ஸ்ரீமத் நடேச ஞான தேசிகர் மாணாக்கர்கள்

1. இராமநாத ஞான தேசிகர், கோவிலூர் (ஒன்பதாவது குருமூர்த்தி)
2. இராமானந்த சுவாமிகள், மேட்டுப் பாளையம் (வ. ஆ.)
3. சோமசுந்தர சுவாமிகள்
4. சொருபானந்த சுவாமிகள்
5. அமிர்தலிங்க சுவாமிகள்
6. அருணகிரி சுவாமிகள்
7. சபாபதி சுவாமிகள்
8. சச்சிதானந்த சுவாமிகள், திருவாலந்துறை
9. திருவளர்சோலை ஷண்முகானந்த சுவாமிகள்
10. கோவிலூர் விமலானந்த சுவாமிகள்
11. இராமலிங்க ஐயா
12. கந்தசாமி ஐயா
13. பொன்னுசாமி ஐயா
14. ரெங்கசாமி ஐயா
15. பிரயாம்பட்டு மாணிக்க முதலியார்
16. பூண்டி (தெ. ஆ.) மெய்வராய பிள்ளை
17. காரியனூர் கிருஷ்ணசாமி உடையார்
18. காரியனூர் தங்கம்மாள்
19. மருதமுத்து ஐயா

–2-5-3-1. சேலம் குகை ஸ்ரீமத் இராமசாமி ஞான தேசிகர் மாணாக்கர்

நெரூர் சதாசிவானந்த சுவாமிகள்

1-2-2-5. திருவாரூர் ஸ்ரீமத் சுவாமிநாத சுவாமிகள மாணாக்கர்

திருவாரூர் சங்கரானந்த சுவாமிகள்

1-2-5-12. மானாமதுரை ஸ்ரீமத் சதாசிவ சுவாமிகள் மாணாக்கர்

நாராயண ஐயா

1-2-5-13. திருவண்ணாமலை ஸ்ரீமத் சதானந்த சுவாமிகள் மாணாக்கர்

மௌன சுவாமிகள், திருவண்ணாமலை

1-2-5-17. வேப்பஞ்சேரி (குருவளி) ஸ்ரீமத் சொக்கலிங்க சுவாமிகள் மாணாக்கர்

இராமலிங்க சுவாமிகள்

1-2-5-15. மதுரை ஸ்ரீமத் சோமசுந்தர சுவாமிகள் மாணாக்கர்கள்

1. கந்தசாமி சுவாமிகள்
2. பெருமாள் சுவாமிகள்
3. சின்மயானந்த சுவாமிகள்

1-2-2-1-2. ஸ்ரீமத் திருநீலகண்ட சுவாமிகள், மாணாக்கர்கள்

1. வேட்டைக்காரன் புதூர் நித்தியானந்த சுவாமிகள்
2. ஆத்தூர் ஷண்முகானந்த சுவாமிகள்

1-2-2-7. குமாரபாளையம் ஸ்ரீமந் சிதம்பர சுவாமிகள் மாணாக்கர்

நந்தகோபால் சுவாமிகள்

1-2-2-7-1. குமாரபாளையம் ஸ்ரீமத் நந்தகோபால் சுவாமிகள் மாணாக்கர்

முருகானந்த சுவாமிகள்

1-2-5-3-6. கொப்பமாரி ஸ்ரீமத் மகா கோவிந்த சுவாமிகள் மாணுக்கர்கள்

1. கரந்தை கிருஷ்ணனந்த சுவாமிகள்
2. கொப்பமாபுரி நடராஜ சுவாமிகள்
3. இராம ருக்மணி அம்மையார்
4. காரைக்குடி டாக்டர் கோவிந்த சுவாமியார்
5. ஏம்பல் மு. சி. சுப்பராய செட்டியார்
6. குகையூர் புலவர் அடிகளாசிரியர்
7. வைரிசெட்டிபாளையம் நா. அரங்கராசன்
8. ,, பா. அரங்கராசன், முத்தமிழ்ப்பண்ணை
9. ,, சு. நடராசன்
10. ,, புலவர் சு. சப்தரிஷி
11. ,, புலவர் வே. இராமசாமி
12. ,, பொ. பங்காருசாமி
13. ,, எல். மாணிக்கம்
14. கோட்டத்தூரி புலவர் ச. கணபதி
15. கோட்டப்பாளையம் எஸ். கிருஷ்ணமூர்த்தி
16. ஏகாம்பரக்குப்பம் பி. எஸ். வெங்கடேச முதலியார்
17. ,, டி. அண்ணுமலை முதலியார்
18. ,, டி. ஏ. பொன்னப்ப முதலியார்
19. சத்திரவாடி ஜே. நடேச முதலியார்
20. நல்லவாணன்பேட்டை தருமலிங்க முதலியார்
21. புண்ணியம் கோவிந்தசாமி செட்டியார்
22. ,, எஸ். நரசிம்மன்
23. சிந்தலப்பேட்டை ஏ. கனகசபை முதலியார்
24. ,, ஏழுமலை முதலியார்
25. சென்னை கீழ்ப்பாக்கம் எம். பி. கிருஷ்ண சாமி பிள்ளை
26. ,, சிந்தாதிரிப்பேட்டை ஏ. கனகசபைப் பிள்ளை
27. நன்னிலம் பி. ஆர். சுப்பிரமணிய செட்டியார்
28. ,, வேலுச்சாமி பிள்ளை
29. திருமருகல் கே. புருஷோத்தம முதலியார்
30. ,, கே. பத்மநாப முதலியார்

1-2-15. கீழப்பூங்குடி ஸ்ரீமத் சேவுக சுவாமிகள் மாணுக்கர்கள்

1. சிவ. சேவு. சொக்கலிங்க ஐயா
2. பசுபதி ஐயா
3. ராம சுப்பையா ஐயா



# நகரத்தார்களும் திருக்களர் ஆண்டவரும்

ஜகத்குரு-ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி

ஸ்ரீ சந்திரசேகரேந்திர சங்கராச்சாரிய சுவாமிகள்

"துர்வாஸர் மாதிரி" என்றே சொல்லி ஜனங்கள் பயப்பட்டுக் கொண்டிருந்த சுவாமிகள் ஒருவர் சமீப காலத்தில் இருந்தார். சுமார் அறுபது எழுபது வருஷங்களுக்கு முன்னால், அவர் செட்டி நாட்டில் கோயிலூரில் வசித்து வந்தார். அவருக்கு வீரப்ப சுவாமிகள் என்று பெயர். அவர் மிகவும் பெரியவர். பரமசிவனின் பரம பக்தர். மகா சுத்தமான வாழ்க்கை நடத்தியவர். இத்தனை நல்ல அம்சங்கள் இருந்தாலும், ரொம்பவும் முன் கோபியாக இருந்தார். சட்டென்று கோபம் வந்துவிடும். "பிடி சாபம்" என்று திட்டி விடுவார். அவர் சபித்தபடியே நடந்துவிடும். அதனால் அவரிடம் எல்லோருக்கும் மிகவும் பயம். நாட்டுக் கோட்டைச் செட்டிமார்களுக்கு அவரிடம் ஏக பய பக்தி. பக்தியைவிட பயம் அதிகம் என்றும் சொல்லலாம், அவர் எது சொன்னாலும் மரியாதை காரணமாகப் பாதியும், பயம் காரணமாகப் பாதியுமாக அவர் சொன்னபடியே செய்துவிடுவார்கள்.

ஆசை தடுக்கப்பட்டால் கோபமாகிறது. வீரப்ப சுவாமிகளுக்கு என்ன ஆசை இருந்தது? அவருக்கு உத்தமமான ஆசையே இருந்தது. தமிழ்நாட்டில் உள்ள தேவாலயங்கள் எல்லாம் பூர்வத்தில் இருந்ததுபோல் சீரும் சிறப்புமாக இருக்கவேண்டும். இந்த நாடு முழுவதிலும் வேத வித்யை மங்காமல் பிரகாசிக்கவேண்டும் என்பதே அவரது ஆசை. ஆனபடியால் நகரத்தாரிடம் "இன்ன கோயிலுக்குத் திருப்பணி செய்யுங்கள்; இன்ன ஊரில் வேத பாடசாலை வையுங்கள்" என்று கட்டளை போடுவார். அவரிடம் அடங்கி நடந்துகொண்டிருந்த நகரத்தார் சமூகத்தினர் அவர் சொன்னவிதமே ஏராளமான ஆலயங்களுக்குத் திருப்பணி செய்தார்கள். வேத பாடசாலைகளை எங்கு பார்த்தாலும் வளர்த்தார்கள். க்ஷேத்திரங்களில் எல்லாம் தர்ம சத்திரங்களைக் கட்டிவைத்தார்கள்.

வீரப்ப சுவாமிகளின் கோபத்தினால் நல்ல விளைவே உண்டாயிற்று. நாரதர் கலகம் செய்தாலும் நல்லதில் முடியும் என்கிற மாதிரி வீரப்ப சுவாமிகள் கோபித்துக் கொண்டதால் நாட்டுக்கே பெரிய நன்மை உண்டாயிற்று,

(வீரப்ப சுவாமிகளிடம் இருந்த பயத்தால் தான் நகரத்தார் இந்தத் தெய்வீகத் தொண்டும், வைதிகத் தொண்டும் செய்தார்கள் என்று நான் சொல்வதாக அர்த்தமில்லை.)

அவர்களுக்கு இயற்கையாகவே தம் மதத்தில் நல்ல அபிமானமும் தாராள மனமும் உண்டு. பழைய ராஜாக்கள் மறைந்து வெள்ளைக்கார ஆட்சி ஏற்பட்ட பிறகு, பழைய ராஜாக்கள் செய்து வந்த வேத போஷணைகளையும் கோயில் திருப்பணியையும் நடத்திக் கொடுத்தவர்கள் நாட்டுக் கோட்டைச் செட்டிமார்தான். இந்தப் பணியில் அவர்களுக்குத் தூண்டுகோலாக இருந்தவர்கள், கோயிலூர் வீரப்ப சுவாமிகள்.

*நன்றி :* **கல்கி தீபாவளி மலர் 1972**



# ஸ்ரீ சங்கர குருகுலம், கோவிலூர்

காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் விருப்பத்திற்கு இணங்க, கோவிலூர் ஆதீன கர்த்தர் திருப்பெருந்திரு இராமநாத ஞானதேசிகர் அவர்கள் 1977, ஜூலை திங்களில் இக்குருகுலத்தை நிறுவி யுள்ளார்கள்.

தாய் தந்தையர் இல்லாத பதினொரு சிறுவர்களை—ஐந்து வயது முதல் பத்து வயது வரை உள்ளவர்களை, ஆதீன கர்த்தர் ஏற்றுக் கொண்டு அச்சிறுர்களுக்குத் தங்குமிடமும் உணவும் உடையும் மருத்துவ உதவியும் கொடுத்து வருகிறார்கள்.

ஊராட்சி ஒன்றியத்தார் கோவிலூரில் நடத்தும் பள்ளியில் இந்தச் சிறுவர்கள் முதல் வகுப்பு முதல் ஐந்தாம் வகுப்பு வரை பயில் கின்றனர்.

பள்ளி நேரம் போக எஞ்சிய காலத்தில் இவர்களுக்கு நல்லொழுக்கம், நீதி நூல்கள், தேவாரம், திருவாசகம் முதலியனவும் தோட்ட வேலையும் கற்பிக்கவும் இவர்களை நன்முறையில் கண்காணிக்கவும் ஓர் ஆசிரியர் நியமிக்கப் பெற்றுள்ளார்.

## அன்றாட நிகழ்ச்சிகள்

காலை

5-00 துயில் எழல்—உடல் சுத்தி செய்தல் திருநீறணிந்து நாமாவளிகள் ஓதுதல்—பள்ளிப்பாடம் படித்தல்

6-00 கூட்டுப்பணி செய்தல்

7-00 நீராடல் — திருநீறணிந்து கூட்டு வழிபாடு செய்தல் — சிற்றுண்டி கொள்ளுதல்

8-30 பள்ளி சென்று வருதல்

பகல்

1.00 கால், கை சுத்தி செய்து திருநீ றணிந்து பகல் உணவு கொள்ளுதல்

2-00 பள்ளி சென்று வருதல்

மாலை

4-45 விளையாடுதல் — பொதுப்பணி செய்தல்

6-00 கால், கை, முகம் சுத்தி செய்து திருநீறணிந்து, ஆண்டவர் வழிபாடு

இரவு

7-00 திருநெல்லை அம்மை உடனுறை கொற்றவாள் ஈசுவரர் ஆலய வழி பாடு

7-30 உணவு

8-00 பள்ளிப் பாடங்கள் படித்தல்

9-00 துயில் கொள்ளுதல்

ஓம் தத் ஸத் *



# வேதாந்தமும் சித்தாந்தமும்

வேதாந்த சித்தாந்தங்களைப் பற்றி நன்கு உணராமலே தம்மை 'வேதாந்திகள்' என்றும் 'சித்தாந்திகள்' என்றும் சொல்லிக் கொண்ட பலர் 'வேதாந்தமாவது ஏகான்மவாதமே' என்றும், 'அத்துவிதம்' என்பது கேவலாத்து விதமே என்றும், 'சித்தாந்தமாவது துவைதமே' என்றும் கொண்டு இருந்தனர். அவருள், 'வேதாந்திகள்' எனப்பட்டோர் சித்தாந்தம் ஒரு பக்தி நெறியே, அதில் அத்துவிதஞானம் இல்லை என்றும், 'சித்தாந்திகள்' எனப்பட்டோர், வேதாந்தம் மாயாவாதமாய் இம்மை மறுமை நலங்களைத் தராததோடு ஆன்ம லாபமாகிய மோட்சத்தையும் தரமாட்டாது என்றும் இன்ன பலவாகத் தம்முள் மாறுபட்டு வாதங்கள் பல செய்து வந்தனர். அதனால், தாயுமான அடிகள், வேதாந்தம், சித்தாந்தம் இரண்டும் பொருளால் ஒன்றே; அதைக் கூறும் முறைதான் வேறு. உண்மையை வேதாந்தம் பொதுவாகச் சுட்டுகின்றது. சித்தாந்தம் அதனைச் சிறப்பாக விளக்குகின்றது. இதனை அறிந்தவரே உண்மை வேதாந்திகளும் உண்மைச் சித்தாந்திகளும் ஆவர். அவர் தமக்குள் முரண்பட்டு நில்லார். இதை அறியாது வேறு கருத்துக் கொண்டு பூசலிடுதனால் ஒருவருக்கும் பயனில்லை. ஆகவே மேற்கூறிய கருத்தால் வேதாந்த சித்தாந்த சமரசம் காண்பவரது நிலையே நன்னிலையாகும் என விளக்கி வந்தார். அவரது பாடலில்,

'வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே''
"........வேதாந்த சித்தாந்த
சமரச சிவானுபூதி மன்ன''

என்பன போன்றவை நினைவிற் கொள்ளத் தக்கன.

**—தருமை ஆதீனம் 26-வது குருமகா சந்நிதானம்**

**ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞான சம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள்**

## எல்லோருக்கும் ஏற்றது :

"சைவ சித்தாந்தம் எல்லாச் சமயங்களையும் ஏற்றபெற்றி இசைந்து ஏற்பது; எதனையும் இகழ்ந்து ஒதுக்காமல், இனிது அணைத்துத் தன்னுட் பொதிந்து கொள்வது; உலகம் முழுவதற்கும் ஏற்புடைய மனிதகுலச் சமயமாகத் திகழ்வது; வேறு பிற எந்தச் சமயத்தின் வளர்ச்சியையும் அஃது எதிர்க்கக் கருதுவதில்லை. ஏனெனில், பிற எல்லாச் சமயங்களையும் தன்னோடு அணைத்துத் தழுவிப் போற்றிக் கொள்வதில் அதற்கு இடர்ப்பாடு ஏதுமில்லை. ஒவ்வொருவருடைய உள்ளத்திற்கும் நிறைவு அளிக்கத் தக்க வகையில், அது சால்புமிக்கு விளங்குகின்றது. பல்வேறு மனித இயல்பிற்கும் ஒழுக்கத்திற்கும் ஏற்புடையதாகச் சைவ சித்தாந்தம் தன்னை ஆக்கிக் கொள்ளவல்லதாக உள்ளது.

நுண்பொருள் தத்துவ அறிஞர்களுக்குரிய ஆன்மிக அருவக் கூறும், கவிதையுணர்வும் கற்பனைத் திறனும் மிக்கவர்களுக்குரிய நடைமுறைப் பருவடிவக் கூறும், அமைதியை நாடும் தனிமை விரும்பிகளுக்குரிய சாந்தி நலம் மிக்க சிந்தனைக் கூறும், ஒரு சேர வாய்ந்ததாகத் தலைசிறந்து விளங்குகிறது'' எனப் பொதுவகையில் இந்து மதம் பற்றிச் சர்மானியர் வில்லியம்ஸ் என்னும் பேரறிஞர் கூறுவது, நம்முடைய சைவ சித்தாந்தத்திற்கும் சாலப் பொருந்தும் எனலாம்.(5)

## வேதாந்தத் தெளிவு :

சிவப்பிரகாசம் என்னும் நூலில், ஆசிரியர் உமாபதி சிவம், "சைவ சித்தாந்தமானது, புறச் சமயத்தவர்களுக்கு இருளாய், அகச் சமயத்தவர்க்கு ஒளியாய் விளங்கும்;அளவை நெறிக்கு அளவையாகத் திகழும்; இறைவனையும் உயிர்களையும், பொன்னும் மணியும்போல் அபேதம், இருள் ஒளிபோல் பேதம், சொற் பொருள் போல் பேதாபேதம் என்று கூறும் பிற

சமயங்கள் போலாமல், இறைவன் உயிர்களுடன் உடலும் உயிரும் போல் ஒன்ருவுகம் கண்ணும் சூரியனும்போல் வேருகவும், கண்ணொளியும் உயிரறிவும்போல் உடனுகவும் இயைந்து நிற்றலை இனிது உணர்த்தும்; வேதாந்தம் என்னும் உபநிடத நூல்களின் பிழிவாகவும் தெளிவாகவும் திகழும்'' என்கின்ருர்.

புறச்சமயத் தவர்க்கிருளாய், அகச்சமயத்
தொளியாய்ப்,
புகல் அளவைக்கு அளவாகிப் பொற்
பணிபோல் அபேதப்
பிறப்பிலதாய், இருள்வெளிபோற்
பேதமும், சொற்பொருள்போல்
பேதாபேதமும் இன்றிப் பெருநூல்
சொன்ன
அறத்திறனல் விளைவதாய், உடலுயிர்கண்
அருக்கன்
அறிவொளிபோல், பிறிவரும்அத்
துவிதம் ஆகும்
சிறப்பினதாய்,வேதாந்தத் தெளிவாம் சைவ
சித்தாந்தத் திறன்இங்குத் தெரிக்க
லுற்ரும்!

—உமாபதிசிவம்

## பதிப்பாசிரியர் குறிப்பு

கோவிலூர் மடம் வேதாந்த மடமாயினும் சைவசமயத்துக்கு இந்த மடம் செய்திருக்கும் பணிகள், சைவசமய வரலாற்றில் பொன்னெழுத்துக்களில் பொறிக்கத்தக்கன.

வேதாந்த மடமா? எனத் துடிக்கும் அழுத்தமான சைவ சித்தாந்திகள் பின்வரும் செய்திகளை நினைவிற் கொள்ளலாம்.

1. ஆதீன கர்த்தர் சமாதிகளில் சிவலிங்கம் தான் பிரதிஷ்டை செய்யப்பெறுகிறது.

2. இந்த ஆதீனத்தின் தலைவர்கள் தாங்களே முன்னின்று சிவன் கோயில் திருப்பணிகளைச் செய்திருக்கின்றனர்.

3. நகரத்தார்கள், பாடல்பெற்ற சிவாலயங்களை புதுப்பித்திருக்கிருர்கள் எனின், அவ்வகையில் அவர்களை ஈடுபடுத்தியவர்கள் கோவிலூர் ஆதீனத்துத் தலைவர்களே ஆவர்.

4. ஆதீனத்தின் மகேசுவரர் பூசைகளில் திருவாசகம் படிக்கப் பெறுகிறது.

5. தேவார பாடசாலைகள் வைப்பதையும், தேவாரப் பாடல்கள் ஓதுவதையும் இந்த ஆதீனத்தார் ஊக்குவித்து வந்திருக்கின்றனர்.

6. கோயில் என்ற தனிச் சொல்லால் சைவர்கள் போற்றி வழிபடும் தில்லை நடராசப் பெருமான் தலத்தில், இந்த ஆதீனத்தார் இன்றளவும் பல கட்டளைகளை நடத்தி வருகிருர்கள்.

7. 19-20-ம் நூற்ருண்டில் சைவசமயம் பெரிதும் ஏற்றம் பெற உதவிய யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர் அவர்களை இத்துறையில் ஆற்றுப்படுத்தியவர்கள் கோவிலூர் ஆதீன கர்த்தரான துறவு ஆண்டவர் அவர்களே ஆவர்.

8. மகாவித்துவான் மீனட்சி சுந்தரம் பிள்ளை பல தலங்கட்கும் புராணம் பாட அவர்களை ஊக்குவித்ததும் கோவிலூர் ஆதீனமே. ★



# கோவிலூர் ஆதீனமும் சிருங்கேரி ஆதி சங்கரர் மடமும்

கோவிலூர் ஆதினத்தை நிறுவிய ஸ்ரீ-ல-ஸ்ரீ முத்துராமலிங்க ஞான தேசிகர் என்ற கோவிலூர் ஆண்டவருடைய குருவான சிக்கல் பொருள்வைத்தசேரி உகந்தலிங்க ஞான சுவாமிகள், ஆவார்கள். மேற்படி சுவாமிகள் ஆதி சங்கராச்சாரிய சுவாமிகளின் சிருங்கேரிப் பரம்பரையின் கொள்கைகளைப் பரப்பியதால் அந்த மரபில் வந்தவர்கள். ஆகையால் கோவிலூர் ஆதீனத்தார், சிருங்கேரி மடத்தைத் தங்களுடைய குருஸ்தானமாகக் கருதி வருகிறார்கள்.

சிருங்கேரி சங்கராச்சாரிய சுவாமிகள் யாத்திரையாக வரும்போது கோவிலூரில் தங்குவது என்ற மரபு, கோவிலூர் மடாலயம் ஏற்பட்ட காலம் முதல் நிலவி வருகிறது.

கோவிலூரில் மூன்றாவது பட்டத்தில் இருந்த கருணாநிதி சுவாமிகள் காலத்தில் சிருங்கேரியில் ஒரு மண்டபம் கட்ட, கோவிலூரி லிருந்து பொருள் சேகரித்து அனுப்பப் பட்டது. வெள்ளிப் பாத்திரங்கள், வெள்ளிக் கேடகங்கள் முதலியனவும் செய்து அனுப்பப்பட்டன.

1908-ல் கோவிலூரில் நடைபெற்ற கும்பாபிஷேகத்திற்கு சிருங்கேரி ஜெகத்குரு ஸ்ரீ சச்சிதானந்த சிவ அபிநவ நரசிம்ம பாரதி சுவாமிகள் வந்திருந்தார்கள்.

சிருங்கேரியில் நடைபெற்ற ஒரு யாகத்திற்கு வருமாறு கோவிலூர் ஆதீன கர்த்தர் அவர்களுக்குத் திருமுகம் அனுப்பப்பட்டது.

கோவிலூர் ஆதீன கர்த்தர் எட்டாவது பட்டம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சோமசுந்தர ஞான தேசிகர் அவர்கள், அடியார்கள் புடைசூழ அந்த யாகத்திற்குச் சென்றார்கள்.

அந்த யாகத்தின் பொருட்டு நகரத்தார்களிடம் வாங்கிய காணிக்கையைச் செலுத்தினார்கள். கருணாநிதி சுவாமிகள் காலமுதல் வழிவழி முறையாக மேற்படி மடத்தோடு அமைந்த தொடர்பு மேலும் வளர்ந்தது. சிருங்கேரி மகா சந்நிதானமாக விளங்கிய ஸ்ரீ மகாசந்நிதானம் அபிநவ வித்யாதீர்த்த பாரதி சுவாமிகளும் நம் கோவிலூர் மகா சந்நிதானம் அவர்களை வழி முறை வழக்கப்படி உபசரித்தார்கள். ஆசாரிய சால்வை போர்த்திக் கல்லாடை வழங்கி மகா வாக்கிய உபதேசஞ் செய்தார்கள். ஆசீர்வாத சுலோகமும் வாசித்துக் கொடுத்தார்கள். நம் குருநாதரவர்கள் சிருங்கேரி மடத்தில் இருபத்திரண்டு நாட்கள் தங்கி ஸ்ரீ சாரதா சந்திர மௌலீசுவரரையும் ஸ்ரீ ஆசாரியார் இருவர்களையும் தரிசனஞ்செய்தார்கள். அப்பொழுது உடனிருந்த கோவிலூர்ச் சீடர்களுக்கு ஸ்ரீ ஆசாரியாரவர்கள் ஸ்ரீ சாரதாம்பாள் சந்திர மௌலீசுவரர் பூசையில்வைத்து அருள்செய்து கொடுத்த ஸ்ரீ ஞானவாசிட்டத்தைப் பாடம் நடத்தினார்கள் ஸ்ரீ ஆசாரியாரவர்களும் நம் குருநாதரோடு நாள்தோறும் உரையாடி வந்தார்கள்.

சிருங்கேரி ஸ்ரீ ஆசாரியார் அபிநவ வித்தியாதீர்த்த சுவாமிகள் இராமேசுவர யாத்திரையின் போது கோவிலூருக்கு வந்து ஏழுநாட்கள் தங்கினார்கள். அக்கால வழக்கப்படி நிறைக்குடம் முதலிய சிறப்புக்களுடன் ஸ்ரீ ஆசாரியாரவர்களை நம் குருநாதரவர்கள் வரவேற்றுப் பிச்சைபண்ணி வைத்தார்கள். பிரமசபையில் பாத பூசையும் செய்தார்கள். ஆசாரியாரவர்கட்குப் பாதபூசை செய்ய எல்லோரும் அனுமதிக்கப்பட்டார்கள்.

சிருங்கேரியில் உள்ள ஸ்ரீ சாரதாம்பாள் கோயில் கோவிலூரிலுள்ள திருநெல்லை அம்மன் கோயில் பாணியில் கட்டப்பெற்றது. இதற்கு உரிய பொருளை கோவிலூர் ஆதீனகர்த்தர் அவர்களின் வேண்டுகோளுக்கிணங்க நகரத்தார்கள் வழங்கியுள்ளனர்.

1978-ல் திருநெல்லை நாயகி உடனுறை கொற்றவாள் ஈசர் கோயில் கும்பாபிஷேகம் நடைபெற்றபோது, சிருங்கேரி ஆச்சாரிய சுவாமிகள் அவர்கள் பத்ம ஸ்ரீ வைத்தி சுப்ரமணிய அய்யர் வாயிலாக, பிரசாதம் அனுப்பிவைத்து அருளித்தார்கள்.

# ஆதீன கர்த்தர்கள் பரிபூரணம் எய்திய காலம்

1. கோவிலூர் ஆதீனமுதல்வர்—"கோவிலூர் ஆண்டவர்" என்னும் ஸ்ரீமத் முத்துராமலிங்க ஞானதேசிகர்.
பிலவங்க, பங்குனி 8, உத்தரநட்சத்திரம் (1847)

2. கோவிலூர் ஆதீனம் இரண்டாவது குருமூர்த்தி "துறவு ஆண்டவர்" என்னும் ஸ்ரீமத் அருணாசல ஞானதேசிகர்.,
சௌமிய, ஆடி 9, பூர நட்சத்திரம் (1849)

3. கோவிலூர் ஆதீனம் மூன்றாவது குருமூர்த்தி "கருணாநிதி" என்னும் ஸ்ரீமத் சிதம்பர ஞானதேசிகர்.
தாது, ஆடி 4, ரோஹிணி நட்சத்திரம் (1876)

4. கோவிலூர் ஆதீனம் நான்காவது குருமூர்த்தி ஸ்ரீமத் இராமசாமி ஞானதேசிகர்.
சுபானு, மார்கழி 6, மகநட்சத்திரம் (1883)

5. கோவிலூர் ஆதீனம் ஐந்தாவதுகுருமூர்த்தி "திருக்களர் ஆண்டவர்" என்னும் ஸ்ரீமத் வீரப்பஞான தேசிகர்
விரோதிகிருது, வைகாசி 27, விசாக நட்சத்திரம் (1911)

6. கோவிலூர் ஆதீனம் ஆறுவது குருமூர்த்தி ஸ்ரீமத் அண்ணாமலை ஞான தேசிகர்.
சித்தார்த்தி, வைகாசி, 8 திருவோண நட்சத்திரம் (1919)

7. கோவிலூர் ஆதீனம் ஏழாவது குருமூர்த்தி ஸ்ரீமத் மஹாதேவ ஞான தேசிகர்.
சர்வசித்து, ஆனி 12, அஸ்த நட்சத்திரம் (1947)

8. கோவிலூர் ஆதீனம் எட்டாவதுகுருமூர்த்தி ஸ்ரீமத் சோமசுந்தர ஞான தேசிகர்.
சாதாரண, மாசி 4, சுவாதி நட்சத்திரம் (1971)



---

## ஸ்ரீ-ல-ஸ்ரீ இராமநாத ஞானதேசிகர் அவர்கள்

காசியிலிருந்து 18-5-1978-ல் இம் மலர்ப் பதிப்பாசிரியருக்கு எழுதிய கடிதம்.

லௌகிக விவகாரங்களிலிருந்து ஒதுங்கி ஆத்மசாதனங்களில் ஈடுபட உத்தேசித்துள்ளோம்.
கோவிலூர் மண்டலாபிஷேகத்தை முன்னிட்டும் பெங்களூர் கயிலாச ஆசிரமம் ஸ்ரீ ராஜராஜேஸ்வரி கோயில் கும்பாபிஷேகத்தை முன்னிட்டும் வருகிற 16-7-78-ல் இவ்விடமிருந்து புறப்பட்டு வருகிறோம். மறுபடியும் இங்கு வந்து தங்குவதாகவே உத்தேசம். தேவி பராசக்தியின் சித்தம் எப்படியோ? நாம் ஒரு கருவி மாத்திரமே "ஆட்டுவித்தால் யாரொருவர் ஆடாதாரே?"

ஓம் பராசக்தி

---

# கோவிலூர் ஆதீனமும் நகரத்தார் கடமையும்

மிகத் தொன்மையான காலத்திலிருந்தே நகரத்தார்கள் ஞான மார்க்கத்தில் ஈடுபட்டு வந்திருக்கிறார்கள். பட்டினத்தடிகள், காரைக்கால் அம்மையார் ஆகியோரது வாழ்க்கை வரலாறுகள் இவ்வகையில் நமக்குப் பெருமை தருவன.

இக்காலத்தில் இவ்வாறு ஞானமார்க்கத்தில் ஈடுபட்டு நகரத்தார்களை நல்வழிப்படுத்தும் பணியைச் செய்து வருவது கோவிலூர் ஆதீனம் ஆகும்.

இந்த ஆதீனம், இந்தியாவிலும் இலங்கையிலும் புகழ் பரப்பியிருக்கிறது. இதனுடைய குருபரம்பரை, புலமையும் சீலமும் செயல் திறனும் மிக்கது. இந்த ஆதீனத்தின் தலைமை இடம் செட்டிநாட்டின் நடுநாயகமான நகரான காரைக்குடிக்கு அருகே உள்ளது. கோவிலூர் என்னும் ஊர்ப்பெயரே கேட்கும்தோறும் இன்பம் பயப்பது.

இவ்வளவு புகழ்மிக்க ஓர் ஆதீனத்தைப் பற்றி நம்மவர் இன்னும் அதிகமாகத் தெரிந்து கொள்ளவேண்டும். இந்நோக்கத்தை நிறைவேற்றவே இந்த மலர் வெளியிடப் பெறுகிறது. நகரத்தார்கள் தங்களுடைய முன்னேற்றம் கருதியும், வாழ்க்கை முறையில் மாறுதல்கள் குறித்தும் முடிவுசெய்ய 96 ஊர் நகரக் கூட்டங்களைக் கோவிலூரில்தான் கூட்டுவது மரபு.

கோவிலூரில் ஆதீன கர்த்தர்களாகப் பட்டம் ஏற்று, அருளாட்சி செலுத்திவரும் ஞானாசிரியர்கள், நம்மவர்க்கு நல்வழி காட்டி வந்திருக்கிறார்கள். இன்றைய நிலையும் இதுவேயாகும். இந்த அருளாளர்களின் அறிவுரைகளை மதித்தும், இப்பெரியவர்களுடைய வேண்டுகோள்களுக்குச் செவிசாய்த்தும் வருபவர்கள் எல்லா நலமும் பெற்றுச் சிறந்து செல்வாக்கோடும் வாழ்ந்து வருவது கண்கூடு. மாறுபட்டு நடந்துகொள்பவர் நிலை பற்றி எதையும் இங்கே குறிப்பிடத் தேவையில்லை.

தனிப்பட்ட அன்பர்களைப் பற்றி மேலே சொல்லியது நகரத்தார்கள் வாழும் ஊர்களுக்கும் பொருந்தும்.

ஒவ்வொரு நகரத்தாரும் கோவிலூர் ஆதீன கர்த்தரிடம் மரியாதை காட்டுவதும், அவர்களுடைய அறிவுரைக்குப் பணிந்து நடப்பதும் அவர்களுக்கு நன்மை தரும். இது போலவே ஒவ்வொரு ஊர் நகரத்தாரும் தேவையானபோது கோவிலூர் ஆதீனத்தோடு தொடர்புகொள்வது அறிவுடைமை ஆகும். பிராமணர்கள் தங்கள் இனத்து நலங் கருதி, ஆச்சாரியர்களாகவிருக்கும் சுவாமிகள் பலரிடத்திலும் எவ்வளவு ஈடுபாடு வைத்திருக்கிறார்கள் என்பதை நாம் சற்றுச் சிந்தித்துப் பார்ப்பது நலம்.

ஒன்பது நகரக் கோவிலாரும் காரைக்குடி, மேல்மடத்தில் கூடி, கோவிலூர் ஆதீனத்துக்கு நன்கொடை எழுதும் பழக்கம் 1930வரை இருந்து வந்தது. இதைப் புதுப்பிக்கவேண்டும்.

நகரத்தார்கள் தங்களுடைய ஊர்களில் நடைபெறும் பொது நிகழ்ச்சிகளுக்கும், கும்பாபிஷேகம்முதலியவற்றிற்கும்கோவிலூர் ஆதீன கர்த்தர்களை அழைத்து, நகரக் கோயிலில் பூரண கும்பத்துடன் வரவேற்றுப் பாத காணிக்கை முதலியன வைத்து மரியாதை செய்யவேண்டும். உலகியல் ஈடுபாடும் போலி நாகரிக முதிர்ச்சியும் நம்மை மயக்கியிருப்பதால், நாம் நமது பண்பாடுகளை, நல்ல மரபுகளை அடியோடு மறந்துவிட்டோம்.

மேற்கண்டவாறு நாம் நடந்துகொள்வது நம் நன்மைக்காகவே ஆகும். ஞானச் செல்வர்களை மதிப்பதாலும் போற்றுவதாலும் அவர்கள் ஒரு பயனும் பெறப் போவதில்லை.

தீர்கை புனிதமாக இருப்பதால்தான் நாம் போய் அதில் ஆடுகிறோம்.

வயதான காலத்தில் ஓர் ஊன்றுகோல் தேவைப்படுகிறது ஓர் ஊன்றுகோல் தனி ஒருவனுக்குச் செய்யும் உதவிகளை, அருளாளர் கள் சமுதாயம் முழுமைக்கும் செய்கிறார்கள்.

இந்தியாவின் பல பகுதிகளிலும் இன்று நம்மவர் உள்ளவர். கடல் கடந்த மலேசியா முதலிய நாடுகளிலேயே பிறந்து வளர்ந்து, அந்த நாட்டுக் குடிமக்களாக உரிமை பெற்றும் நகரத்தார் பலர் உள்ளனர் எனவே முன்போல நாம் செட்டிநாட்டில் மிகுதியான எண்ணிக் கையிலோ, மிகுதியான நாட்களிலோ காணப் படுவதில்லை. ஒவ்வொருவரும் குடும்பத்தோடு அவரவர் வசதிப்படி இரண்டு மூன்று ஆண்டு களுக்கு ஒருமுறை கோவிலூர்க்குச் செல்வதை ஒரு கடமையாகக் கொள்ளவேண்டும். அவ் வாறு செல்லும்போது அங்குள்ள சிவன் கோயி லிலும், கோவிலூர் ஆண்டவர் முதலியவர் களின் சமாதிக் கோயில்களிலும் வழிபடுவதும், ஆதீனகர்த்தர், இளைய சுவாமிகள் ஆகியோ ரைக் கண்டு வணங்குவதும், நமது கடமை யாகும்.

ஆதீனங்களுக்கு அளவுகடந்த சொத்தும் வருமானமும் இருப்பதாகவும், எனவே அவற் றிற்குப் பணம் தேவையில்லை என்றும் ஓர் எண்ணம் நிலவி வருகிறது. இது முற்றிலும் தவறு. செல்லுகின்ற எல்லோருக்கும் உணவு படைக்கும் அளவுக்குக் கோவிலூர் ஆதீனத் தின் நிலை இல்லை என்பதை நாம் உணர வேண்டும்.

அரசின் சட்டங்களால் இனும் நிலங்கள் ஒழிக்கப்பட்டுவிட்டதால், கோவிலூர் ஆதீனம் தன் சொத்துக்களின் வருமானத்தை இழந்து விட்டது. மலேசியா, பர்மா முதலிய நாடுகளி லிருந்து நன்கொடையாகக் கோவிலூர் மடத் துக்குப் பணம் அனுப்பும் வழக்கமும் இப்போது நின்றுவிட்டது.

வருவாய் குறைந்துவிட்ட இந்த நிலையில், மாபெரும் கட்டிடங்களைப் பழுதுபார்க்கப் பெரும் பணம் தேவைப்படுகிறது. துறவி களுக்கு அன்னம் பாலிக்கும் செலவும் உள்ளது. கிளை மடங்களை நிருவகிக்கவும் பெரும் பணம் தேவைப்படுகிறது. குருபூசைச் செலவுகள் பெருகி வருகின்றன. ஊழியர்களுடைய சம்பளம் முதலிய செலவுகளைப்பற்றிச் சொல்ல வேண்டுவதில்லை. அரசின் பல்வேறு துறைகளி லிருந்து நாள்தோறும் நாழிகைதோறும் கேட் கப்படும் கேள்விகளுக்குப் பதில் அனுப்பவும், எஞ்சியிருக்கும் சொத்துக்களைப்பாதுகாக்க நீதி மன்றங்கள் வாயிலாக நடவடிக்கை எடுக்கவும் பல ஊழியர்கள் தேவைப்படுகிறார்கள்.

நகரத்தார்கள் தாங்கள் வாழும் ஊர்களுக் கும் கோவிலூர் ஆதீன கர்த்தர்களை அழைத்து, அவர்களுடைய அருளுரைப்படி நடப்பது, அவர் களுக்கு நன்மை தரும் குறிப்பாக இளைஞர்கள் இந்த ஆதீனத்தைப் பற்றி எல்லா விவரங்களை யும் தெரிந்து கொள்ளவும் இந்த ஆதீனத்துடன் தொடர்பு கொள்ளவும்வேண்டும்.

ஆன்மீக ஈடுபாடு உடையவர்கள் துறவு பூண விரும்பினால், அவர்களை ஒருவரும் தடுக்க வேண்டுவதில்லை. அறிவும் ஆற்றலும் பண்பும் சீலமும் உடைய நகரத்தார்கள் ஒரு சிலராவது துறவு நிலையை மேற்கொண்டால்தான், கோவி லூர் ஆதீனம் சீருடனும் சிறப்புடனும் வாழை யடி வாழையாக வளர்ந்துவர வாய்ப்பு இருக் கும்.கோவிலூரில் நகரத்தார்கள் மட்டுமே பட் டத்திற்கு வர உரிமையுடையவர்கள் என்பது நம சிந்தனைக்கு உரியது.

புதிய வரலாறு படைப்போம்.

கோவிலூருடன் நம் உறவைப் புதுப்பித் துக் கொள்வோம். ஆதீன கர்த்தர்களின் அரு மையையும் பெருமையையும் போற்றி வாழ்த் துவோம். வாழ்த்துவது நாம் வாழ்வதற்கே.



# கிளை மடங்கள், துணை மடங்கள் முதலியன

கோவிலூர் ஆதீனத்தின் வாயிலாக வேதாந்த நூல்களைப் படித்துப் பரப்பும் வழக்கம் பெரிதும் பரவியிருக்கிறது. இங்கு பயின்ற துறவிகள், தங்களுக்குத் தொடர்புள்ள இடங்களில் மடங்களை அமைத்து வேதாந்தப் பயிர்களை வளர்த்துள்ளனர். அந்தத் துறவிகளின் மூலமாகவும், அவர்கள் தொடங்கிய அமைப்புகளின் வாயிலாகவும், கோவிலூர் மடம் ஆல்போல் தழைத்து அறுகு போல் தழைத்து வேரோடியிருக்கிறது.

இந்த வெளியீட்டில் மேற்கண்ட மடங்களில் ஒரு சிலவற்றைப்பற்றி மட்டும் தகவல் களைத் தெரிவித்திருக்கிறோம். குறுகிய காலத்தில் வெளியிட வேண்டியிருப்பதால், எல்லா இடங்களுக்கும் செல்லவோ, கிடைத்த தகவல்களைச் சரிபார்க்கவோ இயலவில்லை. சரியாகத் தெரியாத தகவல்களை வெளியிட நாங்கள் விரும்பவில்லை. எனவே முழுமையான பட்டியல் கொடுக்கப்படவில்லை.

கோவிலூர் மடத்தோடு எவ்வகையிலாவது தொடர்புடைய மடங்கள், மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி, புதுக்கோட்டை, திருச்சி, தஞ்சை, தென்ஆற்காடு, வட ஆர்க்காடு, சேலம், கோயமுத்தூர் மாவட்டங்களில் உள்ளன.

ஆந்திர மாநிலத்தில் இராமகிருஷ்ண ராஜுப் பேட்டையிலுள்ள கந்தசாமி மடமும், பொதட்டூர்பேட்டையில் உள்ள செ. அ. வ. மடமும் ஓரளவு கோவிலூரோடு தொடர்புடையன.

சித்தூர் மாவட்டம் நகரி இரயில் நிலையத்திற்கு மேற்கே ஒருகல் தொலைவிலுள்ள ஏகாம்பரக்குப்பம் பேட்டை சிவசுப்பிரமணிய சுவாமி மடமும் ஓரளவு கோவிலூர் தொடர்புடையது.

கர்நாடக மாநிலத்தில் ஹுப்ளியில் உள்ள ஒரு மடத்தைப் பற்றி ஒரு சிறு குறிப்பை இவ்வெளியீட்டில் காணலாம். மைசூர் மாநகரில் சாமுண்டி மலை அடிவாரத்தில் கோவிலூர் மடத்துச் சீடர் ஒருவர் நிறுவிய பத்மநாத சுவாமி மடம் உள்ளது.



# உகந்தலிங்க ஞானதேசிக சுவாமிகள் மடம்

## பொருள்வைத்தசேரி-சிக்கல்

காலடியில் தோன்றிய ஆதி சங்கர அத்வைத மரபில் வந்தவர்கள், உகந்தலிங்க ஞான தேசிக சுவாமிகள் அவர்கள். சுவாமிகளின் காலம் 1770-1819. இவர்களிடமே, கோவிலூர் ஆண்டவர் வேதாந்த நூல்களைப் பயின்றார்கள். அதன் பின்னர் 42 ஆண்டுகள் வீரபத்திர சுவாமிகள் இந்த மடத்தின் தலைவராக இருந்தார்கள்.

திருக்களர் ஆண்டவரின் மாணவர் மெய்யப்ப ஞான தேசிகர் காலத்தில் சொர்ணபுரீசுவரர்—சௌந்தரிய நாயகி அம்பாள் கோவிலுக்கு ஒன்றே கால் லட்சம் ரூபாய் செலவில் (1910ம் ஆண்டு அளவில்) திருப்பணி செய்தார்கள். மடத்தைப் புதுப்பிக்கவும் விரிவாக்கிக் கட்டவும் ரூ. 50,000/- செலவிட்டார்கள். விளை நிலங்களும் வாங்கினார்கள்.

1910-ல் முடிவுபெற்ற திருப்பணிக்கு கோவிலூர் ஆதீன கர்த்தர் மகாதேவ ஞான தேசிக சுவாமிகள் சொல்லியவாறு காரைக்குடி நா. வ. மெய்யப்பச் செட்டியாரும், நகரத்தார் பலரும் பெரும் பொருள் வழங்கினர். காரைக்குடி சா. நா. அ. சொ. சொக்கலிங்கம் செட்டியார் உதவிய பொருளைக் கொண்டு விநாயகர், துர்க்காம்பாள் கோவில்கள் கட்டப் பெற்றன. மீண்டும் திருப்பணி வேலை நடை பெற்று கும்பாபிஷேகம் 19-5-1929ல் செய்யப் பெற்றது.

கோ. ஆ. பொ. மடாலயத்தின் பொருளைக் கொண்டு சொர்ணபுரீசுவரர் கோவிலும், உகந்த ஞான தேசிகர் கோவிலும் புதுப்பிக்க பெற்று 1961 ல் கும்பாபிஷேகம் செய்யப்பெற்றது.

இந்த மடத்தின் தலைவராக இருந்திருப்பவர்கள் வருமாறு:

1. உகந்தலிங்க ஞான தேசிகர்
2. வீரபத்திர சுவாமிகள்
3. சிங்காரவேல் சுவாமிகள்
4. முத்தைய சுவாமிகள்
5. சட்டையப்ப சுவாமிகள்
6. மாரிமுத்து சுவாமிகள்
7. மெய்யப்ப சுவாமிகள்
8. கோவிலூர் ஆதீனம்
9. இராமலிங்க சுவாமிகள் (இப்போது இருந்து வருபவர்கள்)

# இருள் அகற்றும் ஈசான்ய மடம்

ரமண மகரிஷிக்கும், ஈசான்ய மடத்திற்கும் உள்ள தொடர்பு குறித்து, ஒரு சமயம் தவத்திரு இராமநாத அடிகள் செவி வழிச் செய்தி ஒன்றை என்னிடம் குறிப்பிட்டார். கடுந்தவம் கிடந்த ரமணர், தம் கடும்பசிக்கு உணவு கிடைத்தால் மிதமாக உண்டு உடம்பைப் பாதுகாத்துக் கொண்டார் என்பது சாதாரண இயற்கை நிகழ்ச்சிதான். அப்படிப் பட்ட ஒரு சந்தர்ப்பத்தில் ஈசான்ய மடத்திற்கும் வந்து, அங்கே கிடைத்த பிரசாதத்தை உண்டு களைப்பாற்றினாராம்.

இம் மடத்துடன் ரமணர் கொண்ட தொடர்பு குறித்து வேறொரு செவி வழிச் செய்தியையும் ஸ்ரீ இராமநாத அடிகள் வெளியிட்டதாக ஆனந்த விகடனில் 'அருணாசல மகிமை' என்ற தலைப்பில் வந்த தொடர் கட்டுரை ஒன்றில் 'பரணீதரன்' குறிப்பிட்டிருக்கிறார். மடத்திலேயே பகவத் கீதையைப் பற்றிய ஆராய்ச்சி வகுப்பு ஒன்று நடந்து கொண்டிருந்த சமயம், அப்பொழுது எழுந்தருளிய ரமண பகவான், இராமநாத சுவாமிகளுக்கு முன்பு தலைவராக இருந்த தவத்திரு நடேச சுவாமிகளின் வேண்டுகோளுக்கு இணங்க, இரண்டு மூன்று கீதை சுலோகங்களுக்கு புதுமையான பொருள் கூறி கேட்போரை வியப்பில் ஆழ்த்தினாராம்.

'இருளே உலகத்து இயற்கை' என்று தொடங்கும் பிரசித்தமான ஒரு பாட்டை தமிழறிஞர்கள் நினைவு படுத்திக் கொள்ளலாம். அப்பாட்டிலே, 'இருள் அகற்றும் கைவிளக்காகக் கற்ற அறிவுடைமை'யைச் சுட்டிக் காட்டுகிறார், ஆசிரியர். ஈசான்ய மடம் போன்ற மடாலயங்களில் தலைவர்களும் ஞானக் கைவிளக்குகளாகத் திகழ்ந்து, இருளுடே மருண்டு திரிந்து அல்லற் படுவோருக்கு நெறி காட்டியதுண்டு.

ஞானக் கைவிளக்குகள் சில, ஈசான்ய மடத்தில் தோன்றுவதற்கு மூல காரணர் கந்தப்ப தேசிகர் என்ற ஞான தீபம்தான். இத் தேசிகர் பிள்ளைப் பிராயத்திலேயே 'குழந்தை மனிதனின் தந்தை' என்ற புதை பொருளோடு கூடிய ஆங்கில வாக்கிற்கு ஓர் இலக்கியமாகத் திகழ்ந்தாராம். ஆழ்ந்து அகன்ற நுண்ணறிவு அப்பொழுதே மிளிரத் தொடங்கி விட்டது.

'குழந்தைக் குருநாதன்' என்று டாக்டர் மாண்டிசோரி கூறுகிறாரே, அத்தகையதொரு சிறப்புக் குருநாதனாக இருந்தாராம் கந்தப்ப தேசிகர். சாதாரண அறிவு வளர்ச்சியில் மட்டு மல்ல. தவயோகப் பற்றிலும் ஓர் இயற்கை மேதையாகத் திகழ்ந்தார், இக்குழந்தைக் குரு நாதர் என்பர்.

அதிசயச் சிறுவரின் உள்ளம் சிவயோகத்திலும் சிவ ஞானத்திலும் சிவ பூஜையிலும் ஈடுபடலாயிற்று.

தீவிர வேதாந்த மனப்பான்மையும் கந்தப்பருக்கு வாய்த்திருந்தது.

'24 மணி நேரமும் வாழ்வதெப்படி?' என்பது குறித்து ஓர் அருமையான சிறு நூல் ஒன்றை நான் ஒரு சமயம் வாசிக்க நேர்ந்தது. கந்தப்ப தேசிகரோ அல்லும் பகலும் அனவரதமும் ஞானவாழ்வு வாழத் தொடங்கி விட்டாராம். தமது அன்னையாரின் அனுமதி பெற்றுக் கப்தப்பர் தீர்த்த யாத்திரை செய்து தம் அறிவையும் அனுபவங்களையும் பெருக்கிக் கொண்டு, பாச பந்தங்களைக் கடந்து சென்று ஞானப்பெரு நெறியிலே மேலே மேலே சென்று கொண்டிருந்தார் எனத் தெரிய வருகிறது.

நடராஜப் பெருமானின் அருளால், இவர் குருதரிசனம் பெற்றார். ஒரு சித்த புருஷரான ஸ்ரீ மௌன சுவாமிகளை அடைந்து, தம்மை முழுக்க முழுக்க அவர் பணிக்கு அர்ப்பணம்

செய்தார். தம் குருவிடம் விடை பெற்றுக் கொண்டு, முடிவில் மௌன தவம் இயற்று வதற்கு இசைந்த இடமாகத் திருவண்ணா மலையைத் தேர்ந்தெடுத்தார்.

இவர் திருவண்ணாமலையைத் தேர்ந்தெடுத் தார் என்று கூறுவதைக் காட்டிலும், திருவண்ணாமலையே இவரைப் போன்ற ஞானி களைத் தேர்ந்தெடுத்து 'வாருங்கள் வாருங்கள்' என்று வரவழைத்துக் கொண்டது எனக் கருதலாம்.

கந்தப்ப தேசிகர் மலைக்குகை ஒன்றில் தவம் கிடந்து மனக் குகையில் ஒடுங்கி வாழும் இரகசியத்தைத் தெரிந்து கொண்டாராம். இவருக்குப் பணி செய்தவர்கள் பலவகைப் பேறுகள் பெற்றதாக இவரது வாழ்க்கை வரலாற்றுச் செய்திகள் கிடைத்திருக்கின்றன. அப்பேறுகளைப் பெறலாம் என்ற பேராசை யால் இவருக்குத் தொந்தரவு கொடுத்த லௌகிகர்களைக் கண்டு அஞ்சியது தேசிகரின் ஞான உள்ளம். இந்த நிலையில் ஸ்ரீதேசிகர் திருவண்ணாமலைக்கு தென்மேற்கிலுள்ள ஒரு குளக்கரையில், நிஷ்டை கூடியிருந்தார். அங்கே மாடு மேய்ப்பவர்களின் பராமரிப்பைப் பெருஞ் செல்வர்களின் உபசாரங்களைக் காட்டிலும் உவந்து ஏற்றுக் கொண்டார்.

ஞான தேசிகர் சமாதி நிலையில் இருக்கும் போது ஒரு புலி வந்து பாதகாப்பாக இருந்த தென்றும், புலியை இவர் 'அண்ணாமலையாரே!' என்று அன்புடன் அழைப்பார் என்றும் சொல்லுகிறார்கள் புலிக்கு அஞ்சாத ஞான இதயம் லௌகிகப் புலிகளுக்கு அஞ்சிச் சமாதி யில் ஆழ்ந்திருந்தது! இதைக் காட்டிலும் என்ன அதிசயம் இருக்க முடியும்?

ரமண ரிஷியின் ஞானம் வெள்ளையரையும் வசீகரித்தது என்பதை நாம் அறிவோம். அப் படியே அக்காலத்துக் கலெக்டராக இருந்த ஒரு வெள்ளைத்துரையையும் கவர்ந்தன ஈசான்ய ஞான தேசிகரின் ஞானமும் அருளும்.

இந்த ஞான பரம்பரையில் வந்திருக்கும் ஸ்ரீ இராமநாத அடிகளின் சீரிய நன்முயற்சி யால் இப்பொழுது நடைபெற்று வரும் சேவாஸ்ரமத்தின் சமூகப் பணிகளைக் காலத் திற்கு ஏற்ற நல்லறப் பணிகளாக நாம் வரவேற்கிறோம். இந்த ஆசிரமம், அநாதைப் பிள்ளைகளுக்கு ஓர் இல்லம் அமைத்துள்ளது. இங்கே உலகியலுடன் தெய்வ நெறியும் இணைந்து அறிவுடன் அறப்பற்றும் வளர்ந்து வருகிறது. இது அண்ணாமலையாருக்கு மிகவும் உவப்பான அருமைப் பணிகளில் ஒன்றாக அறிஞர்கள் மதிப்பர்.

திரு அண்ணாமலைத் தீபவிழா என்ற நூலில் பி ஸ்ரீ.

## ஈசான்ய மடம், திருவண்ணாமலை

இங்கு பட்டத்தில் இருந்த மடாதிபதிகள் விவரம் :

1. தவத்திரு. ஈசான்ய ஞான தேசிகர்
2. தவத்திரு. இராமலிங்க சுவாமிகள்
3. தவத்திரு. சச்சிதானந்த சுவாமிகள்
4. தவத்திரு சொரூபானந்த சுவாமிகள்
5. தவத்திரு மகாதேவ சுவாமிகள்
6. தவத்திரு சதானந்த சுவாமிகள்
7. தவத்திரு மகாதேவ சுவாமிகள் (பிறகு கோவிலூரில் ஆதீன கர்த்தராக எழுந் தருளியவர்கள்)
8. தவத்திரு நடேச சுவாமிகள்
9. தவத்திரு இராமநாத சுவாமிகள் (1971 முதல் கோவிலூர் ஆதீனகர்த்தராக எழுந் தருளி இருப்பவர்கள்)
10. தவத்திரு கந்தசாமி சுவாமிகள்

இங்கு சாதுக்களுக்கு அன்னம் பாலிக்கப் படுகிறது.

திருக்கார்த்திகைத் திருவிழாவின் போது நகரத்தார்களுக்கு விருந்தும் நடத்தப் படுகின்றது.

சேவாசிரமம் ஏற்படுத்தப்பட்டு அதன் மூலம் பாலர் பள்ளியும் தொடக்கப்பள்ளியும் நடத்தப்பட்டு வருகின்றன.

நகரத்தார்களுக்குத் திருவண்ணாமலைக் கோவிலில் தொன்றுதொட்டு இருந்து வரும் ஈடுபாடு மிகுதியாவதற்கு, ஈசான்ய மடம் பெருங் காரணமாக இருந்து வருகிறது எனலாம்.

ஆறாவது பட்டம் மடாதிபதியாக இருந்த சதானந்த சுவாமிகள், மடத்தைப் பெரிதும் வளர்ச்சி பெறச் செய்தார்கள். ஒன்பதாவது பட்டம் மடாதிபதியாக இருந்த ஸ்ரீ-ல-ஸ்ரீ இராமநாத சுவாமிகள் வேதாந்தம் பயின்றது இந்த மடத்தில்தான். இவர்கள் 23 ஆண்டுகள் இங்கு மடாதிபதியாக இருந்த காலத்தில், மடம் பெரிதும் வளர்ச்சியடைந்தது. அண்ணாமலையார் கோவில் திருப்பணிகளுக்கும், சேவாசிரமம் மூலம் உண்டி கொடுத்து உயிர் கொடுக்கவும் இந்த மடம் நிலைக்களனாக இருந்திருக்கிறது.



# திருக்களர் கோ. ஆ. வீர. மடம்

## திருக்களர்—மன்னார்குடி வட்டம்-தஞ்சை மாவட்டம்

கோவிலூர் ஆதினத்தின் கிளை மடங்களில் இது தனிச் சிறப்பு உடையது. இத்தலத்தின் பெயரால், கோவிலூர் ஆதீன கர்த்தர்களுள் ஒருவரான வீரப்ப ஞானதேசிகர் அவர்கள், கோவிலூர் ஆண்டவரென வழங்கப் பெறுகிறார்கள். திருக்களர் ஆண்டவருடைய சமாதிக் கோயில் திருக்களரில் உள்ளது.

கோச்சடைய வன்மரான திரிபுவனச் சக்ரவர்த்திகள் சிவல்லபதேவற்கு யாண்டு இருபத்தஞ்சாவது மேவுநாயிற்றுப் பூர்வபக்ஷத்து ஏகாதசியும் சனிக்கிழமையும் பெற்ற மகத்து நாள் பாண்டிமண்டலத்து மிழலைக்கூற்றத்து "ஒக்கருடையார்" என்று திருக்களர்க் கல்வெட்டு ஒன்றில் காணப்படுகிறது. எனவே நகரத்தார்க்கும் திருக்களர்க்கும் தொன்மையான தொடர்பு இருந்தது என்று தெரிகிறது.

இந்த மடம் சிறந்த முறையில் இயங்கி வருகிறது. ஸ்ரீ கிருஷ்ணாநந்த சுவாமிகள் அவர்கள் மடாபதிபதியாக இருந்து வருகிறார்கள்.

ஏழாவது ஆதீனகர்த்தர் அவர்களுடைய வாழ்க்கை வரலாற்றுக் குறிப்பில் இம்மடத்தைப் பற்றிச் சில விவரங்களைத் தெரிவித்துள்ளோம்.





இளைய சுவாமிகள்

ஸ்ரீ-ல-ஸ்ரீ அரு. இராமநாத ஞான தேசிக சுவாமிகள் அவர்கள்



# பவழக்குன்று அழகானந்த மடம் திருவண்ணாமலை

பவழக்குன்று மண்டபத்திற்கு உள்ளடங்கி, படாடோபம் ஏதுமின்றி பார்க்க மிகச் சாதாரணமாக இருக்கிறது. இந்த மடம் தோன்றக் காரணமாயிருந்தவர் அழகானந்தர்.

வேட்டைவலத்திற்கு அருகில் கண்டாச்சிபுரம் என்ற சிற்றூர் ஒன்று இருக்கிறது. அவ்வூரில் தோன்றியவர் அழகானந்தர். அவர் நல்லொழுக்கமும், தெய்வ பக்தியும் கொண்ட ஆசார சீலர். இயல்பாகவே பற்றற்றவராக இருந்தார். ஒரு நாள் அவர் தெருவில் தறி நெய்து கொண்டிருந்தபோது, தீண்டப்படாத பெண்மணி ஒருத்தி கொண்டுவந்து கொடுத்த உணவை வாங்கிச் சாப்பிட்டுவிட்டார். அதைக் கண்ட உறவுக்காரர்கள் அவர்மீது ஆத்திரம் அடைந்தனர். ஒருவர் அழகானந்தர் கன்னத்தில் ஓங்கி அறைந்தேவிட்டார். அந்த ஆகாரத்தைத் துப்பிவிடும்படி எல்லோரும் அவரைக் கட்டாயப்படுத்தினர். அவரும் துப்பினார். அவர் வாயிலிருந்து நறுமணம் கமழும் மலர்கள் கீழே விழுந்தன! அவரை அடித்தவர் இதைக் கண்டு மிக்க வேதனைப்பட்டார். சுற்றியிருந்தவர்கள் அவர் காலில் விழுந்து வணங்கினர். அவர் ஒரு மகான் என்பதை அறிந்து தங்களை மன்னித்தருளும்படி வேண்டினர்.

தக்க குரு ஒருவரிடம் உபதேசம் பெற்று அழகானந்தர் திருவண்ணாமலைக்கு வந்து துறவியாகப் பவழக்குன்றின் அடிவாரத்தில் 1850 முதல் பரிபூரணம் அடைந்த 1884 வரை வாழ்ந்து வந்தார்.

ஒரு நாயரின் வயிற்றுவலியை, அழகானந்தர் தீர்த்து வைத்தார். நாயர் பெரும் செல்வந்தர். பணத்தைக் கொண்டுவந்து அழகானந்தரின் காலடியில் கொட்டினார். சுவாமிகள் அதைத் தொடவில்லை. மாறாக, பவழக்குன்றின் மீதுள்ள பவழகிரீசுவரர் ஆலயத்திற்குத் திருப்பணிகள் செய்யும்படி நாயரிடம் கேட்டுக் கொண்டார். அப்படியே செய்து வைத்தார் நாயர். பின்னர் ஆண்டுதோறும் கோயில் ஆராதனைக்காக நெல் மூட்டைகளும் அனுப்பி வைத்தார்.

இந்த மடம் கோவிலூர் ஆதீனத்துக்கு உட்பட்டது.



# திருப்புவனம் வேதாந்த மடம்

மதுரைக்கு அருகே வைகைக் கரையில் அமைந்துள்ள திருப்புவனம், புகழ் பெற்ற சிவத்தலம். முத்தி தரும் தலங்களுள் ஒன்று.

இங்கு வேதாந்தம் பயில வசதியாக சாதுக்களுக்கு ஒரு மடம் இருக்கவேண்டும் என்ற எண்ணம், காசிநாதாநந்த ஞானாச்சாரிய சுவாமிகளுக்கு ஏற்பட்டது. இவர்கள் கோவிலூர் வீரசேகர ஞானதேசிக சுவாமிகள் என்ற திருக்களர் ஆண்டவரின் மாணாக்கர் ஆவார்கள். வீரசேகரர் பரிபூரணம் அடைந்த பிறகு, இவர்கள் காசி முதலிய பல தலங்களில் ஒன்பது ஆண்டுகள் தங்கி வியாகரணம் படித்து, திருப்பூவணத்தற்கு வந்து அங்கு 1930-ல் ரூ. 40,001–செலவு செய்து மடத்திற்கு உரிய கட்டிடங்கள் கட்டி மடம் நிறுவி தம் காலம்வரை வேதாந்த சாத்திரங்களைக் கற்பித்தும் மொழி பெயர்த்தும் ஏராளமான நூல்களை வெளியிட்டும் வந்தார்கள்.

இது கோவிலூர் மடத்துக்கு உட்பட்டது.

# திருப்புவனம், காசிதானந்த ஞானச்சாரிய சுவாமிகள் இயற்றிய நூல்கள்

1. ஹரிமீடே, ஹரிதத்வ முக்தாவலி பத உரை

2. வேதாந்த ஸித்தாந்த முத்தாவலி வசநம்:

3. பகவத்கீதை 15வது அத்தியாயம் சமஸ்கிருதம் தமிழ் பதஉரை, தமிழ் உரை மூர்க்கசதகம், சம்ஸ்கிருதம் தமிழ் பதஉரை, நிர்க்குண அஷ்டோத்தர சதநாமாவளி, சமஸ்கிருதம் தமிழ் நாலுசேர்ந்தது.

4. கீதாசாரதி தாலாட்டு, நக்ஷத்திர விளக்க உரை

5. சகிவந்த போதம், பதார்த்த பாஸ்கரன் உரை

6. பக்தி (வைராக்கிய) சதக பதஉரை

7. மேற்படி உரை உதாரணக்கனி, பக்தி ரச உரை

8. கைவல்ய நவநீதம், தத்துவார்த்த தீபிகை உரை, உதாரணக்கவி 233க்கு, ஆதித்தன் உரை.

9. மேற்படி நக்ஷத்திர விளக்க உரை

10. சாரித சதக ஸ்தோத்திர ரச மஞ்சரி பரிமள தீப உரை

11. ஒன்பது துறவியர் பாடிய அருட்பா மாலை கவி 280

12. திருக்களர், வீர சேகர ஞான தேசிகர் சரிதம் வசநம்.

13. வேதாந்த சாஸ்திர சதுத் திரயம் விவேக சூடாமணி கவி 671, அஞ்ஞவதைப் பாணி கவி 494, பஞ்சதசி கவி 796(3) சேர்ந்தது கவி 1961.

14. கீதாத் திரயம் ஈசுவர கீதை கவி 338 பகவற்கீதை கவி 545, பிரஹ்மகீதை கவி 547 மூன்று சேர்ந்தது. ஆக கவி 1430.

15. சப்ததா சப்ததி தோத்திரரச மஞ்சரி கவி 70 நுந்தா ஒளி உரை

16. கைவல்ய நவநீதம் கிருதபாத உரை

17. வேதாந்த சூடாமணி சந்தோஷதாயினி உரை

18. வேதாந்த சூடாமணி மூலம்

19. மகாத்ம சரிதாமிருதம் (40 பெயர் சரிதம்)

20. ஈஸ்வர கீதை—ரகஸ்யார்த்த விளக்க உரை

21. கைவல்ய நவநீத நூலில் துவாதச (12) கவி உரை, ஆராய்ச்சி

22. சதுர்த்தச வித்யாப் பிரகாசிகை

# காளையார் கோவில், செல்லப்ப சுவாமிகள் மடாலய வரலாறு

தருமையாதீன சமயப் பிரச்சாரகர், சித்தாந்த சைவமணி,
**வித்வான் சு. சுவர்ணகாளீச்சுவரன்,**
அரசர் கல்லூரி, திருவையாறு -613204

## காளையார் கோவில்

செந்தமிழ்ப் பாண்டிய நாட்டிலே சங்க கால முதல் சிறப்புற்று விளங்கும் தலங்களிலே காளையார் கோவிலும் ஒன்றும். சங்க காலத்திய நூல்களிலே இங்கு அரசாண்ட வேங்கைமார்பன், இங்கிருந்த பேரெயிலை அழித்து வெற்றி கொண்ட "கானப் பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி" முதலியோர் போற்றப்படுவதையும் அறிகின்றோம். இத் திருவூரிலுள்ள பெருமான் சுந்தரரும், காளைப் பருவக்கோலத்தில் காட்சியளித்தமையால் காளையார் எனப் பெயர் பெற்றார். அவரது திருக்கோவிலாகையால் காளையார் கோவில் என வழங்கப்பெற்றுக் கோவிலின் பெயர் அக் கோவிலுள்ள ஊருக்கே ஆகி காளையார் கோவில் என்னும் பெயர் வழங்கி வருகின்றது.

## காளையார் கோவிலின் பொற்காலம்

பின்னர் இத்திருவூர் சேதுபதி மன்னர் களாலும் சிவகங்கை மன்னர்களாலும் போற்றப்பட்டது. தேவகோட்டை ஜமீன்தா ராக வீற்றிருந்து, பல்கலைச் செல்வராகவும், இரசிகராகவும், பெருஞானத் துறவியாகவும் விளங்கிய ஜமீன்தார் சுவாமிகள் என மக்களால் பேரன்போடு அழைக்கப் பெற்ற தேவ கோட்டை, அள. அருணாசலம் செட்டியார வர்கள், தனது அருமைச் சகோதரர்களுடன் கூடி நகரப் பெருமக்கள் அனைவரையும் காளை யார் கோவில் திருப்பணிகளில் ஈடுபடுத்தி அருளினார்கள். சிவாலயத் திருப்பணி, திருக் குளத் திருப்பணிகளோடு நான்கு திருவீதிகளி லும் அறநிலையங்கள் பல அமைத்தனர். இருக்கு வேதபாடசாலை, யசுர்வேதபாடசாலை, அறுபத்துமூவர் திருமடம், திருமந்திரமடம், நடனமடம், திருப்புகழ்மடம், சித்தாந்தமடம், பசுமடம் இரண்டு, விபூதி மடம் இரண்டு. குங்கிலியமடம், திருவாசக மடம், பன்னீர் மடம், சந்தனச்சாலை, காலசந்தி நந்தன வனம், உச்சிக்கால நந்தன வனம், சாயங்கால நந்தன வனம், அர்த்தசாம நந்தன வனம், பரிவாரங் களுக்காகப் பெரிய நந்தன வனம் மற்றும் இசைவாணர்கள் நாட்டியக் கலையினர் அனை வரும் சூழுமாறு, நகர பெருமக்கள் சிறப்புறச் செய்தமைத்த பொற்காலம் (1884 அல்லது 1885) ஆகும்.

## செல்லப்ப சுவாமிகள் திருமடம்

இத்தகைய பொற்காலத்தில் தான் அருட்டிரு ஜமின்தார் சுவாமிகள் அவர்கள், கோவிலூர்ப் பரம்பரை நான்காம் குருமூர்த்தி இராமசாமி ஞானதேசிக சுவாமிகளிடம் பயின்றவர்களும், அவர்கள் பரிபூரணமடைந்த பிறகு, தஞ்சை, கருந்தட்டான்குடி பாலையா சுவாமிகள் மடம், சங்கர சுவாமிகள் மடம், மதுரை குட்டையா சுவாமி மடம் முதலிய வற்றின் அதிபதியாக இருந்தவர்களுமாகிய செல்லப்ப ஞானதேசிக குருமூர்த்தியை, இங்கு எழுந்தருளச் செய்தார்கள்.

## செல்லப்ப ஞானதேசிக சுவாமிகள் திருமடத்துப் பணிகள்

நமது செல்லப்ப ஞான தேசிக குருவின் திருவாணைக்கிணங்க, அவர்களது தலைமைச் சீட ராகிய ஜமீன்தார் சுவாமிகள் யானைமடு வென்னும் திருக்குளத்தின் தென்கரையில்,

விசாலமான இரண்டு பெரிய கட்டுக்கள், அவற்றின் விசாலமான திருமுகப்பு, பூசை மடம், நூல்நிலையம், அடியார்கள் திருமாலைப், பணி செய்கின்ற முற்றம், குருநாதர் தங்கி இருக்கும் பேரறை, திருமாலை கட்டும் மடம், மகேசுவரபூசை நிகழும் மிகப் பெரிய விசால மான இடம், திருமடப்பள்ளி, உக்கிராண அறை அடியார்கள் குழுமத்தக்க பேரிடம் தனித்தனி அறைகள், அதற்குமேல் மாடியில் தனித்துத் தியானம் செய்யத்தக்க வகையில் இரண்டு தேரமைப்பு அழகிய மண்டபம், பின்னே, குரு மூர்த்தங்கள். தனித்துப் பாடம் சொல்லித் தர தக்கவகையில் நந்தவனத்திடையே ஒரு கட்டிடம் ஆகியவை அமைய முன்னும் திருக் குளமும், பின்னே கண்மாயும் வேதாந்தப் பேரவை கூடுதற்கேற்ற வசதியுடைய மாடி அமைய, அரண்மனை போன்ற ஒரு மடா லயத்தை இலட்சத்து நாற்பதினாயிரம்செலவில் தனது குடும்பப் பொருளோடு நகரப் பெரு மக்களது பொருளையும் கொண்டு அமைத் தார்கள்.

இங்கு மிகப் பெரிய சாதுக்கள் நிறைந் தனர். அவர்கள் பாடம் கேட்பதோடு, பூசைப் பணி, பூ எடுக்கும் பணி, பூமாலை கட்டும் பணி, திருநீறு தயாரிக்கும் பணி, பன்னீர் அமைக்கும் பணி, நூல்நிலையப் பணி, உக்கிராணப் பணி, திருமடப்பள்ளி நிர்வாகப் பணி, குருமூர்த்தி யின் அருகே ஒடுக்கப் பணி இவற்றை ஒவ்வொரு அடியவரும் குருமூர்த்தியின் ஆணை யின் வண்ணம் சிறப்புறச் செய்தலோடு, திரு மாலைத் திருப்பணி செய்யும் போதும், நந்த வனத்தில் பூ எடுக்கும்போதும், மற்றும் காய் கறிகளை மகேசுர பூசைக்குத் திருத்தும் போதும், திருநீறு வடிகட்டும் போதும் கூட சாத்திரவிசாரம் செய்த வண்ணமிருப்பார்கள்.

## பாடம் நடக்கும் முறைகள்

முதலில் நாஞ்சிவ வாதக் கட்டளை, 2 சிவ தாசாரம், 3. சசிவர்ணபோதம் 4. மகாராசா துறவு, 5. வைராக்கிய சதகம், 6. வைராக்கிய தீபம் ஆகிய பாடங்கள் நடைபெறும்.

அதன்பின் 7. வேதாந்தசூடாமணி, 8. கை வல்யம், 9. ஞானவாசிட்டம், 10. விவேகசூடா மணி, 11. அஞ்ஞவதைப்பரணி, 12. பகவத் கீதை ஆகிய பாடங்கள் நடைபெறும். நமது செல்லப்ப ஞானதேசிக சுவாமிகள் தனது மாணாக்கர்கள் பக்குவத்திற்கு ஏற்றப் பாடம் சொல்லித் திருத்துவார்கள். வேதாந்த சூடா மணி பாடம் சொல்லுவதில் அவர்களுக்கு நிகர் அவர்களே என்று அவர்கள் காலத்தில் இங்கு நாஞ்சிவவாதக்கட்டளை. சிதாசாரம், சசிவர்ண போதம் மகாராசா துறவு வைராக்கிய சதகம் வைராக்கியதீபம் வரை பாடம் கேட்ட அடி யேனது தந்தையார் தேவாரம் சுப்பையா பிள்ளை அவர்கள் கூறப் பலமுறை கேட்டிருக் கின்றேன்.

அவர்கள் திருவாயால் "களிமண்ணே" என்று திட்டுப் பெற்றுவிட்டால், அவ்வாறு பெற்றவருக்கு ஏதாவது இன்ப நிகழ்ச்சி தோன்றுமாம். அவர்களது அன்புத்திட்டுதலே இன்பத்தை தருமானால் அவர்களிடம் அருளுப தேசம் பெற்ற சீடர்களின் பெருமையைக் கேட்க வேண்டுமா? நமது செல்லப்ப தேசிக ஞான குருமூர்த்திகள் சாத்திர அறிவோடு இலக்கண அறிவும் நிறைந்தவர்களாக இருந் தார்கள். சாத்திர அறிவிற்கு இலக்கண அறிவும் வேண்டும். சிறிது இலக்கணம் படித்த வர்கள் மடாலயத்தில் பாடம் கேட்பதற்காகச் சென்றால் அம்மாணுக்கர்களைப் பார்த்து சுவாமிகள், எழுதும் 'எழுத்து எத்தனை? எழுதா எழுத்து எத்தனை' என வினவுவார்களாம்.

## ஆண்டவர் காலத்தின் அருமைச் சீடர்கள்

ஆண்டவரிடம் வேதாந்த சூடாமணி பாடம்கேட்டவர்கள், மற்ற நூல்களைத் தானே அறிந்து கொள்ளும் அளவிற்கு தகுதி பெற்று விடுவார்களாம். அவர்களிடம் பாடம் கேட்ட பெரியவர்கள் தேவகோட்டை, ஜமீன்தார் சுவாமிகள், பெத்து நாயக்கன்பாளையம் பொன்னம்பல சுவாமிகள், மன்னார்குடி கண் மூடி முத்தையா சுவாமிகள், இளையான்குடி சிவானந்த சுவாமிகள், சேலம் மாரிமுத்து சுவா மிகள் பெருமாள்சாமி, பழனி முத்துசுவா மிகள், முதுகுளத்தூர் சுப்பைய சுவாமிகள், சாக்கோட்டை நாராயண சாமிகள், சிதம்பர சுவாமி, மஹேஸ்வரானந்த கிரி சுவாமிகள், கணபதி சுவாமிகள் முதலியோராவார்.

அவர்களுள் பொன்னம்பல சுவாமிகள் பெத்துநாயக்கன்பாளையத்திலும், மாரிமுத்து

சுவாமிகள் சேலத்திலும், வேங்கடாசல சுவாமிகள், திருமழபாடி தெற்கு மடத்திலும், நாராயண சாமி சாக்கோட்டையிலும் சுப்பையா சுவாமிகள் முத்துகுளத்தூரிலும், சிவானந்தசாமி சுவாமிகள் இளையான்குடியிலும், முத்தையா சாமிகள் நாட்டரசன் கோட்டையிலும், மன்னார்குடி கண்முடி முத்தையா சுவாமி அவர்கள் கரூரிலும், சிவானந்த சுவாமிகள் மருத்துவத்திலும் சித்த கவிபாடுதலிலும் மிகவும் வல்லவராகத் திகழ்ந்தவர்கள் மற்றும் அருப்புக்கோட்டை சுவாமிகள் கோவில்பட்டி சுவாமிகள் சதாசிவ சுவாமிகள் கணபதிசுவாமிகள் உள்ளிட்ட பலர் அம்மடாலயத்திலிருந்து சென்று வேதாந்தப் பயிரை வளர்த்தவர்கள் ஆவார்கள். அடியேனது தந்தையார் அவர்கள் வேதாந்த சூடாமணிவரை இம்மடாலயத்தில் பாடம் கேட்டவர்கள் ஆவார்கள். பின் நம் குருமூர்த்தியின் ஆணைவண்ணமும் அவர்களது பொருளுதவியின் வண்ணமும் இல்லறத்தை மேற்கொண்டு சொர்ணகாளீசருக்குத் தேவாரப் பணி செய்து இறுதிக் காலம்வரை இம் மடத்தின் தொண்டராகவே திகழ்ந்தார்கள்.

## இம்மடாலயக் குருமரபு
## செல்லப்ப ஞான தேசிக சுவாமிகள்

1922-ல் பரிபூர்ண மெய்தினார்கள். அதன் பின் ஆறுமாதம் உகைப்பட்டி இலக்குமண சுவாமிகளும், அதன் பின் மூன்று மாதம் சிக்கல் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகளும், அதன் பின் ஏழாண்டுகள் முத்தையா ஞான தேசிக சுவாமிகளும் மடாதிபதியாகத் திகழ்ந்தனர். சிறிது காலம் ஜமீன்தார் சுவாமி அவர்களே மடாலயத்தைக் கண்காணித்து வந்தார்கள். அதன்பின் அருணாசல ஞானதேசிக சுவாமிகள் நாற்பது ஆண்டுகள் 1970 வரை எழுந்தருளி இம்மடாலயத்தில் பல்வேறு பணிகள் சிறப்புற பல்வேறு அடியார்களுக்குப் பாடம் கூறியருளி, மடத்துக் கிராமங்களையும் சிறப்புறக் கண் கண்காணித்து வந்தார்கள். மதுரை குட்டைய சுவாமிகள் திருமடத்தையும் நன்கு கண் காணித்து வந்தார்கள். பர்மா முதலிய நாடுகள் சென்று மடத்தின் பொருள் வருவாயையும் பெருக்கினார்கள். சித்த மருத்துவத்திலும் சிறப்புற்று விளங்கினார்கள். அடியேனுக்கு இளமையில் ஊக்கம் காட்டித் தமிழ்ப் புலவனாக அடியேன் ஆவதற்கு கருணைப் பாலித்தார்கள். என் போன்று பலர் சுவாமிகளால் முன்னுக்கு வந்தார்கள்.

அவர்கள் பரிபூரணமானதற்குப் பின், திருப்பெருந்திரு. அரு. இராமனாத ஞான தேசிக சுவாமிகள் சிறப்புற மடாலயத்தை அலங்கரித்து வருகின்றார்கள்.

## மற்றும் மடாலயச் சிறப்புக்கள்

இம் மடாலயத்தில் செல்லப்ப ஞானதேசிக ஆண்டவருக்கும், அருணாசலஞானதேசிகசுவாமிகட்கும், ஜமீன்தார் சுவாமிகட்கும் குருபூசை மிகச் சிறப்புற அன்னதானத்துடன் நடைபெற்று வருகின்றன. மற்றைய குருமூர்த்தங்கட்கும் குருபூஜை நடைபெறுகின்றன. வைகாசி விசாகத் திருநாளில் நான்காம் திருநாளில் சௌந்தரநாயகி அம்மை இத் திருமடத்திற்கு எழுந்தருளும் காட்சி சிறப்புடையது.

அம்மை பூப்பல்லக்கில் அலங்கரிக்கப் பெற்று சிறப்பு வழிபாடு செய்யப் பெற்றபின் எழுந்தருளுவார்கள். விழாக் காலங்களில் நகரப் பெருமக்களின் முயற்சித் துணை கொண்டு மகேசுரபூஜை சிறப்புற நடைபெற்று வருகின்றன. துறவிகள் பலர் இப்பொழுதும் இருந்து வேதாந்த சிரவணம் செய்து வருகின்றார்கள்.

இங்கு பூசைமடம், குருமூர்த்தங்கள், நூல் நிலையம் முதலியன நன்கு பரிபாலிக்கப்பட்டு வருகின்றன. வேதாந்தப் பயிர் விளங்கச் செய்கின்ற செல்லப்ப ஞான தேசிக சுவாமிகள் திருமடமும், குருமரபும் அவர்களை நமக்குத் தந்த கோவிலூர் ஆதீனத் திருமரபும் செழித்து வளர அருள்மிகு கொற்றவாளீசர் திருவடியைச் சிந்திப்போமாக.



# தில்லையில்

# ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகள்

வித்துவான்
ஸ்ரீ-ல-ஸ்ரீ மௌன சபாபதி சுவாமிகள்
மடாதிபதி, ஸ்ரீமௌன சுவாமிகள் மடம், சிதம்பரம்

பத்தொன்பதாம் நூற்றூண்டில் தில்லைப் பதியில் வாழ்ந்த புலவர் பெருமக்கள் பலர். வேதாந்த நூல் விற்பன்னர்களும், சைவசித்தாந்த நூல்களில் வல்லவர்களும் ஆகிய இவர்கள் வடமொழி தென்மொழி வல்லுநர்களாய்த் திகழ்ந்தார்கள். அவர்களில் ஒருவராய் மிக்க கீர்த்தியுடன் விளக்கியவர்கள், ஸ்ரீ. பொன்னம்பல சுவாமிகள் ஆவார்கள். இவர்கள் கோவிலூர் மடத்தில் இளமைக்காலம் முதல் அம்மடாலய சீராய் விளங்கியிருந்து, பின்னர்ச் சிதம்பரம் வந்தமையால் இவரைக்கோவிலூர்ப் பொன்னம்பல சுவாமிகள் என்னும் தொடர்புடன் வழங்குவர். இவர்கள் கோவிலூரி லிருந்த காலத்தில், வடநாட்டு யாத்திரை சென்று அந்நாட்டில் சிலகாலம் தங்கியிருந்து அங்குள்ள வித்துவசிகாமணிகளிடம் வடமொழி இந்தி முதலிய நூல்களில் சிறப்புற்று விளங்கும் வேதாந்த நூல்களை ஓதி உணர்ந்து விளங்கினார்கள். கோவிலூரில் தங்கியிருந்த காலத்து அம்மடாலயப் புகழ்விளங்கும் அரும்பணி பல புரிந்து திருமடத்தினை விளக்கம்பெறச் செய்தார்கள்.

## பிறப்பு

அமிழ்தினும் இனிய தமிழகமதனில் பல வளஞ் சிறந்தோங்கு பாண்டி நன்னாட்டிற் சிறந்து விளங்கும் இராமநாதபுரத்தைச் சேர்ந்த அனுமந்தக்குடி என்னும் சிற்றூரில் வாழ்ந்த பெற்றோர்கள், வட நாட்டிலுள்ள விஜயநகரில் போர்வீரராய்ப் பணியாற்றி வாழ்ந்துவரும் நாள் சுவாமிகள் தோன்றினார்கள். தந்தையார் பெயர் தெரியவில்லை. தாயார் பெயர் அங்கம்மாள் என்பதாம். தோன்றியகாலம் கலியாண்டு 4934க்குச் சரியான கர வருடமாகும்.

## இளமை

மிக்க இளமைப் பருவத்திலேயே தந்தையார் பிரிவுற்றனர். ஆதலினால் தாயார் அரவணைப்பிலேயே வாழ்ந்து வரலானார்.

"வாழ்வெனும் மையல்விட்டு வறுமையாம் சிறுமை தப்பித்
தாழ்வெனும் தன்மையோடும் சைவமாம் சமயம் சாரும்
ஊழ் பெறல் அரிது........"

என்னும் திருவாக்கிற்கியைய முன்னூழ் கூட்டியிடும் அதனால்

சைவமாஞ் சமயஞ் சார்ந்திட வாய்த்த தன்றி...

சால உயர்சிவஞானத்தாலே போளிள மதியிருளைப் போற்றுவார் அருள் பெற்றாரே"

என்பதற்கேற்ப, ஞானநிலை கைவர இறைவன் பால் அன்பும் வளர்ந்தது. இறைவனைப் பூசை செய்யும் பேரார்வம் காரணமாகப் பள்ளியிற் பயின்றுவரும் அந்நாளிலேயே தனக்குத் தேய்த்துக் கொள்ள அன்னையார் அளித்துவரும் எண்ணெயைக் குளக்கரையிலுள்ள ஆனைமுகக் கடவுளுடைய திருவுருவிற் சாத்தித் திருமுழுக்காற்றி மனரிட்டு வழிபட்டு வருவர். இதனால் தம் குழவியின் மேனி எண்ணெய்ப் பசையற்று வறண்டு காணப்படுவது கண்டு அன்னையார் வினவுங்கால், சிகைக்காயை வரளத் தேய்த்

தமை காரணம் என அன்னையார் முனிவுரு வண்ணம் கூறித் தப்பித்துக் கொள்வர். இவர் தம் பாலப்பருவம் கல்வி கற்பதிலும் தெய்வ பத்தியிலும் கழிந்து குமாரப் பருவம் வரும் பதினாட்டை வயது எய்தினர்.

## தில்லைப் பதிமேவி திருத்தொண்டியற்றுதல்

வாய்த்தது நந்தமக் கீதோர் பிறவி மதித்திடுமின்
பார்த்தற்குப் பாசுபதம் அருள் செய்தவன் பத்தருள்ளீர்
கோத்தன்று முப்புரம் தீயணைத்தான் தில்லை யம்பலத்துக்
கூத்தனுக் காட்பட் டிருப்பதன் றோ நந்தங் கூழைமையே

என்னும் திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரத் திற் கூறியபடி, அவருக்குப் பிறவியின் அருமை யும், திருவம்பலவன் பெருமையும், அவனுக் காட்பட்டிடவேண்டும் என்னும் நியதியும் முன்னை நல்வினையாற் றோன்றுதலும், அன்னை யார்க்குத் தெரியாமலே சிதம்பரம் வந்து பெரு மானைக் கண்டு வணங்கி அவனுக்குத் திருவா லயத்தில் திருவலகிடுதல், மலர் தொடுத்துக் கொடுத்தல், திருவிளக்கேற்றுதல் முதலிய நற் பணிகளிலேயே பொழுது போக்கி ஆறுகால பூசையும் தெரிசிக்கும் நியமம் உடையவராய் வசித்து வந்தனர்.

## துறவு நிலை யெய்துதல்

"விளக்கினூர் பெற்ற இன்பம் மழுக்கினுற் பதற்றி யாகும்
துளக்கில்நன் மலர்தொடுத்தால் தூயவிண் ஏறலாகும்
விளக்கிட்டார் பேறுசொல்லின் மெய்ந்நெறி ஞானமாகும்
அளப்பில கீதம்சொன் னூர்க் கடிகள்தாம் அருளுமாறே"

என்னும் அப்பர் திருவாக்கின்படி இத்திருத் தொண்டு செய்த நற்பயனால், இவருக்கு உலக இன்ப உவர்ப்புத் தோன்றுதலும், அத்தில்லைப் பதியில் கோட்டையூரிலிருந்து வந்து தங்கி யிருந்த தனவணிக மரபினராகிய திரு. பெத் தாச்சி அடிகள் என்பார்பால் துறவு பெற்றுக் கல்லாடை புனைந்து திருவீதியில் ஐயம் ஏற் றுண்டு தவம் இயற்றிக் கொண்டிருந்தார்.

## ஞானசாரியாரை அடைதல்

இவர் செய்து வரும் தவம் காரணமாகத் தன்னையும், தனக்காதாரத் தலைவனையும் காண வேண்டும் என்னும் ஞான நன்னெறியில் நாட்டம் தலைப்படலாயிற்று. இதனை அறிந்த பொத்தாச்சி அடிகள், கோவிலூர் மேய குரு பரனுய் ஒளிரும் கருணைநிதியென்னும் காரணப் பெயரினராகிய சிதம்பரஞானதேசிகர் தில்லைப் பதிக்கு இறை வழிபாட்டிற்காக எழுந்தருளி வந்த ஞான்று இப்பொன்னம்பலவராம் சீரிய இளைஞரை அழைத்துச்சென்று, அவரைவணங்கு விக்கச் செய்து இவ்விளைஞரைத் தேவரீர் மாணக்கனக ஏற்றுக் கொள்ளவேண்டும் எனத் தெரிவித்தபோது, அவர்களும் இவர் தம் முகப் பொலிவு முதலியவற்றினைக் கண்டு உள்ளம் பூரிப்புடையராய், அவ்வாறே ஆகுக எனத் தம் அடியார் கூட்டத்திற் சேர்த்துக் கொண்டு கோவிலூருக்கு அழைத்துச் சென்றனர்.

## ஞான நூற் பயிற்சி

கோவிலூர்க்குச்சென்று அடியவர் கூட்டத் துள் அமர்ந்துறையும் நாள் மாணக்கட்குரிய ஆத்தம், அங்கம், தானம், சற்பாவம் என்னும் நான்கும் இவர்பால் சிறந்துவிளங்குவதாயிற்று. சிதம்பர ஞானதேசிகர் என்னும் குருபரன் இவருக்குச் சசிவன்ன போதம் என்னும் நூலை முதற்கண் பாடமாகச் சொல்லிவைத்ததும் அன்றி, இவர்தம் கூர்த்த மதிகண்டு மேலும் உள்ள வேதாந்த நூல் முற்றும் ஒன்றன்பின் ஒன்றாக ஓதுவித்து, ஞானவாசிட்டம் என்னும் இறுதி நூலையும் பாடம் சொல்லி முடித்து தாம் மாணக்கர்கட்கு ஓதிவரும் பாடநூலை இரண் டாம் முறையில் மாணக்கர்கட்கு விளக்கச் சொல்லும் இரண்டாம் பாடம் சொல்வது என்னும் உயர்பணியையும் கொடுத்து நன்மதிப் பையும் பெருக்கி வைத்திருந்தனர்.

## சொல் வன்மை

"எத்துணைய வாயினும் கல்வி இடம் அறிந்து
உய்த்துணர் வில்லெனின் இல்லாகும்..."

என்னும் நீதி நெறி விளக்க நூலாசிரியர் கூறி யாங்கு தக்க நல்லாசிரியாரை அடுத்துப் பாடம் கேட்டுப் பண்பாடுற்றிருந்தாரேனும்,

...உய்த்துணர்ந்தும்
சொல்வன்மையின்றெனின்
என்றும் அஃதுண்டேல்
பொன்மலர் நாற்றம் உடைத்து''

என்பதனால் பிறர்க்கு விளங்க எடுத்துரைக்கும் பெரும் பெற்றிமை இல்லையானால் பயன் இன்றாகுமே. இவர்பால் போதிக்கும் திறம், மன எழுச்சியோடு விளக்கிச் சொல்லும் சொல்லாற்றல் மிக்க இருந்தது. இவர் மடாலயத்தில் இருந்துவரும் மாணாக்கர்கட்கு அரிய அவிநயங்களுடன் பொருட் செறிவோடு கூடிய சொற்களை எளிதின் வழங்கி கேட்போர் மனதில் பசுமரத்தாணி போற் பதியும்வண்ணம் இனிமை ததும்ப ஓதிவருதலைக் கண்டு இதனால் உலகில் இவருக்கும் கண்ணேறுபடுமோ என்று அடியார்கள் அஞ்சுவார்களாம்.

## வடநாட்டுக்குச் சென்று வடமொழி பயின்று வருதல்

''ஆயுந்தொறும் தொறும் இன்பந்தருந்தமிழ்...''

என்பதற்கேற்ப பலகாலும் நூல் பயிலும்தோறும் இன்பெய்தி வந்தனரேனும்

''அறிதோ றறியாமை கண்டற்றால்...''

என்னும் திருவள்ளுவர் வாக்கிற்கேற்ப புதுப்புது நூல்கள் ஆயும்போதும், பயின்ற நூல்களிலும் அரிய பெரிய நுணுக்கங்களை உய்த்துணர்ந்திடும்போதும், பற்பல புதுக் கருத்துக்கள் புலப்பட, அதனால் தன்பால் முன்பிருந்த அறியாமையையும் காண்பாராயினர். இதனால் மேலும் பலவாகிய நூல்களைக் கற்க வேண்டும் என்னும் அவா மீக் கூர்ந்து வளர்வதாயிற்று.

இதனால் இவர் காசிப் பதிக்கேகி அங்கு கங்கைப் புனலாடி விசுவநாதரைத் தெரிசித்துக் கொண்டு வருவதற்கும், அந்நாட்டிற் சென்று வடமொழி, இந்தி முதலிய மொழிகளையும் அம்மொழிகளிலுள்ள பற்பலவாய வேதாந்த நூல்களையும் கற்று வருவதற்கும். அவாக் கொண்டிருந்தனர். ஆயினும் நாள் சிக்கல் காரணமாக நல் ஆசானை விட்டுப் பிரிய மனம் இன்றி இன்றுட் கழித்தனர். எனினும் காசிக்குச் செல்லும் அவா மேம்பட்டிடுங்காரணத்தால் ஒரு நாள் குருபரன்பால் எய்தி ''அடியேன் காசிக்குச் சென்று ஆரியமும் இந்தியும் கற்று விரைவில் சேர்கின்றேன்'' என்று விண்ணப்பிக்க அவரும் பிரிவிற்கு வருந்திப் பின் விடையளித்துத் திருநீறு கொடுக்கப்பெற்று அணிந்து கொண்டு காரைநகர்—மெ. செ. சபாபதி ஐயர் முதலிய அன்பர்கள் துணைவரக் காசிக்குச் சென்று கங்கைப்புனலாடி விசுவநாதரைச் சேவித்து ஆங்குறையும் நாள் தவசிரேட்டாகிய ஸ்ரீ கிருஷ்ணசுவாமிகள் என்னும் பெரியாரை அணுகி ஸ்ரீ நிச்சலததாஸர் என்னும் பெரியரால் இந்தி மொழியில் இயற்றப் பெற்றுள்ள விசாரசாகரம் என்னும் நூலைத் தெளிவுறக் கேட்ட பின் மற்றும் சில நூல்களும் கேட்டுத் தெரிந்து மீண்டும் கோவிலூர்க்குத் திரும்பினார். திரும்புங்காலத்து கோவிலூர் திருநெல்லை நாயகிக்குக் குதிரைவீரர்போல் குதிரை வாகனத்தெழுந்தருளுங்கால் அலங்கரிக்க சட்டை தலைப்பாகை முதலியவற்றை பொற்சரிகை விரவத் தைத்து எடுத்துக்கொண்டு, தனக்குப் பாடம் சொல்லிய ஸ்ரீ. கிருஷ்ணசுவாமிகளிடம் விடை பெறுங்கால் அப் பெரியார் ஸ்ரீ. நிச்சலதாசர் என்னும் பெரியார் 27 லட்சம் கிரந்தங்களில் மூழ்கித் திரட்டி ஆக்கிய விருத்திப் பிரபாதி காரம என்னும் நூலைக் கையில் கொடுத்து உனது தெளிவுறுமுளத்தில் எளிதிற் புலரும் ஆதலின் நீயே படித்துணருதி என்று வாழ்த்துக் கூறி அனுப்ப மீண்டனர்.

## நூல் வெளியீடு

காசியினின்றும் மீண்டு சென்னைக்கு வந்தபோது சில பகல் அங்கு தங்கியிருந்து வித்தியாரண்யமுனிவர் என்னும் பெரியாரால் வடமொழியிலியற்றப் பெற்ற பஞ்சதசி என்னும் நூலின் தமிழ்மொழி பெயர்ப்பு நூலை ஆய்ந்து அச்சியற்றுவித்தனர். இஃதன்றி ஸ்ரீ. பட்டனார் என்பரால் இயற்றப்பெற்ற பகவத்கீதை என்னும் கவி வடிவில் உள்ள நூலுக்கு தெள்ளிய உரை ஒன்று ஆக்கினர். அதில் மது சூதன சரசுவதி என்பவரால் வடமொழி நூலுக்கு கூடார்த்த தீபிகை என்னும் பெயரோடு எழுதிய வடமொழி வியக்கியானத்திற்கண்ட நுண்கருத்துக்களையும், ஸ்ரீ. சிற்கருவனந்தகிரி சுவாமிகள் என்பவரால் அந்நூலுக்கு வடமொழியிலியற்றி இருந்துவரும், மது சூதனி, ஸ்ரீதரி, சங்கரானந்தி முதலிய வியாக்கியானங்களையும் அனுசரித்து அக்கருத்துக்களையும் இயைவித்து, அவர் வைத்த அப்பெயரையே நம் தமிழுரைக்கும் கூடார்த்த தீபிகை என அமைத்து, எழுதி முடித்து வெளி

யிட்டனர். ஈது வடமொழி உரை நூற்கருத்துக்கள் பலவும் இயைவித்து அமைத்தமையின் இவ்வுரை நூல் மற்ற உரைகளிலும் சிறந்து விளங்குவதாயிற்று.

மேலும் நன்னிலம் தாண்டவராய சுவாமிகள் என்னும் பெரியார் தாமே தண்டமிழில் கவி வடிவில் இயற்றிய "கைவல்ய நவநீதம்" என்னும் அருமந்த நூற்கு ஸ்ரீ வியாசசூத்திரத்திற்கு ஸ்ரீ சங்கரபாஷியம் போல உரைவகுக்க எண்ணி விசாரசாகரம் என்னும் அரிய நூலின் கருத்துக்களை சாரமாகத் திரட்டி இந்நூலுரையில் அமைவித்து இவ்வுரைக்கு தத்துவார்த்த தீபம் என்னும் பெயரிட்டு வெளியிட்டனர். இவ்வுரை நூல் புலவர்களின் ஆராய்ச்சி அறிவிற்கோர் நல்விருந்தாகும். இன்னும் கவிராஜ சிங்கம் என்னும் பெயரால் உலகு போற்றிவரும் ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றிய வேதாந்தசூடாமணி என்னும்வேதாந்த நூற்கு மறை பொருள் விளக்கம் என்னும் பெயரால் ஓர் உரையியற்றினர். இவ்வுரை நூல்களை அன்றி வசிட்ட முனிவர் ஸ்ரீ ராமபிரானுக்கு உபதேசித்த வகுயோக வாசிட்டம் என்னும் அருந்தமிழ் நூலினைமூலத்திற்கியையத்திருத்தியும், திருவேங்கிடநாதர் என்பரால் இயற்றப் பெற்றுள்ள பிபோத சந்திரோதயம் என்னும் நூலினை ஆய்ந்தும் அச்சியற்றுவித்தனர். பஞ்சதசி நீங்கலாக ஏனையவை பிற்காலத்தில் செய்யப் பெற்றவையாம். காசிப் பதியினின்றும் மீண்டபின் தனதாசிரியர் கட்டளைப்படி பிரம கீதைகளுக்கு மூலத்திற்கியைய அரும்பதவுரையும் விரிவுரைச்சாரமும் இயையுற எழுதி முடித்தனர். இவையன்றி இவரால் பார்வையிடப் பட்டதும் வெளியிடப்பட்டதுமான நூல் மேலும் சில உண்டு.

## கோவிலூரில் குரு மூர்த்திகளின் விவேக முத்தி

காசியினின்றும் மீண்டு கோவிலூர் வந்து குருமூர்த்திகளைத் தெரிசித்து அவரது அநுமதிப்படி இரண்டாம்பாட மாணவர்கட்குச் சொல்லியும் நூல் உரை எழுதியும் இருந்துவந்த காலத்து கலியாண்டு 4977க்குச் சரியான தாது வருடம் ஆடி மாதம் நான்காம் நாள் ரோகினி நட்சத்திரத்தன்று ஆசிரியப் பெருந்தகையாகிய ஸ்ரீ. சிதம்பர ஞான தேசிகர் இனிப் பிறவா முடிவான விவேக முத்தி எய்தினர். அப்பெருமானது திருமேனியை எல்லாவிதச் சிறப்புக்கும் அமைய விழாக் கொள்வித்து கோவிலூர் மடம் ஆதிகுருமூர்த்திகளான ஸ்ரீ முத்துராமலிங்க ஞானதேசிகர் சந்நிதி முன் சமாதி செய்வித்துறையும் நாள் அம் மடாலாயத் தலைமைக்குரிய பெருமை முதலியவற்றால் தனக்குத் தகுதியிருந்தும் அம்மடாலயத் தொடர்புடையவர் விருப்பப்படி தனவணிக மரபின்கண் உதித்த ஸ்ரீ இராமசாமி ஞானதேசிகரை அம்மடாலயத் தலைவராய் பீடத்தின்கண் இருத்தி அவ்விடம் விட்டகன்று சிக்கல் பொருள்வைத்தசேரி மடத்திலும், பின்னர், திருவாரூர் திருமழபாடி, புனவாசல் என்னும் இடங்களிலும் சிறிது சிறிது காலம் தங்கியிருந்தனர். புனவாசல் என்னும் ஊரில் தங்கியிருந்தபோது அங்குப் பெரியதோர் மடம் இயற்ற எண்ணி செங்கற் சூளை போட்டு முடிந்த நிலையில் சுவாமிகட்குச் சூலை நோய் வந்தது.

## தில்லைப் பதிக்கு வருதல்

சூலை நோய்க்குத் தக்க மருத்துவர்கள் வாயிலாக மருந்துண்டும் நோய் தீராமையால், தில்லைக்கேகிச் சிற்றம்பலவன் சேவடி வழுத்த வேண்டும் என்னும் எண்ணம் தோன்ற அந்நிலையில் தில்லை வாழ்ந்தணர் வந்து ஸ்ரீ நடராஜப் பெருமான் குஞ்சிதபாதத்திற் சாத்தும் மலர் மாலை தந்து திருநீறு கொடுத்த அளவில் சூலை நோய் குணமடைவதாயிற்று. தில்லைக்கே நினைத்து இருந்தபடி இதனால் விரைவில் புறப்பட்டு தில்லையை அடைந்து அங்குள்ள ஸ்ரீ மௌன ஞானதேசிகர் திருமடத்தில் தங்கியிருந்து நாளும் தனது குருமூர்த்திகளாகிய ஸ்ரீ சிதம்பர ஞானதேசிகர் திருவடிப் பாதுகையைத் தாபித்துப் பூசித்து வணங்கிக் கொண்டு நான்காண்டுகள்வரை இங்குள்ள அடியவர் திருக்கூட்டத்திற்கு வேதாந்த நூல் போதித்துக் கொண்டிருந்தனர்.

## தில்லையில் புது மடாலயம் தாபித்தல்

தனக்கெனத் தனிமடம் ஒன்றும் வேண்டாது தங்கியிருப்பதை அறிந்த காரைக்குடி திருவாளர் மு. ராம. ஆவிச்சி செட்டியார் மடம் இயற்றுவதற்கு வாக்களித்திருந்த 15,000-00-பதினையாயிரம் ரூபாயையும் அவர்

...உய்த்துணர்ந்தும்
சொல்வன்மையின்றெனின்
என்றும் அஃதுண்டேல்
பொன்மலர் நாற்றம் உடைத்து''

என்பதனால் பிறர்க்கு விளங்க எடுத்துரைக்கும் பெரும் பெற்றிமை இல்லையானால் பயன் இன்றாகுமே. இவர்பால் போதிக்கும் திறம், மன எழுச்சியோடு விளக்கிச் சொல்லும் சொல்லாற்றல் மிக்க இருந்தது. இவர் மடாலயத்தில் இருந்துவரும் மாணாக்கர்கட்கு அரிய அவிநயங்களுடன் பொருட் செறிவோடு கூடிய சொற்களை எளிதின் வழங்கி கேட்போர் மனதில் பசுமரத்தாணி போற் பதியும்வண்ணம் இனிமை ததும்ப ஓதிவருதலைக் கண்டு இதனால் உலகில் இவருக்கும் கண்ணேறுபடுமோ என்று அடியார்கள் அஞ்சுவார்களாம்.

## வடநாட்டுக்குச் சென்று வடமொழி பயின்று வருதல்

"ஆபுந்தொறும் தொறும் இன்பந்தருந்தமிழ்..."

என்பதற்கேற்ப பலகாலும் நூல் பயிலும் தோறும் இன்பெய்தி வந்தனரேனும்

"அறிதோ றறியாமை கண்டற்றால்..."

என்னும் திருவள்ளுவர் வாக்கிற்கேற்ப புதுப் புது நூல்கள் ஆயும்போதும், பயின்ற நூல்களிலும் அரிய பெரிய நுணுக்கங்களை உய்த்துணர்ந்திடும்போதும், பற்பல புதுக் கருத்துக்கள் புலப்பட, அதனால் தன்பால் முன்பிருந்த அறியாமையையும் காண்பாராயினர். இதனால் மேலும் பலவாகிய நூல்களைக் கற்க வேண்டும் என்னும் அவா மீக் கூர்ந்து வளர்வதாயிற்று.

இதனால் இவர் காசிப் பதிக்கேகி அங்கு கங்கைப் புனலாடி விசுவநாதரைத் தெரிசித்துக் கொண்டு வருவதற்கும், அந்நாட்டிற் சென்று வடமொழி, இந்தி முதலிய மொழிகளையும் அம்மொழிகளிலுள்ள பற்பலவாய வேதாந்த நூல்களையும் கற்று வருவதற்கும். அவாக் கொண்டிருந்தனர். ஆயினும் நாள் சிக்கல் காரணமாக நல் ஆசானை விட்டுப் பிரிய மனம் இன்றி இன்னாட் கழித்தனர். எனினும் காசிக்குச் செல்லும் அவா மேம்பட்டிடுங்காரணத்தால் ஒரு நாள் குருபரன்பால் எய்தி "அடியேன் காசிக்குச் சென்று ஆரியமும் இந்தியும் கற்று விரைவில் சேர்கின்றேன்" என்று விண்ணப்பிக்க அவரும் பிரிவிற்கு வருந்திப் பின் விடையளித்தத் திருநீறு கொடுக்கப்பெற்று அணிந்து கொண்டு காரைநகர்—மெ. செ. சபாபதி ஐயா முதலிய அன்பர்கள் துணைவரக் காசிக்குச் சென்று கங்கைப்புனலாடி விசுவநாதரைச் சேவித்து ஆங்குறையும் நாள் தவசிரேட்டாகிய ஸ்ரீ கிருஷ்ணசுவாமிகள் என்னும் பெரியாரை அணுகி ஸ்ரீ நிச்சலததாஸர் என்னும்பெரியரால் இந்தி மொழியில் இயற்றப் பெற்றுள்ள விசார சாகரம் என்னும் நூலைத் தெளிவுறக் கேட்டபின் மற்றும் சில நூல்களும் கேட்டுத் தெரிந்து மீண்டும் கோவிலூர்க்குத் திரும்பினர். திரும்புங்காலத்து கோவிலூர் திருநெல்லை நாயகிக்குக் குதிரைவீரர்போல் குதிரை வாகனத்தெழுந்தருளுங்கால் அலங்கரிக்க சட்டை தலைப்பாகை முதலியவற்றை பொற்சரிகை விரவத் தைத்து எடுத்துக்கொண்டு, தனக்குப் பாடம் சொல்லிய ஸ்ரீ. கிருஷ்ணசுவாமிகளிடம் விடை பெறுங்கால் அப் பெரியார் ஸ்ரீ. நிச்சலதாசர் என்னும் பெரியார் 27 லட்சம் கிரந்தங்களில் மூழ்கித் திரட்டி ஆக்கிய விருத்திப் பிரபாதிகாரம என்னும் நூலைக் கையில் கொடுத்து உனது தெளிவுறுமுளத்தில் எளிதிற் புலரும் ஆதலின் நீயே படித்துணருதி என்று வாழ்த்துக் கூறி அனுப்ப மீண்டனர்.

## நூல் வெளியீடு

காசியினின்றும் மீண்டு சென்னைக்கு வந்தபோது சில பகல் அங்கு தங்கியிருந்து வித்தியாரணிமுனிவர் என்னும் பெரியாரால் வடமொழியிலியற்றப் பெற்ற பஞ்சதசி என்னும் நூலின் தமிழ்மொழி பெயர்ப்பு நூலை ஆய்ந்து அச்சியற்றுவித்தனர். இஃதன்றி ஸ்ரீ. பட்டனரி என்பரால் இயற்றப்பெற்ற பகவத்கீதை என்னும் கவி வடிவில் உள்ள நூலுக்கு தெள்ளிய உரை ஒன்று ஆக்கினர். அதில் மதுசூதன சரசுவதி என்பவரால் வடமொழி நூலுக்கு கூடார்த்ததீபிகை என்னும் பெயரோடு எழுதிய வடமொழி வியக்கியானத்திற்கண்ட நுண்கருத்துக்களையும், ஸ்ரீ. சிற்கருவனந்தகிரி சுவாமிகள் என்பவரால் அந்நூலுக்கு வடமொழியியற்றி இருந்தவரும், மதுசூதனி, ஸ்ரீதரி, சங்கரானந்தி முதலிய வியாக்கியானங்களையும் அனுசரித்து அக்கருத்துக்களையும் இயைவித்து, அவர் வைத்த அப்பெயரையே நம் தமிழுரைக்கும் கூடார்த்த தீபிகை என அமைத்து, எழுதி முடித்து வெளி

யிட்டனர். ஈது வடமொழி உரை நூற்கருத்துக்கள் பலவும் இயைவித்து அமைத்தமையின் இவ்வுரை நூல் மற்ற உரைகளிலும் சிறந்து விளங்குவதாயிற்று.

மேலும் நன்னிலம் தாண்டவராய சுவாமிகள் என்னும் பெரியார் தாமே தண்டமிழில் கவி வடிவில் இயற்றிய "கைவல்ய நவநீதம்" என்னும் அருமந்த நூற்கு ஸ்ரீ வியாசூத்திரத்திற்கு ஸ்ரீ சங்கரபாஷியம் போல உரைவகுக்க எண்ணி விசாரசாகரம் என்னும் அரிய நூலின் கருத்துக்களை சாரமாகத் திரட்டி இந்நூலுரையில் அமைவித்து இவ்வுரைக்கு தத்துவார்த்த தீபம் என்னும் பெயரிட்டு வெளியிட்டனர். இவ்வுரை நூல் புலவர்களின் ஆராய்ச்சி அறிவிற்கோர் நல்விருந்தாகும். இன்னும் கவிராஜ சிங்கம் என்னும் பெயரால் உலகு போற்றிவரும் ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றிய வேதாந்தசூடாமணி என்னும்வேதாந்த நூற்கு மறை பொருள் விளக்கம் என்னும் பெயரால் ஓர் உரையியற்றினர். இவ்வுரை நூல்களை அன்றி வசிட்ட முனிவர் ஸ்ரீ ராமபிரானுக்கு உபதேசித்த வசியோக வாசிட்டம் என்னும் அருந்தமிழ் நூலினைமூலத்திற்கியையத்திருத்தியும், திருவேங்கிடநாதர் என்பரால் இயற்றப் பெற்றுள்ள பிபோத சந்திரோதயம் என்னும் நூலினை ஆய்ந்தும் அச்சியற்றுவித்தனர். பஞ்சதசி நீங்கலாக ஏனையவை பிற்காலத்தில் செய்யப் பெற்றவையாம். காசிப் பதியினின்றும் மீண்டபின் தனதாசிரியர் கட்டளைப்படி பிரம கீதைகளுக்கு மூலத்திற்கியைய அரும்பதவுரையும் விரிவுரைச்சாரமும் இயையுற எழுதி முடித்தனர். இவையன்றி இவரால் பார்வையிடப் பட்டதும் வெளியிடப்பட்டதுமான நூல் மேலும் சில உண்டு.

## கோவிலூரில் குரு மூர்த்திகளின் விவேக முத்தி

காசியினின்றும் மீண்டு கோவிலூர் வந்து குருமூர்த்திகளைத் தெரிசித்து அவரது அநுமதிப்படி இரண்டாம்பாட மாணவர்கட்குச் சொல்லியும் நூல் உரை எழுதியும் இருந்துவந்த காலத்து கலியாண்டு 4977க்குச் சரியான தாது வருடம் ஆடி மாதம் நான்காம் நாள் ரோகினி நட்சத்திரத்தன்று ஆசிரியப் பெருந்தகையாகிய ஸ்ரீ. சிதம்பர ஞான தேசிகர் இனிப் பிறவா முடிவான விவேக முத்தி எய்தினர். அப்பெருமானது திருமேனியை எல்லாவிதச் சிறப்புக்கும் அமைய விழாக் கொள்வித்து கோவிலூர் மடம் ஆதிகுருமூர்த்திகளான ஸ்ரீ முத்துராமலிங்க ஞானதேசிகர் சந்நிதி முன் சமாதி செய்வித்துறையும் நாள் அம் மடாலாயத் தலைமைக்குரிய பெருமை முதலியவற்றால் தனக்குத் தகுதியிருந்தும் அம்மடாலயத் தொடர்புடையவர் விருப்பப்படி தனவணிக மரபின்கண் உதித்த ஸ்ரீ இராமசாமி ஞானதேசிகரை அம்மடாலயத் தலைவராய் பீடத்தின்கண் இருத்தி அவ்விடம் விட்டகன்று சிக்கல் பொருள்வைத்த சேரி மடத்திலும், பின்னர், திருவாரூர் திருமழபாடி, புனவாசல் என்னும் இடங்களிலும் சிறிது சிறிது காலம் தங்கியிருந்தனர். புனவாசல் என்னும் ஊரில் தங்கியிருந்தபோது அங்குப் பெரியதோர் மடம் இயற்ற எண்ணி செங்கற் சூளை போட்டு முடிந்த நிலையில் சுவாமிகட்குச் சூலை நோய் வந்தது.

## தில்லைப் பதிக்கு வருதல்

சூலை நோய்க்குத் தக்க மருத்துவர்கள் வாயிலாக மருந்துண்டும் நோய் தீராமையால், தில்லைக்கேகிச் சிற்றம்பலவன் சேவடி வழுத்த வேண்டும் என்னும் எண்ணம் தோன்ற அந்நிலையில் தில்லை வாழ்ந்தணர் வந்து ஸ்ரீ நடராஜப் பெருமான் குஞ்சிதபாதத்திற் சாத்தும் மலர் மாலை தந்து திருநீறு கொடுத்த அளவில் சூலை நோய் குணமடைவதாயிற்று. தில்லைக்கே நினைத்து இருந்தபடி இதனால் விரைவில் புறப்பட்டு தில்லையை அடைந்து அங்குள்ள ஸ்ரீ மௌன ஞானதேசிகர் திருமடத்தில் தங்கியிருந்து நாளும் தனது குருமூர்த்திகளாகிய ஸ்ரீ சிதம்பர ஞானதேசிகர் திருவடிப் பாதுகையைத் தாபித்துப் பூசித்து வணங்கிக் கொண்டு நான்காண்டுகள்வரை இங்குள்ள அடியவர் திருக்கூட்டத்திற்கு வேதாந்த நூல் போதித்துக் கொண்டிருந்தனர்.

## தில்லையில் புது மடாலயம் தாபித்தல்

தனக்கெனத் தனிமடம் ஒன்றும் வேண்டாது தங்கியிருப்பதை அறிந்த காரைக்குடி திருவாளர் மு. ராம. ஆவிச்சி செட்டியார் மடம் இயற்றுவதற்கு வாக்களித்திருந்த 15,000-00-பதினையாயிரம் ரூபாயையும் அவர்

காலமானபின் அவர் மகன்பால் பெற்று அரிய தோர் மடம் இயற்றி கலியாண்டு 4983க்குச் சரியான சுபாநு வருடம் சித்திரை 14ஆம் தேதி குருவாரத்தில் கோவிலூர் மடத்தின் தலைவ ராய் அஞ்ஞான்று இருந்து வந்த ஸ்ரீ இராம சாமி ஞானதேசிகரை வரவழைத்து மடலாயப் பிரவேசம் சிறப்பாக நடத்தி அதில் தனது குரு மூர்த்திகளின் திருவடிப் பாதுகையைத் தாபித்து வழிபட்டு வந்தனர். அன்று கோவி லூர் மடத்தின் தொடர்பு இம்மடத்திற்குத் தொடர்ந்து இருந்து வரவேண்டும் என்னும் நினைவுடன் கோவிலூர் மடாதிபதிகளைக் கொண்டே காசிவாசி சிதம்பர சுவாமிகட்கு பஞ்தசி என்னும் நூலைப் பாடம் சொல்விக்கச் செய்தனர்.

அன்றியும் அம்மடத்திற்குத் தன் ஆசிரியர் கோவிலூர் சிதம்பர ஞான தேசிகர் பெயரைச் சுருக்கியமைத்து கோ. சித. மடம் என்றும் பெயரிட்டு விளங்க வைத்தனர்.

## ஆலயத் திருப்பணியாற்றுதல்

தில்லைக்கு வந்த பின் அம்மடாலாயத்தில் தங்கி வேதாந்த பாடநூல் முறையாக ஓதுவித் தும் பல நூல்கட்கு உரை எழுதி அச்சிடுவித்தும் சில நூல்களைப் பிழையறப் பரிசோதித்து வெளி வரச் செய்தும் நற்பணிகள் பலவாற்றி வந்த தன்றி இறைவர் திருவாலயங்களை புதுப்பித்துத் திருப்பணிகள் செய்தும் செய்விக்கச் செய்தும் வந்தனர்.

சிதம்பரம் ஸ்ரீ நடராஜப் பெருமான் திருவாலயத்துச் சிற்சபைக்குப் பொற்றகடு வேயும் பொருட்டுத் தன்பால் நூல்கற்ற கானாடுகாத்தான் திருவாளர் அருணாசல ஐயா, சிதம்பரஐயா, முத்தையா செட்டியார் முதலிய தனவணிக அன்பர்களுடன் தேவிகோட்டை முதலியவணிகப் பெருமக்கள் வாழும் பதிகளுக் குச் சென்று சேகரித்து பெரும பொருள் கொண்டு சிற்சபைக்குப்பொற்றகடு வேய்ந்தும் மற்றும் பல திருப்பணிகள் செய்வித்தும் கும்பா பிஷேகம் நடத்துவிக்கச் செய்தனர்.

இன்னும் இளமையாக்கினார் கோவில் என்னும் திருப்புலிச்சரமுடையார் திருக் கோயிலை முற்றும் பிரித்துப் புதுப்பிக்க எண்ணி காரைக்குடியில் இளையாத்தக்குடி கோவில், ஒக்கூருடையார் மரபில் பொய் சொல்லாரி மணிக்கண் தோன்றிய சின்னையா செட்டியாரி வாயிலாகத் திருப்பணியை விரிவாகவும் அழகா கவும் இயற்றுவிக்கச் செய்து கும்பாபிஷேகம் நடத்துவித்ததன்றி அவ்வாலத்தின் முன்புள்ள தும் திருநீலகண்ட நாயனார் தம் மனைவி கை யைப் பிடித்து மூழ்கி இளமை பெற்ற திருக்குள முமாகிய யௌவன தீர்த்தத்தினை ஆழப்படுத்தி வெட்டி எடுத்து நாற்புறமும் கருங்கல்லினாற் சுவர் எடுத்து சீருற விளங்கச் செய்தனர்.

இதுவன்றி உய்யக் கொண்டான் சிறுவயல் திரு. சுப்பிரமணியச் செட்டியார் என்பாரை விளித்து அவருக்கு வந்த கண்ணோயையும் திருநீறளித்து மாற்றி அவர்தம் பெருமுயற்சி யால் பர்மா நாட்டிற் சென்று ஈட்டித் தந்த பெரும்பொருள் கொண்டு எறும்பூர் என வழங் கும் இறும்பூதூர் ஸ்ரீ தத்துவராய சுவாமிகள் ஆலயத்தையும் அழகுறத் திருப்பணி செய்து கும்பாபிஷேகமும் நிகழ்த்துவித்தனர். நித்திய பூசைக்கும் ஏற்பாடு செய்து மடம் ஒன்று தாபித்ததன்றி அவ்வலாய பூசகர்கட்கும் தனி இல்லம் கோசாலை திருநந்தனவனம் முதலி யவும் சீர்பெற அமைத்திடச் செய்தனர்.

உய்யக் கொண்டான் சிறுவயல் சுப்பிர மணியன் செட்டியாருக்குற்ற கண்ணோயைத் திருநீறளித்துத் தீர்த்திட்டபோது அதனைக் கண்ட அன்பர் ஒருவர் பின் வரும் பாடலைப் பாடினர் என்ப.

வாடும் சிலவினை நாமிருந்தால் இடர் வந்திடும்.
என்(று)
ஓடும் சில்வினை எங்ஙனஞ் செல்வமென் றேடவழி,
தேடும் சிலவினை மீட்டும் வரேன் என்று செப்பி
அங்கை
போடும் சில்வினை பொன்னம்பலவர் வெண்பூதி
கண்டே

## மாணவர் குழாம்

இவரிடம் பாடம் கேட்ட பல துறவிகள் மற்றும் நகர தனவைசியப் பெருஞ் செல்வர் கள், ஏனையவர்கள் என எண்ணில்லாதவர்

இருந்தனர். இவர்களில் கோவிலூர் மடத்தின் தலைவராய்ப் பிற்காலம் இருந்து வந்த திருக் களர் ஆண்டவர் என்னும் வீரேசகர ஞான தேசிகர், திருவளர் சோலைசுப்பராய சுவாமிகள் ராமானுஜ ஐயாவாள் என அழைக்கப்பெறும் குஞ்சிதபாத சுவாமிகள் என்பவர்கள் குறிப் பிடத்தக்கவர் ஆவார்கள்.

தில்லை நடராசர் தேர்மீது வேறுகிறூர்
தொல்லை வினை யெல்லாம் தொலைக்கவே—
ஒல்லை வடம் பிடிக்க வாருங்கள் வந்துசிவ
லோகத் திடம்பிடிக்க வாருங்கள் இன்று

என்னும் வெண்பாவைப் பாடி மடத்திலுள்ள அன்பர்களை வழிபாட்டுக்கு அழைத்துச் சென்ற னர் என்பது செவவழிச் செய்தியாகும்.

### மறைவு

இவர்கள் இருபத்திரண்டாண்டுகள் அம் மடாலாயத்தின்கண் இருந்து பலமுறை வாசிட்ட பாடம்வரை நடத்தி இருந்தனர் என்ப இவ்வாறு சிலகாலம் இருந்து கலியாண்டு 5006க்குச் சரியான குரோதி ஆண்டு ஐப்பசித் திங்கள் 22-ஆம் தேதி சித்திரை திருநட்சத் திரத்தில் விதேக முத்தி பெற்றனர்.

இவர்கள் திருமேனி இம்மடாலாயத்தின் தென்பாகத்தில் அடக்கம் செய்யப் பெற்றது. அவ்விடத்தே சிவலிங்கத்தாபித்து பின்பு அம் மடாலாயத்தின் தலைவராய் இருந்து வந்த காசி வாசி சிதம்பர சுவாமிகளால் அரிய கருங்கற் றிருப்பணி ஆலயம் அமைக்கப் பெற்றிருந்து வருகிறது.

காசி வாசி சிதம்பர சுவாமிகள் இருப தாண்டுகள்வரை இருந்து விரிவாக விளைநிலங் கள் சேர்த்தனர். மடாலாயத்தில் கீழ்பாலுள்ள இடங்களை விலைக்கு வாங்கிப் பசுமடம், சமை யல் கட்டிடம், அடியவர் கட்டுத்தறி உறையுள் முதலியவும் அமைத்து, மடத்திற்குப் பெரும் புகழ் ஈட்டினர்.

இவர்கள் கலியாண்டு 5026க்குச் சரியான ரக்தாட்சி ஆண்டு தைத் திங்கள் 24ம் நாள் விதேக கைவல்லியம் எய்தினர். இவர்கள் ஆட்சி செய்து வந்த 20 ஆண்டுகள் வரை இவர்கள் செய்துவந்த திருப்பணிகள் பல வாகும். இவர்கட்குச் சீடராய் வந்த துறவி களும் அடியவர்களும் பலராவர். பரஞ்சோதி சுவாமிகள், பரமசிவ சுவாமிகள், சங்கத்து நாராயண சுவாமிகள், திருநீலகண்ட சுவாமி கள், சின்ன சுப்பையா சுவாமிகள் முதலிய பலர் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவார்கள்.

### எறும்பூர் மடம் பஞ்சமூர்த்தி துதி

முத்தியை யுதவும் கணேசனைக் குகனை
முதன்மை பெற்றொளிர் இறும் பூதூர்
நித்திய வடிவாம் நடநவில் இறையை
நிகழ் சிவகாம சுந்தரியை
சித்துருப் பொன்னம் பலவனுர் பணிசெய்
சினகரந் தனிலெழுந் தருளிப்
பத்தர்கட் கருளும் தத்துவராயப்
பனவமா முனிபதம பணிவாம்.

பொன்னம்பல ஞான தேசிகர் திருப்பள்ளி யெழுச்சி என்னும் பத்துப் பாடல்களுடைய அரிய நூலைச் சங்கத்து நாராயண சுவாமிகள் என்பார், குச்சலூர் முத்தைய சுவாமிகள் விருப்பப்படி பாடியுள்ளார்கள். ★

## பதிப்பாசிரியர் குறிப்பு :

சிதம்பரம் மௌன சுவாமிகள் மடம் சிதம் பரத்தில் சபாநாயகர் தெருவில் இருக்கிறது. இது 17-ஆம் நூற்றாண்டு அளவில் ஏற்பட்ட மடம் என்பர். எனவே, காலத்தால் கோவிலூர் ஆதீனத்திற்கு முந்தியது. பொன்னம்பல சுவாமிகள், கோ. சித மாடயைத்தை ஏற் படுத்தியதற்கு முன்னர் கோவிலூர் ஆதீனத் துடன் தொடர்புடைய துறவிகள் பலர்— பொன்னம்பல சுவாமிகள் உள்பட— சிதம்பரத் திற்குத் தல யாத்திரையாகச் சென்றபொழுது மௌன சுவாமிகள் மடத்தில் தங்கி வந்தனர் என்று தெரிகிறது.



# சிதம்பரம் கோ. சித. மடாலயம்

## மடாதிபதிகள்

1. ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகள்
2. ஸ்ரீ காசிவாசி சிதம்பர சுவாமிகள்
3. ஸ்ரீ பரஞ்சோதி சுவாமிகள்
4. ஸ்ரீ பரமசிவ சுவாமிகள்
5. ஸ்ரீ சோமசுந்தர சுவாமிகள்
6. ஸ்ரீ. அரு இராமநாத சுவாமிகள்

(இப்போது மடாதிபதியாக இருப்பவர்கள்)



# சாக்கோட்டை வீரப்ப சுவாமிகள் மடம்

சாக்கோட்டை என்னும் ஊர் புதவயலி லிருந்து ஒரு கல் தொலைவில் உள்ள சிற்றூர். வீர சேகரர் உமையாம்பிகை ஆலயமும் இவ்வூரில் இருக்கிறது. வீரவன புராணமும் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் இயற்றிய ஒரு புராணமும் இவ்வூருக்கு உண்டு.

கோவிலூரி இராமசாமி ஞான தேசிக சுவாமிகளின் மாணவரான வீரப்ப சுவாமிகள் இவ்வூரில் ஒரு லட்சம் ரூபாய்ச் செலவில் வேதாந்த மடம் நிறுவி 22 ஆண்டுகள் நடத்தினார்கள். அவர்களுக்குப் பிறகு முத்துக்கருப்ப சுவாமிகள் வேதாந்தம் கற்பித்தும் மடத்தை விரித்துக் கட்டியும் வந்தாரிகள்.

பின்னர் செல்லப்ப சுவாமிகள் சங்கர சுவாமிகள் ஆகியோர் இந்த மடத்தின் அதிகளாக இருந்தனர்.

---

புதுச்சேரியில் தம்பெயரால் மடம் நிறுவிய ஸ்ரீ வேதானந்த சுவாமிகள் சாக்கோட்டைக்குச் சென்றார்கள். அவ்வூர் மடத்துத் தலைவர் வீரசேகர ஞானதேசிக சுவாமியாவர் வேதானந்த சுவாமிகளைச் சாப்பிடச் சொல்லி அங்கேயே படித்திருக்கக் கட்டளையிட்டார்கள். அவர்கள் படித்ததும் முறைமைப்படி சந்நியாசம் பெற்றதும் சாக்கோட்டையில்தான்.

வீரசேகரசுவாமி ஒழுக்கம், கல்வி முதலியவற்றில் சிறந்து விளங்கிவந்தாரிகள். அவரைக் குருவாகக் கொண்டு வேதானந்த சுவாமிகள் வேதநூல்களை ஐயந்திரிபறப் பாடங் கேட்டார்கள். செல்வரங்கசாமி, முத்துக் கருப்பசாமி முதலியோர் வேதானந்த சுவாமிகளுடன் படித்து வந்தார்கள். படிக்கும்போது வீரசேகர சுவாமிகள், வேதானந்த சுவாமிகளின் அறிவு நுட்பத்தையும் நினைவாற்றலையுங் கண்டு வியப்படைந்தார்கள். ஒரே தினத்தில் புல செய்யுட்களை மனப்பாடஞ் செய்யும் ஆற்றலிருந்தது. இதைக் கண்ட மற்றைய மாணவர்கள் பொறாமை கொள்வதும் உண்டு.

மேலும் வீரசேகர சுவாமி வேதாந்த சுவாமிகளிடம் மிகுந்த அன்புகொண்டிருந்தாரி. சுவாமிகள் தலை மாணாக்கராகத் திகழ்ந்து வந்தார்கள். ஒரு சமயம் வீரசேகர சுவாமிகள் சுவாமிகளைப் பார்த்து நீ எங்குச் சென்றாலும் அத்வைதத்தை விடாதே எனக் கூறினார்கள்.

ஸ்ரீலஸ்ரீ வே. சுப்பைய சுவாமிகள் சித்தாந்த நூல்களையெல்லாம் ஆராய்ச்சி செய்தபின் சாக்கோட்டைக்கு வேதாந்த நூல்களை ஆராய வந்தார்கள். அப்போது வேதானந்த சுவாமிகள் வழி காட்டியாயிருந்து கோயிலூரிற் சென்று படிக்கலாம் எனக் கூறினார்கள். சுப்பைய சுவாமி அப்படிய செய்தாரி.

—ஸ்ரீ வேதானந்த சுவாமிகள் வாழ்க்கை வரலாறு

(வித்துவான் மு. த. வேலாயுதனார்—புதுவை 1962)

# ஜகத்குரு ஸ்ரீ சித்தாரூட சுவாமிகள்
# ஸ்ரீ சித்தாரூட மடம், ஹுப்ளி

கர்நாடக மாநிலம், தார்வார் மாவட்டத்தைச் சார்ந்த ஹுப்ளியில் அவதரித்து, ஸ்ரீ சைலத்தில் தமது ஞான குருவாகிய ஸ்ரீ கெஜதண்ட யோகியிடம் ஞான உபதேசம் பெற்று பின்னர் தேச சஞ்சாரமாக வந்தபொழுது கோவிலூரை அடைந்து கோசாலையில் சேவை செய்து கொண்டு சில காலம் அங்கேயே தங்கியிருந்து அங்கு உள்ள வேதாந்த பாடமுறைகள் அன்றாட விதி முறைகள் அனைத்தும் தெரிந்து கொண்டு, அதன் பின்னர் ஹுப்ளி வந்தடைந்து ஸ்ரீ சித்தாரூடமடம் நிறுவி பொது மக்கட்கும், சிஷ்யர்களுக்கும் வேதாந்த சாரங்களை உபதேசித்து வந்தார். இன்று கர்நாடக மாநிலத்தில் ஷ்ரீ ஸ்ரீ சித்தாரூட மடம் புகழ் வாய்ந்த மாபெரும் ஸ்தாபனமாகத்திகழ்கிறது. ஸ்ரீ சித்தாரூட சுவாமிகள் சமாதி அடைந்து சுமார் 50 ஆண்டுகள் ஆகின்றன

கோவிலூர் மடாலயம் சாதுக்கள் ஹுப்ளி செல்லும்போது அவர்களை சித்தாரூட சுவாமிகள் அன்போடு வரவேற்றுப் பக்கத்தில் வைத்து உபசரிப்பார்கள்.

# அனந்த பத்மனாப சுவாமி மடம், மைசூர்

திருக்களர் ஆண்டவரின் சீடர், கேரளத்தைச் சேர்ந்த அனந்தபத்மனாப சுவாமிகள், திருக்களர் ஆண்டவர் பரிபூரணம் அடைந்த பிறகு, மைசூர் நகரின் எல்லையாக உள்ள சாமுண்டி மலையின் அடிவாரத்தில் ஒரு குகையில் சாந்தா ஆசிரமம் என்ற பெயரில் ஒரு மடத்தை நிறுவினார். குகைக்குள் இருப்பதால் இது குண்டகவி மடம் என்றும் பெயர் பெற்றது.

மூன்றாவது பட்டமாக இப்போது சுவாமி சங்கரானந்தபுரி அவர்கள் மடாதிபதியாக இருந்து வேதாந்தப் பாடங்களைக் கற்பித்து வருகிறார்கள். இங்கு இந்த மடத்தை நிறுவிய அனந்தபத்மனாப சுவாமிகளின் சமாதிக் கோயிலும் அமிர்தவல்லியுடன் கூடிய பாரிஜாதவனேசுவரர் கோயிலும் உள்ளன.

இந்த மடம் இப்போது கர்நாடக மாநிலம் பெங்களூர் கெஞ்சனஹள்ளி ஸ்ரீ கயிலாச ஆசிரமம் மகா சமஸ்தானத்துடன் இணைந்துள்ளது.

# ஸ்ரீ பிரம்மானந்த சுவாமி மடம், பெங்களூர்

கோவிலூர் ஆதீனகர்த்தர் தேனிபட்டி அண்ணாமலை ஞானதேசிகரின் மாணாக்கரான ஸ்ரீ பிரம்மானந்த சுவாமிகள் இந்த மடத்தை சுமார் 35 ஆண்டுகளுக்கு முன் பெங்களூர் 27-ல் ராஜாராம் மோகன்ராய் விரிவு என்ற பகுதியிலுள்ள சீனிவாசா குடியிருப்பில் நிறுவினார்கள், வேதாந்தப் பாடங்கள் கற்பிக்கப்பட்டு வருகின்றன.

இப்போது இந்த மடம் கர்நாடக மாநிலம் பெங்களூர் கெஞ்சனஹள்ளி ஸ்ரீ கயிலாச ஆசிரமம் மகா சமஸ்தானத்துடன் இணைந்துள்ளது.

# ஸ்ரீமத் குட்டையைய சுவாமிகள் மடாலயம்

டாக்டர் சுப. அண்ணாமலை, முதல்வர், தியாகராசர் கல்லூரி, மதுரை.

கோவிலூர் ஆதீனத்தோடு தொடர்புடையதாய் மதுரை மாநகரில் அமைந்தது ஸ்ரீமத் குட்டையைய சுவாமிகள் மடாலயம் ஆகும். இதன் தோற்றமும் சிறப்பும் பற்றி இக்கட்டுரையில் காண்போம்.

மதுரையம்பதியில் தெற்கு வீதியின் தென்பால் 164—ஆம் கதவு இலக்கம் கொண்டு அமைந்துள்ளது ஸ்ரீமத் குட்டையைய சுவாமிகள் திருமடம். இதனை நிறுவியவர் பெயரே இதற்கு அமைந்தது. ஸ்ரீமத் குட்டையைய சுவாமிகள் கி. பி. 1847ஆம் ஆண்டு அளவில் இத்திருமடத்தை நிறுவினர். 25 ஆண்டுகள் அதன் தலைவராக இருந்து மதுரை அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயிலில் பல திருப்பணிகள் செய்து 1872ஆம் ஆண்டு பரிபூரணம் அடைந்தனர். பின்னர் ஸ்ரீ சின்னையா சுவாமிகள், ஸ்ரீ கண்ணப்ப சுவாமிகள், ஸ்ரீ செல்லப்ப சுவாமிகள், ஸ்ரீ சிவானந்த சுவாமிகள், ஸ்ரீ சிதம்பர சுவாமிகள். ஸ்ரீ அருணாசல சுவாமிகள் ஆகிய பெரியோர்கள் முறையே மடாதிபதிகளாக வீற்றிருந்து பரிபூரணம் அடைந்தனர். இப்பொழுது ஸ்ரீ அரு. இராமநாத சுவாமிகள் தலைவராக வீற்றிருந்து வருகின்றார்கள்.

ஸ்ரீ குட்டையைய சுவாமிகள், கோவிலூர் மடாலயத்தில் ஸ்ரீ முத்துராமலிங்க தேசிக சுவாமிகள் சீடராக விளங்கியவர். அவர் பூர்வாசிரமத்தில் தேவகோட்டையில், நகரத்தார் குலத்தில், நகரக் கோவில் ஒன்பதனுள் ஒன்றாகிய இலுப்பைக் குடிக்கோயிலைச் சேர்ந்த 'ஐந்து வீட்டார்' என்னும் குடும்பத்தில், முத்துராமன் செட்டியார் என்பவரின் நான்காவது மைந்தராகப் பிறந்து வளர்ந்தவர் ஆவார். அவருடைய பூர்வாசிரமப் பெயர் ஆதப்பன் என்பது. அவர் இளமையில் கற்பன கற்று, இறைவனை அறியும் ஞான வேட்கை உடையவராய்க் கோவிலூர்க்குச் சென்று, அங்கு வேதாந்த மடாலயம் நிறுவி அருள் ஆட்சி செலுத்திவந்த முத்துராமலிங்க தேசிக ஆண்டவரின் திருவடிகளைப் பணிந்து அவரால் துறவும் பிரம்மோபதேசமும் அளிக்கப்பெற்றுச் சீடராயினர். அங்கேயே குருபணியும் இறை பணியும் ஞானவேள்வியும் இயற்றிக் கொண்டு இருந்தார்.

அந்நாள்களில் ஒருநாள், கோவிலூர் ஆண்டவரைத் தரிசிக்க வந்த வேம்பத்தூர்ப் புலவர்கள், 'சிவரகசியம்' என்ற நூலில் கூறியவாறு 25 மூர்த்தம் வைப்பது சிறந்த சிவப் பணி என்று கூறினர். அதைக் கேட்டருளிய ஆண்டவர், அச் சிவப் பணியை மதுரையம் பதியில் செய்ய வேண்டும் என்று திருவுள்ளத்து அடைத்துப் புலவர்களிடம், "இது என்ன பிரமாதம்? நமது குட்டையனை அனுப்பினாலும் செய்து விடுவான்" என்று கூறித் தம் சீடர் ஸ்ரீ குட்டையைய சுவாமியை அழைத்து, அதனைப் பணிக்க, அவரும் தம் ஞானாசிரியரின் பணியைத் [தலைமேற் கொண்டு, மதுரையம் பதிக்குப் புறப்பட்டார்.

மதுரையில் தெற்குவெளி வீதியில் திருமடம் நிறுவினார். அங்குத் தலைவராக வீற்றிருந்து, ஞானவேட்கையுடன் தம்மை வந்தடையும் சீடருக்குப் பிரம்மோபதேசம் செய்த வண்ணம் மதுரைத் திருக்கோயில் திருப்பணியை மேற்கொண்டனர். ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானே தம்மைத் திருப்பணி செய்ய அருளாணையிட்டு அழைத்ததாக உணர்ந்து, மிக்க ஆர்வத்துடன் சிறப்பாகத் திருப்பணியைத் தொடங்கி, நந்தி மண்டபத்

தில் விசித்திரக்கால் விசேடச் சித்திர வேலை, அம்மை, அப்பர் மூலஸ்தான விமானங்கட்குப் பொன் தகடு வேய்தல், கொடி மரத்திற்குப் பொற்கவசம் அமைத்தல், சுவாமி கோயில் இரண்டாம் பிராகாரத்தில் கல் தள வரிசை அமைத்தல், ஆடிவீதி முன்புறம் கல் தள வரிசை அமைத்தல் முதலிய திருப்பணிகளைச் செய்தனர். சுவாமி சந்நிதியில் கொடிமரத்தைச் சூழச் சிற்பக் கலை எழிலுடன் அமைந்துள்ள மண்டபமே நந்தி மண்டபம். இது நகரத்தார் செய்த திருப்பணியில் அமைந்ததாகும். இதற்குத் தூண்டுகோலாக இருந்து, நகரத்தார்களுக்கு வழிகாட்டியாகவும் அமைந்து, இம் மண்டபத்தை உருவாக்கியவர் ஸ்ரீ குட்டையைய சுவாமிகளே ஆவர். இப்பொழுது இம் மண்டபத்தைக் கம்பத்தடி மண்டபம் என்று அழைப்பர். இந்த இடத்தில் முன்பு கிருஷ்ணப்ப நாயக்கர் காலத்தில் நான்கு தூண்கள் கட்டிய அளவில், துவாரபாலருடன் கூடியதாக மட்டுமே இருந்தது. 1877 ஆம் ஆண்டு நகரத்தார்கள் பொருள் உதவி செய்து, எட்டுத் தூண்கள் புதியனவாகச் சிற்பக் கலையெழில் பொங்க அமைத்து, அவற்றின் மேல் கருங்கல் விதானம் அமைத்து, இடைவெளியை நிரப்பி மண்டபம் உருவாக்கினர். இதற்குக் காரண புருடராக விளங்கியவர் ஸ்ரீ குட்டையைய சுவாமிகளே ஆவர்.

இந்த மண்டபத்தில் 25 மூர்த்திகள் உள்ளன. அவையாவன:

1. கயிலாசரூடர்
2. சந்திரசேகரர்
3. இடபாந்திகர்
4. இலிங்கோற்பவர்
5. சாமதகனர்
6. நடராசர்
7. சுகாசனர்
8. காலசம்மாரர்
9. மார்க்கண்டேயர்
10. சோமசுந்தரர்
11. கலியாண சுந்தரர்
12. திரிபுராந்தகர்
13. கங்கர நாராயணர்
14. அர்த்த நாரீசுவரர்
15. இடபாரூடர்
16. ஏகபாத மூர்த்தி
17. சக்ரதரர்
18. சலந்தரானுக்கிரர்
19. தட்சிணா மூர்த்தி
20. கஜசம்மாரர்
21. சண்டேசானுக்கிரர்
22. சோமசுந்தரர்
23. கிராதார்ச்சுனர்
24. உருத்திரர்
25. பிட்சாடனர்

ஸ்ரீ சுவாமிகள் மதுரைக் கோயிலில் திருப்பணிகளை முடித்து, கும்பாபிடேகம் செய்து வைத்தருளுமாறு கோவிலூர் மடாலயத்தில் அப்பொழுது தலைவராக விளங்கிய ஸ்ரீ கருணாநிதி சுவாமிகளை வேண்டிக் கொண்டனர். அவர்கள் ரெங்கூனுக்குத் தந்தி அனுப்பி, பர்மாவெங்கும் இருந்த நகரத்தார் பெருமக்கள் ஒவ்வொருவரிடமும் ஒரு மாத ஊதியம் நன்கொடையாகத் தருமாறு குறிப்பித்து, அவ்வண்ணமே பெற்றுத் தாமே முன் நின்று மதுரைத் திருக்கோயில் கும்பாபிடேகத்தை நிறைவேற்றியருளினர். ஸ்ரீ குட்டையைய சுவாமிகள் இத்திருப்பணிகளை முற்றுவித்ததோடு, ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமான் அஷ்டமிப்பிரதட்சிணத்தில், தெற்குவெளி வீதிக்கு எழுந்தருள்வதற்கு என வெள்ளி இடப வாகனம் செய்வித்துத் திருக்கோயிலுக்கு அளித்தனர். சுவாமிகள் இத் திருப்பணியில் பல லட்சம் ரூபாய்களை ஈடுபடுத்தினர்.

மதுரைத் திருக்கோயிலில் மேலும் எஞ்சிய திருப்பணிகளைச் செய்யுமாறு சுவாமிகள், அமராவதிபுதூர் வயிநாகரம் குடும்பத்தினரை வேண்டிக் கொண்டனர். அவர்கள் திருக்கலியாண மண்டபம், ஆடிவீதிக் கல் தள வரிசை, வடக்குக் கோபுர நிறைவு முதலிய திருப்பணிகளை மிகவும் சிறப்பாக அந்நாளில் 25 இலட்ச ரூபாய் செலவில் செய்து அமைத்தனர்.

ஸ்ரீ குட்டையைய சுவாமிகள் வேதாந்த நூல்களில் விற்பன்னர் ஆவார். அவர் மதுரைத் திருமடத்தில் வீற்றிருந்தபோது பிரம்மவித்தாய், பல முமுட்சுக்களுக்குப் பிரம்ம வித்தையை உபதேசித்துக்கொண்டு அருளாட்சி செய்தனர். அவரது ஆட்சிக் காலம் காலயுக்தி வருடம் (கி. பி. 1847) முதல் ஆங்கீரச

வருடம் (1872) வரை ஆகும். சுவாமிகள் ஆங்கிரச ஆவணி 5ஆம் நாள் திங்கட்கிழமை, கிருஷ்ண பட்சம், பிரதமை திதி, சதயநட்சத்திரத்தில் விதேக கைவல்யமாகிய பிரம்மப் பிராப்தி அடைந்தனர்.

நாயக்க மன்னர்களின் வழித் தோன்றலான அன்பர் ஒருவர், சுவாமிகளின் சமாதியினை அமைக்கத் தம் தோட்டத்தை வழங்கினார்.

ஸ்ரீ குட்டையைய சுவாமிகள் திருமடத்தின் மூன்றாவது தலைவர் ஸ்ரீ கண்ணப்ப சுவாமிகள், 16 ஆண்டுகள் பட்டத்தில் வீற்றிருந்து, ஒரு இலட்ச ரூபாய் செலவு செய்து திருமடத்தையும் ஸ்ரீ குட்டையைய சுவாமிகளின் சமாதிக் கோயிலையும் கல் திருப்பணியாக அமைத்தனர். திருமடத்தில் துறவிகளுக்கு உணவிற்காக, குருந்தனி, சம்பக்குளம் என்ற இரு சிற்றூர்களில் உள்ள நிலங்களை விலைக்கு வாங்கினர்.

ஸ்ரீ மீனாட்சி அம்மைக்கு நாள்தோறும் நிகழும் அர்த்தசாமக் கட்டளையில் மூக்குத்தி மாலை ஸ்ரீ குட்டையைய சுவாமிகள் மடாலயத்திலிருந்து அனுப்பி அணிவிக்கப்படுகிறது.

ஸ்ரீ அருணாசல சுவாமிகள் 11-12-1970இல் பரிபூரணம் அடைந்த பின் இப்பொழுது ஸ்ரீ அரு. இராமநாத சுவாமிகள் அதிபதியாக இருந்து திருமடத்தைப் பரிபாலித்து வருகின்றார்கள்.

## பதிப்பாசிரியர் குறிப்பு

மதுரைக் கோயிலில் பார்ப்போர் மனத்தைக் கொள்ளை கொள்ளும் வகையில் சிற்பங்கள் நிறைந்த பகுதி, கட்டுரையில் குறிக்கப் பெற்றிருக்கும் கம்பத்தடி மண்டபமே.

கோவிலூர் ஆதீனகர்த்தர் விரும்பிய வண்ணம் உருவான இந்தக் கலைக்கூடம், சுவாமி சந்நிதியில் இரண்டாம் சுற்றில் உள்ளது. நந்தி மண்டபம், பலி பீடம் [பிற்காலத்தில் தங்கத் தகடு போர்த்தப்பட்ட] கொடி மண்டபம் ஆகியவற்றை 1494-ல் கிருஷ்ண வீரப்ப நாயக்கர் என்ற மதுரை மன்னர் அமைத்தார். இவற்றை நகரத்தார் பிரித்து, திருத்தியமைத்து, இவற்றைச் சுற்றி, உயரமான எட்டுக் கருங்கல் தூண்களை நிறுத்தி அவற்றில் சிவபெருமானின் பல்வகைத் தோற்றங்களைக் கவினுறு சிற்பங்களாக வடித்தனர்.

மீனாட்சியம்மன் திருமணக் கோலத்தைக் சித்திரிக்கும் சிற்பமாக இப்பொழுது எங்கும் புகழுடன் பரவியுள்ள காட்சி, இங்கேதான அமைந்துள்ளது. அதில் மணமகன் கோலத்தில் நிற்கும் சிவபெருமானின் எடுப்பான தோற்றமும், மணமகள் கோலத்தில் நிற்கும் அங்கயற்கண்ணியின் நாணமும் புன் சிரிப்பும் இயல்பான ஆண் பெண் மனநிலைகளைக் காட்டுவதோடு, மண நாளில் இவ்வாறு இருப்பீர் என்று வருங்கால மண மக்களுக்குக் கற்பிக்கும் ஒளிக் காட்சிப் பாடமாகவும் உள்ளன.

ஒவ்வொரு தூணிலும் நாற்புறங்களிலும் சிற்பங்கள் வடிக்கப் பெற்றுள்ளன. திருமணக் காட்சி தரும் தூணில் சோமசுந்தரரைக் காணுகிறோம்; தாரகாட்சன், கமலாட்சன், வித்யுன் மாலி, என்னும் முப்புர அசுரர்களையும் சிவ பெருமான் எரித்தார் என்பதை நினைவூட்டும் சித்திரத்தையும் காணுகிறோம்.

வலப் புறமாக வந்தால் இரண்டாவது தூணில் மார்க்கண்டேயனுக்காகக் காலனைக் கொல்லும் காட்சியே வெளிப்புறத்திலும், சுக ஆசனர் திருவுருவத்தை உட்புறத்திலும் காணலாம்.

அடுத்த தூணில் நடராசரும் காமதகனரும் உள்ளனர். நான்காவது தூணில் சந்திரசேகரர், காளைவாகனத்தில் சிவபெருமான், மாலடி காணாச் சிவபெருமான், இராவணன் கயிலையைத் தூக்கும் காட்சி ஆகியவை இடம்பெற்றுள்ளன.

இனி, வட வரிசையில் உள்ள தூண்களைக் காணலாம். சந்நிதிக்கு அருகேயுள்ள தூணில் சங்கர நாராயணர், அர்த்த நாரீசுவரர், ரிஷபாரூடர், ஏகபாத மூர்த்தி, சக்ரதரர் முதலிய மூர்த்திகளின் வடிவங்கள் உள்ளன.

அடுத்த தூணில் வெளிப்புறத்தில் சந்திர அனுக்கிரகரும் உட்புறத்தில் தட்சிணா மூர்த்தியும் உள்ளனர்.



அ. சொ. அண்ணாமலைச் செட்டியார்

அவர்கள்

அடுத்த தூணில் வெளிப்புறத்தில் யானைத் தோல் போர்த்திய சிவபெருமானும் (கஜ சம்மாரர்), உட்புறத்தில் சண்டேசுவரர்க்கு மாலையிடும் சிவபெருமானும் சித்திரிக்கப் பெற்றுள்ளனர்.

எட்டாவது தூணில் சோமாஸ்கந்தர், கிராத அர்ச்சுனர், உருத்திரர், பிட்சாடனர் முதலிய மூர்த்திகளின் கோலங்கள் இருக்கின்றன. இதன் அடியில் நவக்கிரகச் சிற்பங்கள் உள்ளன. திருமாலின் பத்து அவதாரக் காட்சிகள் தூண்களின் உட்புறங்களில் அமைக்கப் பெற்றுள்ளன.

சிவபெருமானுக்கு உரிய பல மூர்த்தங்கள் இந்த எட்டுத் தூண்களிலும் அழகாக வடிக்கப் பெற்றிருக்கின்றன. ஒவ்வொரு மூர்த்தமும் ஒரு கதையைச் சொல்லுகிறது. மேலும், இம் மண்டபத்தில் பிட்டுக்கு மண் சுமத்தல், நாரைக்கு முத்தி கொடுத்தல் போன்ற திருவிளையாடல் நிகழ்ச்சிகளும் காட்டப் பெற்றுள.

ஒரு தூணில் யானையின் தலையும் பெண்ணின் உடலும், புலியின் காலும் கொண்ட சிற்பம் உள்ளது. இம் மண்டபத்தின் கலை நயங்களைக் கண்டின்புறக் கண்கள் பல வேண்டும்.

இவ்வளவு நுண்ணிய சிற்பங்களைப் படைத்தவர்களால் ஹளேபேடு, பேலூர், கொனரக் போன்ற விரசமான காட்சிகளையும் வடித்திருக்க இயலும்; ஆனால் இம் மண்டபம் கோவிலூரித் துறவிகளின் மேற்பார்வையில் அவர்கள் ஆணையின்படி அமைக்கப் பெற்றது அல்லவா?

The Kambattadi Mandapam is one of the greatest triumphs of sculptural skill. The elaborate carvings here evoke wonder and admiration

—KNOW MADURAI
(A publication of T.V.S.)

# காளையார் கோவில் மடம்-சில நினைவுகள்

எல்லாரும் காளையார் கோயில் திருநாளைக்குப் போவோம்...

நான் சுப்பையா சாமியார் மடத்திற்குச் சென்றேன். அன்று பௌர்ணமி; அங்கே துறவிகள் மொட்டை அடித்துக் கொண்டனர். நானும் தலையை நீட்டினேன். வழுக்கை மொட்டையானேன். பிறகு ஒரு செட்டியார் துறவிகளுக்கு ஆடை தந்தார். எனக்கும் ஒரு காஷாயத் துண்டு கிடைத்தது; உடுத்திக் கொண்டு சுப்பையா சாமியாரை வணங்கினேன். அப்படியே மடத்தில் தாயுமானுர் கைவல்யம் படித்துக் கொண்டிருக்க விரும்பினேன். ஆனுல் குட்டிச்சாமி வேடம் இரண்டே நாள். தகப்பனுர் திருநாளுக்கு வந்தார். நான் சுப்பையா சாமியாரின் வேதாந்தப் பிரசங்கத்தில் சொக்கியிருந்த போது பார்த்தார். திடுக்கிட்டார். என்னை வெளியே இழுத்து வந்தார்; கேட்டார்; காரணம் சொன்னேன். மடிசஞ்சியிலிருந்து ஒரு வேட்டியை எடுத்துத் தந்தார். காவியைக் களைந்து வெள்ளையணிந்தேன். சுப்பையா சாமியார் "இன்னும் போக வேண்டும். அதற்குத் திருவருள் கூடும்போது ஆகும்" என்றுர். பிற்காலம் திருவாரூரிலும் என்னைத் துறவுக் கோலத்தில் பார்த்துப் பழைய கதையை நினைவுறுத்தினுர் சுவாமிகள்.

சுவாமி சுத்தானந்த பாரதியார்.



# பிரம்மானந்த சுவாமிகள் மடம், மதுரை

கோவிலூர் ஆண்டவரின் மாணாக்கரான அரசப்ப சுவாமிகளின் சமாதி ஆலயம், மதுரையில் தெற்கு வெளிவீதி 164ஆம் எண் உள்ள கட்டிடத்துக்குத் தென்பால் இருக்கிறது. அரசப்ப சுவாமிகளுடைய மாணாக்கரான பிரம்மானந்த சுவாமிகள் கி. பி. 1850 அளவில் மதுரை தெற்கு வாசலுக்கு அப்பால் அருப்புக் கோட்டைச் சாலையில் ரயில்பாதை அருகே ஒரு மடாலயத்தை நிறுவினார்கள்.

பிரம்ம நாமாவளி சுலோகம், பஞ்சதசி பதவுரை, பிரம்மானந்த அநுசந்தான யுக்தி ரத்நாகரம் முதலிய நூல்களை பிரம்மானந்த சுவாமிகள் ஆக்கியுள்ளார்கள்.

இந்த மடாலயத்தில் அதிபர்களாக இருந்தவர்கள்:

1. பிரம்மானந்த சுவாமிகள்
2. பாலானந்த சுவாமிகள்
3. கந்த பிரம்மானந்த சுவாமிகள்
4. சங்கரானந்த சுவாமிகள்
5. அத்வைதானந்த சுவாமிகள்
6. சோமசுந்தர சுவாமிகள்
7. சின்மயானந்த சுவாமிகள்

1977 ஜுன் திங்களில் சின்மயானந்த சுவாமிகள் பரிபூரணம் அடைந்த பிறகு, காசி வாசி ஸ்ரீ சுவாமி யோகானந்த கிரி சுவாமிகள் இந்த மடாலயத்தில் தலைமையேற்று பட்டத்தில் இருந்து வருகிறார்கள். இவர்கள் பல்லாண்டுகள் காசியில் ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திரத்திலே தங்கி சமய சாத்திரங்களையும் வடமொழியையும் முறையாகப் பயின்றிருக்கிறார்கள்.

இப்போது சத்சங்கம் நடத்தியும் வேதாந்த பாடங்களைக் கற்பித்தும் வருகிறார்கள். புது மாகாளிப்பட்டிச் சாலையில் சங்கர ஆசிரமம் நிறுவி அதில் ஆதி சங்கரருடைய வெண்பளிங்குப் படிமத்தை நிலை நாட்டியுள்ளார்கள்.

### மானாமதுரை நாராயண சுவாமிகள் மடம் :

கோவிலூர் மடாதிபதி சிதம்பர சுவாமிகளின் மாணவரான நாராயண சுவாமிகள் மானாமதுரையில் துறவியாக இருந்து பிச்சை ஏற்று வந்தார்கள். 14 ஆண்டுக்காலம் மானாமதுரையில் இருந்து அங்கேயே 1901இல் பரிபூரணம் அடைந்தார்கள். நாராயண சுவாமிகளின் மாணவர் அங்கு அவ்வூரில் ஒரு மடம் அமைத்து அதற்குத் தம் ஆசிரியரின் பெயரை இட்டார். அவருக்குப்பின் கோவிலூர் மடாதிபதி திருக்களர் ஆண்டவரின் மாணவரான சதாசிவ சுவாமிகள் 1912 முதல் மடாதிபராக இருந்தார்கள்.



# ஸ்ரீ தத்துவராய சுவாமிகள் மடம், எறும்பூதூர்

தென் ஆர்க்காடு மாவட்டத்தில் விருத்தாசலத்திற்கும் சேத்தியாத்தோப்புக்கும் இடையே உள்ள சிற்றூர் எறும்பூதூர். இது இப்போது இரும்பூர் என்று மக்கள் வழக்கில் குறிப்பிடப்படுகிறது. எறும்பூர் என்றும் சொல்லுகிறார்கள்.

சிதம்பரத்திற்கு மேற்குத் திக்கில் உள்ள இவ்வூரில் சில நூற்றாண்டுகளுக்குமுன் ஸ்ரீ சொருபானந்த சுவாமிகள், ஸ்ரீ தத்துவராய சுவாமிகள் என்ற பெயர்களைக் கொண்ட இரு பெரும் ஞானிகள் இருந்தனர். அவ்விருவருள் ஸ்ரீ சொருபானந்த சுவாமிகளிடம் அநுக்கிரகம் பெற்று வடமொழி தென்மொழி இரண்டிலும் வல்லுநராய், சித்தராய், ஞானியாய் விளங்கி விதேககைவல்யம் அடைந்தவர் ஸ்ரீ தத்துவராய ஞான தேசிக சுவாமிகள்.

தத்துவராய சுவாமிகள், ஈசுவர கீதை பிரமகீதை என்னும் நூல்களை வடமொழியிலிருந்து தமிழில் செய்யுள் வடிவாய் இயற்றியும், குருபக்தியின் மிகுதியினால் அடங்கன் முறை (தாலாட்டு முதலிய பதினெட்டுப் பிரபந்தம்) பாடுதுறை என்னும் இரு நூல்களையும் இயற்றியுள்ளார்.

இன்னும் சில வேதாந்த சாத்திரங்களையும், சித்தாந்த நூல்களையும் தத்துவராய சுவாமிகள் தாமாகவே இயற்றியுள்ளார்கள். பல நூல்களிலிருந்து பெருந்திரட்டு குறுந்திரட்டு என்ற பெயர்களில் திரட்டு நூல்கள் இரண்டை உலகுக்கு வழங்கியுள்ளார்கள். இந்நூல்கள் முழுவதையும் படித்துப் பார்த்து இவற்றின் நயங்களைச் சுவைத்து மகிழ்ந்த சிதம்பரம் கோ. சித. மடாலயத்து அதிபர் ஸ்ரீ பொன்னம்பல ஞான தேசிகர், ஸ்ரீ தத்துவராய ஞான தேசிக சுவாமிகளின் அருமை பெருமைகளை நன்கு உணர்ந்தார். ஸ்ரீ தத்துவராய ஞானதேசிக சுவாமிகளின் சமாதிக் கோயிலின் முன் மண்டபம் பிராகார மண்டபம், பாவுக்கல் வரிக்கல் முதலியவற்றை வெள்ளாற்றில் அணை கட்டுவதற்கு அக்காலத்தில் ஆங்கிலேயே அரசு எடுத்துக்கொண்டுபோனபோது அதை பொன்னம்பல சுவாமிகள் ஓரளவு தடுத்து நிறுத்தினார்கள். சுவாமிகள் இவ்வாறு தடுக்கும் போது கருநாகம் இருந்து சீற, ஆங்கிலேய ஆட்சியாளர்கள் அந்த முயற்சியை அந்த அளவில் கைவிட்டனர்.

பொன்னம்பல சுவாமிகளுக்கு, தத்துவராயரின் நூல்களில் ஈடுபாடு இருந்ததால் அவருடைய சமாதி எங்கு உள்ளது என வினவி, எறும்பூருக்குச் சென்று பார்த்தபோது மேற்கண்டவாறு சமாதிக் கோயில் அழிந்தும், அழிக்கப்பட்டும், இலைக்கள்ளி புதர்களுக்குள் மறைந்தும் இருப்பதைக் கண்டார்.

அதைத் திருப்பணி செய்ய முடிவு செய்தபோது உய்யக்கொண்டான் சிறுவயல் சுப்பிரமணியன் செட்டியார் என்பார் கண் நோய் வாய்ப் பட்டிருந்தார். அறுவை மருத்துவம் செய்யாமலே பொன்னம்பல சுவாமிகள் அருளால் மேற்படி சுப்பிரமணியன் செட்டியார் மீண்டும் கண்ணொளி பெற்றார். அவர் பர்மாவுக்குச் சென்று தாமே பெரும் பொருள் ஈட்டி அதைப் பொன்னம்பல சுவாமிகளுக்கு அனுப்பினார். சுவாமிகள் இவ்வாறு செட்டியார் பர்மிய நாட்டிலிருந்து அனுப்பிய பணத்தைக் கொண்டு தத்துவராயருக்குக் கருங்கற் கோயில் கட்டி முடித்தார். கோயில் காரியங்கள் முட்டின்றி நடைபெறுவதற்காக, அவ்வூரில் விளை நிலங்களும் வாங்கினார். ஆடி மாதத்துச் சதய நட்சத்திரத்தில் தத்துவராயர் குருபூசை சிறப்பாக நடைபெறுவதற்கு ஏற்பாடுகளையும் செய்தார்.

கர்ப்பக்கிரகம், விமானம், அர்த்த மண்டபம், நந்தி மண்டபம், பிராகார மண்டபம் ஆகியவற்றைக் கட்டி முடித்து ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகள் கி. பி. 1895 அளவில் ஸ்ரீ தத்துவராய ஞான தேசிக சுவாமிகளின் அதிஷ்டானக் கோயிலுக்குக் கும்பாபிஷேகம் செய்து வைத்தார்கள். அதன் பிறகு, கோயிலை கோவிலூர் ஆதீனத்தில் ஒப்படைத்தார்கள். அதிஷ்டானத்துக்கு அன்று முதல் நித்திய பூஜை. குருபூஜை முதலியன கோவிலூர் ஆதீனத்தின் வாயிலாக நடைபெற்று வருகின்றன.

மேற்படி கோயிலில் விமானம், முன் மண்டபம், பிராகார மண்டபங்களில் சில பகுதிகள் ஆகியவை பழுதுபட்டிருந்ததைச்சீர்செய்து சர்வதாரி ஆண்டு ஆனித் திங்கள் 11-ஆம் நாள் (24—6—1948) கோவிலூர் ஆதீனம் எட்டவது குருமூர்த்தியான ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஞான தேசிகர் அருளாட்சியில் அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் செய்விக்கப்பட்டது.

சிதம்பரம் கோ. சித, மடாலயத்தார் தத்துவராய சுவாமிகள் அருளிச் செய்த பாடுதுறை என்னும் அரிய நூலை 1953-ல் வெளியிட்டுள்ளார்கள். இந்நூலில் சுவாமிகளின் சரித்திரச் சுருக்கம் உள்ளது.

கோவிலூர் ஆதீனம் ஒன்பதாவது குருமூர்த்திகளான ஸ்ரீலஸ்ரீ இராமநாத ஞானதேசிகர் அவர்களுடைய அருளாட்சியில், ஸ்ரீ தத்துவராய சுவாமிகளின் அதிஷ்டானம் நன்முறையில் பாதுகாக்கப்பெற்று குருபூசை முதலியன மிகச் சிறப்பாக நடத்தப்பட்டு வருகின்றன.

# யாழ்ப்பாணம் மகாவித்துவான் ஆறுமுக நாவலர் அவர்களும் கோவிலூர் மடமும்

கோவிலூர் மடத்தில் இரண்டாவது தலைவராகப் பட்டம் ஏற்று விளங்கியவர்கள் அருணாசல ஞான தேசிக சுவாமிகள். இவர் களைத் துறவு ஆண்டவர் என்ற பெயரால் குறிப்பிடுவது வழக்கம்.

அடைமொழி இன்றி, கோவில் என்ற சொல்லால் சுட்டப்படும் தலம் சிதம்பரம். அத்தலத்தில் துறவு ஆண்டவர் மிக்க ஈடுபாடு கொண்டு பல ஆண்டுகள் அங்குள்ள கேணி மடத்தில் தங்கியிருந்தார்கள். சின்னத் துறவு சுவாமிகளும் உடன் இருந்தார்கள்,

யாழ்ப்பாணம் மகாவித்துவான் ஆறுமுக நாவலர் (1822–1872) அப்போது சிதம்பரத் திற்கு தல யாத்திரை வந்திருந்தார். நடராசப் பெருமான் வீதி உலா நிகழ்ந்தபோது கோவிலூர் சுவாமிகள் இருவரும் அடியார் குழுக்களுடன் நின்று நடராசப் பெருமானை வழிபட்டுக் கொண்டிருந்ததை ஆறுமுக நாவலர் கூர்ந்து கவனித்தார். அவர்களைத் தொடர்ந்து அவரும் கேணி மடத்துக்குச் சென்று அங்கு அவர்களை வணங்கினார்.

'தாம் யார்?' என்று துறவு சுவாமிகள் வினவ,

'யான் வசிப்பது யாழ்ப்பாணத்து நல்லூரில். என் பெயர் ஆறுமுகம். நடராசப் பெருமானை வழிபடும் பொருட்டு இங்கு வந்தேன். என்று ஆறுமுக நாவலர் மறுமொழி கூறினார்.

பிறகு இவரைப்பற்றி விவரமாக அறிந்து' துறவு ஆண்டவர் தக்க மரியாதை செய்தார்கள். ஆறுமுக நாவலர் நாள்தோறும் கேணி மடத்திற்கு வந்து போகலாயினர். ஒவ்வொரு நாளும் பிற்பகல் 3-மணி முதல் கந்த புராணத்தை எடுத்துச் சொல்ல ஏற்பாடாயிற்று.

ஒரு நாள் துறவு சுவாமிகள், ஆறுமுகத்திடம் 'இன்று முதல் புராணங்களையே எடுத்துச் சொல்லி மக்களிடம் அதை பரவச் செய்ய வேண்டுமேயன்றிப் பாதிரிமார்களுக்குப் பாடம் சொல்லலாகாது' என்று ஆணையிட்டார்கள்.

அவ்வாறே, பாதிரிமார் தொடர்பை நிறுத்திப் புராணச் சொற்பொழிவுகளை நிகழ்த்துவதிலும் சைவ, ஆகம நூல்களை இயற்றுவதிலும் ஆறுமுக நாவலர் ஈடுபட்டார்.

# இளையான்குடி அற்புதம்

சோ. சிவபாதசுந்தரம்

சேக்கிழார் அடிச்சுவட்டில் சென்று, அறுபத்து மூவர் நடந்த வழிகளைத் தேடியபோது, இளையான்குடி மாறநாயனருடைய ஊரைப் பற்றிய சரியான தகவல் கிடைக்கவில்லை. தற்செயலாகப் பழைய சஞ்சிகைகள் சிலவற்றைப் பார்த்தபோது, 1910-ம் ஆண்டு பிப்ரவரி மாதம் வெளிவந்த 'வித்யாபானு' இதழில் மதுரை கந்தசாமிக் கவிராயர் எழுதியிருந்த ஒரு குறிப்பு உதவியது.

பரமக்குடிக்குச் சற்று வடகீழ்த் திசையில் ஏழு மைல் தூரத்தில் இளையான்குடி என்ற ஓர் வளநகரம் இருக்கிறது. இதுவே இளையான்குடி மாறநாயனர் வசித்திருந்த இடமென்பதற்கு கீழ்க்கண்ட சான்றுகளுள்ளன. 1. இவ்வூரிலே இம் மாறநாயனர் குடியில் தாயத்தார்களான வம்சத்தார்கள் வசிக்கிறார்கள். 2. முளை வாரியமுதளித்த நாற்றங்கால் என்ற பெயரால் வயல்நில முள்ளது. ஆயிரம் வருஷங்களுக்கு முற்பட்டு வழங்கி வருகிறதாம். 3. அக்கால முதல் இறைப்பொருள் வாங்காது சர்வமான்யமாகவுள்ளது நிலம் 4. பழைய சிவாலயம் இப்போது (1910) இலமாயுள்ளது. 5. மாறன் பாண்டியநாமம்.''

இந்தக் குறிப்பை வைத்துக் கொண்டு பரமக்குடிக்குப் பக்கத்திலுள்ள இளையான் குடியைத்தேடி, மதுரையிலிருந்து, சிவகங்கைக்குச் சென்ற மோட்டார் பஸ் ஒன்றில் ஏறிச் சென்றேன். பெரும்பாலும் இஸ்லாமிய மக்கள் வசிக்கும் ஊர் இது. மலாயாவிலும் மற்றும் தேசங்களிலும் சம்பாதித்த பொருளைக் கொண்டு இவர்கள் நல்ல அழகான வீடுகள் கட்டி வைத்திருக்கிறார்கள். ஊரின் மத்தியில் ஒரு சிவன் கோயில் சந்நிதியின் இடது பக்கத்தில் மாறநாயனருக்கு ஒரு சிறு கட்டிடம் அமைத்திருக்கிறார்கள் 1910-ல் இலமாயிருக்கிறது. என்று கந்தசாமி கவிராயர் எழுதியிருந்தார். ஆனால் இப்போது நான் போன சமயத்தில் நல்ல அழகான முறையில் கோயில் புனருத்தாரணம் செய்யப்பட்டிருந்தது. கோயில் மண்டபத்தில் ஒரு நாதஸ்வரக்காரரும் குருக்களும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். நாதஸ்வரக்காரருக்குப் பல விஷயங்கள் தெரியும். அவர் சொன்னார். "இந்த ஊரிலே குமாரசாமிப்பிள்ளை என்று ஒருவர் இருக்கிறார். ஆண்டுதோறும் அவர்தான் மாறநாயனருக்கு குருபூஜை நடத்துபவர். அவர் மாறநாயனர் வம்சத்தில் வந்தவர்தான்'' என்று சொல்லி குமாரசுவாமிப்பிள்ளை வசிக்கும் வீட்டைக் காண்பிக்க ஒரு பையனையும் என்னுடன் அனுப்பி வைத்தார். ஆனால் அந்தச் சமயம் குமார சுவாமிப்பிள்ளை ஊரில் இல்லை. பக்கத்து வீட்டில் இருந்த ஒருவர் கொடுத்த தகவலில், சமீபத்திலே ஒரு மடம் இருப்பதாகவும், அந்த மடத்திலுள்ள சாமியாருக்கு இளையான்குடி சம்பந்தமான செய்திகள் பல தெரியும் என்றும் அறிந்து அந்த மடத்துக்குச் சென்றேன்.

நல்ல வெயில் நேரம். மடம் வெறிச்சோடிக் கிடந்தது. திண்ணையில் ஒரு வழிப்போக்கர் படுத்திருந்தார். என்னைக் கண்டதும் "சாமியார் உள்ளே தானிருக்கிறார். உட்காருங்கள்'' என்று சொல்லிவிட்டு, யாரோ ஒருவர் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டார். வேலைக்காரன் ஒருவன் வந்து எட்டிப் பார்த்துவிட்டு உள்ளே போனான். அடுத்த நிமிஷம் குள்ளமான, சிறிய உடலில் காவி வஸ்திரம் தரித்த ஒருவர், அமைதியான குரலில், "உட்காருங்கள். எங்கேயிருந்து வருகிறீர்கள்'' என்று விசாரித்தார். இளையான்குடி மாற நாயனருடைய ஸ்தலத்தைத் தேடி வந்ததாகவும் இந்த ஊரில் விசாரித்துத் தகவல் அறிந்து செல்லலாம் என்றும், நான் சொன்னவுடன் சாமியார் மகிழ்ந்து, பின்வருமாறு சொன்னார்

"இந்த இளையான்குடிதான் மாற நாயனார் பிறந்து சேவை செய்த சிறந்த பதி. கடந்த 1918 ம் ஆண்டு முதலாக அடியேன் காளையார் கோயிலுக்கும் இதற்குமாக மாறி மாறிச் சென்ற கொண்டிருக்கிறேன். இந்த ஊரில் ஒரு காலத்தில் சைவ வேளாளர்கள் மிகுதியாயிருந்தார்கள். ஆனால் வேளாண்மை குறைந்தவுடன் அவர்கள் பலர் வேறு ஊர்களுக்குப் போய் விட்டார்கள். குமார சுவாமிப் பிள்ளை குடும்பம் ஒன்று தான் இங்கே நிரந்தரமாக, பல சந்ததிகள் வழியாக, இங்கே வாழ்ந்து வருகிறது. இவர்கள் இளையான்குடி மாற நாயனார் பரம்பரை என்பதை நம்பலாம். இன்றும் இவர்கள் வீட்டில் விருந்துக்குக் குறைவில்லை. இங்கே நான் தங்கியிருக்கும் மடமும் இதைச் சேர்ந்த நெல் வயலும் மடத்துக்காக ஒரு முஸ்லிம் பெரியார் இனாமாகக் கொடுத்து உதவியது. ஸ்ரீ சங்கராசாரியார் ஆசியுடன் வேதாந்த மடம் என்று இதனை நடத்தி வருகிறேன்," என்றார்.

சிவானந்த ஞான தேசிக சுவாமி என்ற பெயரைக் கொண்ட அந்தத் துறவி திருநெல்வேலியைச் சேர்ந்த சைவப் பிள்ளை. பல ஆண்டுகளுக்கு முன்பு துறவியாகி காளையார்கோயிலில் சேவை செய்து வந்தார். பின்னர் இளையான்குடிக்கு வந்து, முஸ்லிம் பெரியார் ஒருவர் உதவியுடன் மடம் அமைத்துத் தம்மாலான சேவை செய்து வருகிறார். படித்தவர். சில நூல்கள் செய்திருக்கிறார். இளையான் குடி மாற நாயனார் பேரில் ஒரு புராணமும் பாடியிருக்கிறார். அடக்கமும் பண்பும் நிறைந்தவர். ஊரைப்பற்றியும் கோயிலைப் பற்றியும், பேசிக் கொண்டிருந்த பின் மணி பன்னிரண்டாகி விட்டது. 'சாப்பாடாக வேண்டாமா? ஏதாவது ஏற்பாடு செய்திருக்கிறீர்களா?'' என்று கேட்டார். நான் மதுரைக்கே திரும்பிப் போய் அங்கே பார்த்துக் கொள்ளலாம் என்று சொன்னவுடன், சாமியார், "இங்கேயே சாப்பிட்டுப் போகலாம். ஏதோ இருக்கிறதை வைத்து நாமிருவரும் பகிர்ந்து கொள்ளலாம்'' என்று தன்னடக்கத்துடன் சொன்னார். சரி என்று ஒப்புக் கொண்டு சுவாமிகளுடன் உட்கார்ந்து சாப்பிட்டேன். அந்தச் சாப்பாட்டின் போது தான் இளையான்குடி மாறனின் ஊர் அதுவே என்று உறுதிப் படுத்திக் கொள்ள சான்றுகள் கிடைத்தன. சாமியார் சாதாரணமாகச் சொன்னார், "இங்கே மடத்தைச் சேர்ந்த நிலத்தில் விளைந்த நெல்லில் குத்திய அரிசிதான் இந்தச் சாதம்,'' என்றார். அது மாத்திரமா? மடத்துப் புழைக்கடையில் பறித்த கீரையின் கறி, மோர், வடுமாங்காய் ஊறுகாய்!

இளையான் குடி மாற நாயனார் கதை எல்லாரும் அறிந்ததே. நள்ளிரவில் நாயனாரும் மனைவியும் வீட்டிலிருக்கும் போது நல்ல மழையில் நனைந்து கொண்டு ஒரு சிவனடியார் பசியோடு வந்தார். அடியார்களுக்கு அன்னமிட்டு உபசரிக்கும் தம்பதிகள் அந்தச் சமயத்தில் அரிசியோ தானியமோ இல்லாமல் தவித்தார்கள். பக்கத்து வீடுகளில் கடன் வாங்கவும் முடியாத வறுமை நிலை, கையிலிருந்த சில நெல் மணிகளை முதல் நாள்தான் வயலில் விதைத்து விட்டார்கள். என்ன செய்வதென்றறியாத அவர்கள், முடிவாக யோசனை செய்தார்கள். விதைத்த நெல் முளைகளை வாரிக் கொண்டு வந்து வறுத்து, உமிபோக்கி அரிசியாக்கிச் சமைத்துக் கொடுக்கத் திட்டமிட்டார்கள். மாறன அந்த முளையை வாரிக் கொண்டு வந்து கொடுத்தார். அடுப் பெரிக்க விறகில்லை. வீட்டின் கூரையிலிருந்து சில மரத் துண்டுகளை அகற்றி விறகாக அடுப்பேற்றி, சமையல் செய்தார்கள். கொல்லையில் கிடந்த கீரையைப் பறித்துக் கறி சமைத்தார்கள். பசியோடு வந்த அடியாருக்கு உணவளிக்க முன் வந்த போது இறைவனே தோன்றி, தாமே அடியவராக வந்து மாறன் தம்பதிகளின் பக்தியைச் சோதித்ததாகச் சொல்லி வாழ்த்திச் சென்றதாகப் புராணம் கூறுகிறது.

மடத்து நிலத்து அரிசியும் கொல்லையில் சேகரித்த கீரையும் அன்றைய உணவாக எனக்குக் கிடைத்த போது, மாற நாயனார் அனுபவத்தை நினைத்துக் கொண்டேன். அந்தப் பொருத்தத்தைக் கண்டு சிவானந்த ஞான தேசிக சுவாமிகளே ஆச்சரியப்பட்டார். "இறைவனின் சோதனைதான் இதுவும். அந்தச் சிவனடியார் போலவே நீங்களும் இன்று வந்தது என் அதிர்ஷ்டம்!'' என்று அவர் பெருமைப்பட்டார்.

எதிர் பாராத இந்த நிகழ்ச்சியை நான் என்றும் மறக்க முடியாது. பக்கத்து வயலில்

விளைந்த நெல்லரிசியும் கொல்லையில் விளைந்த கிரையும் இளையான் குடிக்கு ஒரு அளையாளம் போலும். "முளைவாரி அமுதளித்த" வயல் இன்றும் காணப்படுகிறது. சர்வ மான்ய நிலமாகவே இன்றுமுள்ளது.

## பதிப்பாசிரியர் குறிப்பு

இந்த மடம் கோவிலூர் ஆதீனத்தைச் சேர்ந்த காளையார்கோவில் வேதாந்த மடத்தின் ஆதி குரு ஸ்ரீ-ல-ஸ்ரீ செல்லப்ப ஞான தேசிகர் அவர்களுடைய மாணாக்கரான ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவானந்த ஞானதேசிக சுவாமிகள் அவர்களால் 1933-ல் (பிரசோற்பத்தி ஆண்டில்) நிறுவப் பெற்றது. மடத்தின் முழு விலாசம்.

சிவானந்த சுவாமிகள் வேதாந்த மடம்
கதவு எண் 335
இளையான்குடி 623702
இராமநாதபுரம் மாவட்டம்.

ஸ்ரீ சிவானந்த சுவாமிகள் இராமேசுவரத்தில் கந்தமா பர்வதத்திற்கு அருகே ஓர் ஆசிரமும் எமனேசுவரத்தில் சிவானந்த நிலையமும் நிறுவியுள்ளார்கள். இவர்களுடைய மாணாக்காரன ஸ்ரீ சொரூபானந்த சுவாமிகள். இளையான் குடியிலிருந்து கிழக்கே 3 கி. மீ. தொலைவிலுள்ள அரியாண்டிபுரத்தில் மாதவ ஜோதி நிலையம் நிறுவியதோடு சிவன் கோயிலும் கட்டியுள்ளார்கள்.

### அரியாண்டிபுரம் ஸ்ரீ சொரூபானந்த சுவாமிகளின் மாணாக்கர்கள் வருமாறு:

1. கானூர் முருகானந்த சுவாமிகள்
2. காவனூர் திருஞானசம்பந்த ஐயா
3. ,, ,, மங்கய்யா
4. சின்னூர் சின்னமுத்து என்ற சச்சிதானந்த ஐயா.
5. சித்திரங்குடி குமரய்யா
6. காடல்குடி ஆறுமுகய்யா

### இளையான்குடியில் பாடம் கேட்டவர்கள்

1. குழ. தியாகராசன் செட்டியார்
2. தா. மு. ச. பிச்சை மாணிக்கம் செட்டியார்
3. சுவாமியார் சுந்தரம் செட்டியார்
4. த. மு. கி. ராஜேந்திரன் செட்டியார்
5. மு. கி. சுந்தரேசன் செட்டியார்
6. குழ. கேசவன் செட்டியார்
7. ப.மு. ஹமீது ராவுத்தர் (இசுலாமியர்
8. சு. லத்தீபு (இசுலாமியர்)
9. தெ பா ஷாஹுல் ஹமீது (இசுலாமியர்)
10. ச. முருகப்ப பிள்ளை
11. அ. பிச்சை பிள்ளை
12. செ. முத்துவயிரவ ஆசாரி
13. பொன்னுசாமி ஆசாரி (கிறிஸ்தவர்)
14. குழந்தை ஆசாரி (,, )
15. பொன்னையத் தேவர்

### இளையான்குடி வேதாந்தமடத்தின் குரு முதல்வர் ஸ்ரீ-ல-ஸ்ரீ சிவானந்த ஞான தேசிக சுவாமிகள் இயற்றிய நூல்கள்

#### அச்சு இயற்றியவை

சற்குரு பாமாலை
கொடுமளூர் திருப்புகழ்
இளையான்குடி, திருப்புகழ்
தென்னூர் மூர்த்தி ஸ்தோத்திரம்
சற்குமது சப்தரச மஞ்சரி
மதுரை, குட்டைய ஞானதேசிக ஸ்வாமிகள்மீது ஸ்தோத்திரம்
இளையான்குடி மாற நயினார்மீது சரித்திர ஸ்தோத்திர வரலாறு

#### அச்சு இயற்றவேண்டியன

அன்பு நெறிவிளக்கம் (என்ற) ஞான நெறி விளக்கம்
நால்வர் திருமணி மாலை
சிவலிங்க ஸ்தோத்திரம்
ஸ்தோத்திர கதம்பம்
சற்குரு பாமாலை
அகிலாண்டேஸ்வரி ஸ்தோத்திரம்
திருமூலநாதர் மீது திருத்தாண்டகம்
சற்குரு ஸ்தோத்திரம்
சற்குரு அனுபூதி
ஸ்ரீ வானவந்தம்பாள்மீது அந்தாதி
ஸ்ரீ நாகநாத சுவாமிமீது அந்தாதி

ஸ்ரீ செல்லமுத்து அம்மன்மீது அந்தாதி
ஸ்ரீ நாக நாதர்மீது ஸ்தோத்திரம்
ஸ்ரீ முனியஸ்வாமி மீது ஸ்தோத்திரம்
ஸ்ரீ இராஜ இந்திரசோதீஸ்வர் மீது ஸ்தோத்திரம்

சித்திரக் கவிகள்

கோவிலூர் ஆண்டவர் முத்துராமலிங்க ஞானசாரியர்மீது

1. பத்ம பந்தம்
2. ரத பந்தம்
3. அஷ்ட நாகபந்தம்
4. லிங்க பந்தம்
5. மாலை மாற்று

கோவிலூர் துறவாண்டவர் என்னும் அருணசல ஞானதேசிகர்மீது இயற்றிய சித்திரக்கவிகள்

1. பத்ம பந்தம்
2. ரத பந்தம்
3. அஷ்டநாக பந்தம்

திருக்களர் ஆண்டவர் வீரசேகர ஞான தேசிக சுவாமிகள்மீது இயற்றிய சித்திரக் கவிகள்

1. ரத பந்தம்
2. பத்ம பந்தம்
3. லிங்க பந்தம் மாலை மாற்று
4. அஷ்ட நாகபந்தம் 2

காரையார் கோவில் செல்லப்ப ஞானதேசிகர் சுவாமிகள்மீது இயற்றிய சித்திரகவிகள்

இளையான்குடி ஸ்ரீ ராஜேந்திர சோதிஸ்வர ஸ்வாமிகள்மீது இயற்றிய சித்திரகவிகள்

நயினர் கோவில் நாகநாதர்மீது இயற்றிய சித்திரக் கவிகள்

இராமேஸ்வரம் இராமநாத ஸ்வாமிகள்மீது இயற்றிய சித்திரகவிகள்

மதுரை சொக்கநாதர்மீது பாடிய சித்திரகவிகள்

மதுரை பிரமானந்த சுவாமிகள் மடத்து முன்னாள் தலைவர் ஸ்ரீ சின்மயானந்த ஸ்வாமிகள் மீது சித்திர கவிகள்.

சமுதாயத்திற்கு மிகவும் பயன் தரும் அம்சம் பலவகைச் சமயங்கள், துறவிதான். பாரதம் போன்ற பல்வேறு ஜாதிகள், கிளைப் பிரிவுகள், உடையலங்காரங்கள், கருத்துக்கள் கொண்ட நாடு தனது பண்பாடு, நாகரிகம், கலைகள் மற்றும் பரந்த தேசத்தின் பாதுகாப்பு இவற்றை ரிஷிகள், பெரும் துறவியர்களின் பலத்தால்தான் ஏற்படுத்திக் கொண்டுள்ளது.

துறவியர்களும், ரிஷிகளும் ஆன்மீக உணர்வு நல்கும் செய்தியாளர்களாக உலகம் முழுவதையும் நன்மையடையச் செய்திருக்கின்றார்கள். அவர்களது தியாகம், உயிர்த் தியாகம், பெரும் தவம், தன்னலமற்ற சேவை மற்றும் அஹிம்சை, சத்தியம் முதலிய சாதனைகள் மனித சமுதாயம் முழுவதற்கும் எப்பொழுதும் பெரும் தூண்டுதலாக இருந்திருக்கின்றன. ஒரு மாபெரும் குறிக்கோளில் இணைந்த அவர்களது தனித் தன்மை தன்னில் தானே சமுதாயத்திற்கு மிகப் பெரிய தொண்டு ஆகும். மனித சமுதாயத்தின் முன்னேற்றத்திற்கும் பெரும் புகழுக்கும் என்றே இத்தகைய ஒரு பிரிவினர் ஏற்பட்டனர்; இன்றும்கூட அவர்கள் முன்போலவே தேவைப்படுகின்றனர்.

# கோவிலூர்த் திருமடத்தில் தமிழ்

புலவர் சோம. இளவரசு

தமிழ் விரிவுரையாளர், அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

தமிழ் நாட்டுத் திருமடங்களில் கோவிலூர்த் திருமடம் தனிப் பெருமை கொண்டது. சைவ சித்தாந்தக் கொள்கைகளை விளக்க எத்தனையோ மடங்கள் உள. அவ்வாறே வைணவக் கொள்கைக்கும். ஆனால் வேதாந்தக் கொள்கைக்கு விளைநிலமாக அமைந்த மடம், கோவிலூர்த் திருமடமே. இஃது ஒரு தாய் மடம். இதற்குப் பல சேய் மடங்கள் தமிழகத்தில் உண்டு. வடநாட்டிலும் இதற்குச் சார்பு மடங்கள் உண்டு என்பர்.

வேதாந்தக் கொள்கை, மிகப் பழைமை வாய்ந்தது. அதனை விளக்கும் நூல்கள் தவப் பல. ஆயினும் தமிழ் நாட்டு வேதாந்தம் எத்தகையது என்பதனைச் சிறப்பாக விளக்க அவை தவறின. அவ்வாறு விளக்க வேண்டுமாயின் கோவிலூர்த் திருமடம் தந்த நூல்களையும், நுட்பம் வாய்ந்த உரைகளையும் படித்து அன்னமென நின்று இந்திய வேதாந்தத்தையும் தமிழக வேதாந்தத்தையும் பிரித்து உணர்ந்து பயிலுதல் முறையும் நிறையும் ஆகும்.

தென்னாட்டுத் திருமடங்கள் பல, காலப் பழமை வாய்ந்தன: வரலாற்று மூலங்கள் கொண்டன. கோவிலூர் மடமோ இரண்டு நூற்றாண்டுக்கும் உட்பட்ட கால வரலாறே உடையது; ஞானதேசிகர் எண்மர் அருளாட்சி செய்தபின் ஒன்பதாம் குரவராக அருள்மிகு இராமநாத ஞான தேசிக சுவாமிகளைத் தலைவராகக் கொண்டு திகழ்வது.

கோவிலூர் வரலாற்றைப் புராண அடிப்படையில் காட்டுவன இரு நூல்கள். ஒன்று, திருவிடை மருதூர் பிரம்மஸ்ரீ பிச்சு சாத்திரிகள் பாடிய சமிவனமான்மியம். மற்றொன்று, 'புராணக் கம்பர்' என்று புலமையுலகம் போற்றிய மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் பாடிய கோவிலூர்ப் புராணம். இவை இரண்டும் திருமட வரலாறு மட்டுமே கூறுவன அல்ல; தல வரலாறு பாடுவன.

கோவிலூர்த் தலம், திருமடத்தாலேயே புகழ் பெற்றது. இவ்வூருக்கு வரலாற்றுச் சிறப்பும் உண்டு. இவையெல்லாம் விழாமலர் தொகுக்கும் வித்தகர் 'சோமலெ' அவர்களால் நாட்டுக்குக் கிடைக்கும்.

புராண நோக்கும் வரலாற்றுப் பார்வையும் கொண்டு இம் மடத்தினை அறிஞர்கள் நோக்கும் போது, நான் தமிழ்க் கண்ணோட்டத்துடன் ஒரு சில, இக் கட்டுரையில் குறித்துள்ளேன்.

தமிழ் நாட்டு மடங்கள், தமிழன்றி வாழா. அவைகள் மக்களுக்கு நல்வழி காட்டவும் துறவிகளுக்கு வீடுபேறு கூட்டவும் தோற்றுவிக்கப் பெற்றவை. இத்தகைய குறிக்கோள் மிக்க அருள் நிலையங்கள், தாய்மொழியை எவ்வாறு புறக்கணிக்கும்? எனவே அவை தமிழையே விளக்க மொழியாகப் பயிற்று மொழிபோல் கொண்டன.

வேதாந்த மடங்கள், "யானே எங்குமாம் பிரமம்" என்ற முடிநிலைக் கொள்கையை உயிர்க் கொள்கையாக உடையன.

"வானமல்லேன் வளியல்லேன்
அழல்நீ ரல்லேன் மண்ணல்லேன்
ஞானமல்லேன் வினையல்லேன்
நானே சிவமென்று எண்ணினேன்
ஊனமில்லா ஒரு சிவமே யாவன்
இவ்வாறு உன்னுதான்
ஈனமெல்லா முடைய உடம்
பெடுத்துச் சுழலுமெஞ் ஞான்றும்"

என்று வீரசைவப் புலவர் சிவப்பிரகாசர், இக் கொள்கையைத் தெளிவுற விலக்குவர். இதனைக் கற்றார்க்கும் மற்றார்க்கும் உணர்த்திக் கடைத் தேற்றம் செய்தற்காகத் தோன்றிய மடமே கோவிலூர் மடம். ஆதலின் வேதாந்தக் கருத்துக்கள், இம் மடத்தின் அறிஞர்களால், எளிமைப் படுத்தப்பட்டன.

வேதாந்தக் கருத்துக்கள் வடமொழியிலேயே எழுதப்பட்டுள்ளன. கி. பி. 13ஆம் நூற்றாண்டு முதல் அவை தமிழ்ப் படுத்தப்பட்டன. கி. பி. 15ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவராகக் கருதப் பெறும் தத்துவராய சுவாமிகள், தமிழ் நாட்டு வேதாந்திகளுக்குத் தாய் போன்றவர். இவர் கற்றுத் துறை போகி, முற்றத் துறந்து வேதாந்த நுட்பமிக்க கருத்துக்கள் பல அமைய 20 நூல்கள் பாடியவர். இந் நூல்களைக் கோவிலூர்த் துறவிகள், கொள்கை நூல்களாக ஏற்பர்.

தத்துவராயருக்கு இரண்டு நூற்றாண்டுகள் முன், கி. பி. 13ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் பட்டனார். இவர், வேதாந்த நோக்கில் பகவத் கீதையைத் தமிழில் பாடினார். இதுவே தமிழில் தோன்றிய முதல் வேதாந்த நூல் என்பர் இலக்கிய வரலாற்றாசிரியர் திரு. மு. அருணாசலம். இந் நூலுக்கு உரை வரைந்த பெருமை கோவிலூர் மடத்திற்கு உண்டு. இந் நூலுக்குப் பழைய உரைகள் இருப்பினும் விளக்கமாகவும், வடமொழிக் கருத்துடன் உறழ்ந்தும் எழுதிய இம் மடத்தின் உரையே இப்போது எல்லாராலும் பயிலப்படுகின்றது.

வசிட்டர் இராமபிரானுக்கு உபதேசித்தது ஞான வாசிட்டம் என்பர். இந் நூலின் தமிழாக்கத்திற்குக் கோவிலூர் மடம் நித்தியானந்த சுவாமிகள் உரையெழுதியுள்ளார். இப்பேருரையினை அனைவரும் போற்றுவர்.

பிரும்ம சூத்திரக் கருத்துக்களை விளக்கும் வகையில் கைவல்லிய நவநீதம் என்னும் செய்யுள் நூலை நன்னிலம் தாண்டவராய சுவாமிகள் பாடியுள்ளார். இந்நூலுக்கு அருமையான உரை வரைந்தவர் பொன்னம்பலசுவாமிகள். இவ்வுரை, ''தத்துவார்த்த தீபம்'' என்று கூறப் பெறும். சமய உரைகளில், சிவஞான போதத்திற்குச் சிவஞான முனிவர் எழுதிய உரை போன்றது இது. இவ்வுரையில் வடசொற் கலப்பு மிகுதி; அதற்குக் காரணம் சமய விளக்கமே வேதாந்தக் குறியீடுகள் பல, வடமொழியன ஆதலின் இவ்வுரையில் மணிப்பிரவாள அமைப்பு, ஓரளவு இடம் பெறுகின்றது. இவ்வுரை, தமிழ் மரபு கொண்டது; உரையாசிரியர் வழியது. சொல்லுக்கு எழுதும் விளக்கங்கள் சுவை பயப்பன.

''யாவரும் முடிமேற் கோடலானும், யாவரினும் பெருமையுடைமையானும், அபக்குவர் அண்மைக்கணிருந்தும் அடையாமையானும், பக்குவர் சேய்மைக்கணிருந்தும் தேடி வந்தடைதலானும் 'பதும பாதம்' என்றார்.''

இப்பகுதியைப் படிக்கும்போது, பழைய உரைகளின் நினைவு, வராமல் இருக்க நியாயமில்லை.

கோவிலூர் மடம், தமிழுக்குச் செய்த தொண்டுகளில் உரைத் தொண்டு என்றும் மறக்க முடியாதது: வேதாந்தக் கருத்துக்களை இவ்வுரைகள் விளக்கின.

கோவிலூர் மடத்தைச் சேர்ந்தவர்கள், செய்யுள் பாடும் ஆற்றல் நன்கு கைவரப்பெற்றவர்கள். இம் மடத்தைச் சேர்ந்த மா. சோம சுந்தர சுவாமிகள், மதுரை மீனாட்சியம்மன் மீது சிற்றிலக்கியங்கள் பல பாடியுள்ளார்.

கோவிலூர் ஆதீனத்தின் முதற்குரவரான ஆண்டவர், ஓதாதுணர்ந்த ஞானி; பொருள் வைத்த சேரியில் உகந்தலிங்க தேசிகரால் ஞானம் கைவரப் பெற்ற அருளாளர். இவருடைய பாடல்கள், தெளிந்தநீரோட்டம் போன்றன. வேதாந்த உரைகளில் வட சொற்கள் மிகுந்துள்ளனவே என ஏங்குவாருக்கு இத் துறவிகள் பாடிய தமிழ்ப் பாடல்கள், 'குளிர் தருவாய்' அமைவன.

ஆண்டவர் அவர்கள், பிள்ளையார்பட்டிக் கற்பக விநாயகர் மீது பாடிய பாடல்:

முற்பவத்தில்யான்புரிந்ததீவினைகள் முழுசகற்றும் முகத்தி னனை
அற்பசுகத் தெனையழுத்தா ஐங்கரனைப் பிற்பவமும் அகற்றும் கோவை
சொற்பழுது புரியாதவணிகர்குலம் தினம்பணியும் துணைத்தா ளானைக்
கற்பகத்தின் மிடியகற்றும் கற்பகமாம் நாயகனைக் கருத்தில் வைப்பாம்.

இவ் அறுசீர் விருத்தம், சந்தமிடுக்குடன் அமைந்துள்ளது. இப்பாடல், ''சொற்பழுது புரியாத வணிகர்குலம்' என்னும் தொடர், எவ்வளவு பெருமைக்குரியது! நாட்டுத் தனவணிகர்கள், நாணயமே மானமாகவும் கற்பாகவும் கொண்டவர்கள். அவர்களைச் 'சொற்பழுது புரியாத வணிகர்குலம்' என்று அருளாளர் பாடினர், ''சொல்லினும் இலாபம் கொள்வார்'

என்று பாடிய திருவிளையாடற் புராண ஆசிரியர் கூற்றையும் ஆண்டவர் கூற்றையும் ஒப்பு நோக்கின் ஆண்டவர் கூறிய அழுத்தம் பெறப் படும்.

கோவிலூர் மடத்தில் நிர்வாகத்திற்குத் தரும் முதன்மை மிகக் குறைவு; ஞான அறிவுக்கே அவர்கள் சிறப்பிடம் தந்தனர். 'பாடம் கேட்டல்' என்பது, கோவிலூர் மடத்திற்கு உரிய வழக்கு. துறவிகள் இரு வரிசைகளிலும் அமர, ஞானத் தலைவர் நடுவேவீற்றிருக்க இரவு ஏழு மணிக்குப் பாடம் தொடங்கும். இக் காட்சி, கண் கொள்ளாக் காட்சி. கோவிலூர் மடத்தில் ஏழாவது பட்டத்தில் எழுந்தருளியிருந்த மகாதேவ ஞான தேசிக சுவாமிகள், பாடம் சொல்லும் முறையும் அதனைக் கடைப் பிடியாகக் கொண்ட உறுதியும் போற்றுதற் குரியன. அவர்களின் மாணவர்களே மிகப்பலர். எனவே பாடஞ் சொல்லியும் தமிழ் வளர்த் தனர். பாடம் கேட்டவர்கள் அவற்றைப் பற்றியே சிந்திப்பவர். இறைவனுக்குப் பனி மலர் எடுக்கும்போதும் அவற்றை மாலையாகத் தொடுக்கும் போதும் வேதாந்த பாடங்கள் பற்றியே பேசுவர்; திருவாசகம் முதலிய பாக் களையே ஓதுவர்.

"திருவும் கலைவா ணியும் அன்பின்
சேவித் தெதிர்நின் றுளமகிழத்
தெய்வமகளிர் பற்பலரும்
செங்கை குவித்துத் தினம் போற்றக்
குருவினருளால் தத்துவத்தின்
கூட்டம் கழித்துக் குறிப்புணர்ந்தோர்
கூடிக்குலவித் தமிழ்வேதம்
கொழிக்கும் திருவாசகம் பாடித்
தெருளுமனம் பூரிப்ப"

நிற்கின்ற காட்சியைத் திருநெல்லையம்மை பிள்ளைத் தமிழ் காட்டும். கோவிலூர் அடியார் கள், தமிழ் வேதமாம் திருவாசகத்தில் அழுத் தம் மிக உடையார்கள்.

கோவிலூர்த் திருமடம், வேதாந்த உரை களாலும், செய்யுளாலும், வேதாந்தக் கல்வி யாலும் தமிழ் வளர்த்த நிலையம். தமிழில், வேதாந்தத்தை அறிய வேண்டுமாயின் கோவி லூர் மடமே சரண். ★

## பதிப்பாசிரியர் குறிப்பு

வசிட்டர் இராமபிரானுக்கு உபதேசித்த ஞானவாசிட்டம் என்னும் நூலின் தமிழாக்கத் தோடு கோவிலூர் மடத்து நித்தியானந்த சுவாமிகள், சம்சார தரணி என்னும் வியாக்கி யானத்தின் மொழிபெயர்ப்பையும் இணைத் துள்ளார். கோளிலூர் ஸ்ரீ சுப்பையா ஞான தேசிகர், இந்நூலுக்கு வீரசேகரம் என்ற பேரு ரையை ஆக்கியுள்ளார்.

சொர்ணநாதபுரம் பழனியப்ப அய்யா, பின்வரும் நூல்களைப் படைத்துள்ளார்கள்.

1 வெயிலுகந்த விநாயகர் பதிகம்
2 பழனிமலைச் செட்டியார் மாலை
3 கல்லுளி மாலை
4 பொன் மாரி அந்தாதி
5 சிரலைவாய்ப் பதிகம்
6 பழனிப் பதிகம்
7 விடுதிக் கவிகள்
8 தோத்திரப் பாமாலை
9 தனிப் பாடல்கள்
10 ஆண்டவர் முத்துராமலிங்க ஞான தேசிகர் சரித்திரம்

துறவு ஆண்டவர் கைவல்ய நவநீதத்திற் திற்கு 'பதசாரம்' என்ற உரையை எழுதியுள் ளார்கள். பின்வரும் நூல்களைத் தக்காரைக் கொண்டு தமிழில் மொழிபெயர்த்துள்ளார்கள்:

1 சமிவன க்ஷேத்திர மான்மியம்
2 விவேக சூடாமணி
3 ஜீவன்முக்தி விவேகம்
4 சூத சம்ஹிதை முக்தி கண்டம்
5 சூத கீதை
6 ரிபு கீதை

நெற்குப்பையில் இளையாற்றக்குடி கழனி வாசல்குடி நகரத்தார் நடத்திவரும் வைகாசி விசாகத்தின் பொன் விழா 7—6—1961ல் கோவிலூர் ஆதீன கர்த்தர் 9-வது பட்டம் ஸ்ரீ-ல-ஸ்ரீ இராமநாத ஞான தேசிகர் அவர்கள் தலைமையில் நடைபெற்றது அப்போது கோவி லூர் ஆதீனத்தின் சார்பில் சுவாமிகள், புகழ் பெற்ற எழுத்தாளரும் கவிஞருமான திரு. மீ. ப. சோமசுந்தரம் அவர்களுக்கும் சென்னைப் பல்கலைக் கழகத்துத் தமிழ்ப் பேரா சிரியர் டாக்டர். ந. சஞ்சீவி அவர்களுக்கும் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தார்கள். ★

# வரலாற்றில் கோவிலூர்

பல நூற்றாண்டுகளுக்குமுன் : கோவிலூரில் ஒரு சிவன் கோயில், மிகச் சிறு அளவில் காட்டுக்குள் செம்பூரான் கல்லில் இருந்தது.

கி. பி.

1761 சிருங்கேரி சங்கராச்சாரிய சுவாமிகள் வேதாந்த மரபில் வந்த உகந்த லிங்க ஞான தேசிக சுவாமிகள் அவதாரம்.

1791 காரைக்குடியில் நகரத்தார் மரபில் ஆண்டவர் முத்துராமலிங்கம் அவதாரம்

1810 காரைக்குடி முத்துராமலிங்கம் பொருள் வைத்த சேரியில் உகந்த குரு சுவாமிகளிடம் வேதாந்த பாடம் பயின்று வாசிட்டம் வரை பாடசமாப்தி செய்தார்

1818 கழனிவாசல் கொற்றவாள் ஈசுவரர்—திரு நெல்லை நாயகி அம்மன் கோயிலை ஆண்டவர் கல்திருப்பணியாக்கினர். கோவிலைச் சுற்றி அமைந்துள்ள ஊருக்கு கோவிலூர் என்று பெயர் வழங்குவதாயிற்று. மடம் நிறுவ அடிகோலப் பெற்று, வேதாந்த நூல்களையும் ஞான வாசிட்டம் முதலியவற்றையும் கற்பிக்கத் தொடங்கினர்.

1819 உகந்த குரு சுவாமிகள் பரிபூரணம்.

1847 கோவிலூர் ஆண்டவர் பரிபூரணம்

1847 கோவிலூரில் இரண்டாவது பட்டமாக துறவு ஆண்டவர் என்ற அருணாசல ஞான தேசிக சுவாமிகள் அருள் ஆட்சி ஏற்றனர்.

1847 யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர் தொடர்பு

1849 துறவு ஆண்டவர் பரிபூரணம்

1849 மூன்றாவது பட்டமாக கருணாநிதி சுவாமிகள் என்ற சிதம்பர ஐயா, சிதம்பர ஞான தேசிகர் என்னும் பெயருடன் அருள் ஆட்சி ஏற்றனர்.

1850 முத்துராமலிங்க ஆண்டவரை மகாலிங்க மூர்த்தியாகவும், துறவு ஆண்டவரை நந்தியாகவும் அமைத்து, இருவருக்கும் ஒன்றாய்க் கருவறை முதலியனவற்றைக் கருங்கல் திருப்பணியாக அமைத்து, கருணாநிதி சுவாமிகள் குடநீராட்டுச் செய்தனர்.

1850 மதுரையில் குட்டைய சுவாமிகள் மடம் நிறுவப் பெற்றது.

1850 மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம்பிள்ளை கோவிலூர்ப் புராணம் பாடினார்கள்.

1858 சிதம்பரம் மூலட்டான ஈசுவரர் கோவிலில் சுவர்ண பந்தன மஹா கும்பாபிஷேகம் செய்வித்தது (காளயுக்தி-ஆனி 14)

1865 மதுரை மீனாட்சியம்மன் கோயில் திருப்பணியை முடித்து, குடநீராட்டு விழாவைக் கருணாநிதி சுவாமிகள் நடத்தி வைத்தார்கள்.

1876 கருணாநிதி சுவாமிகள் பரிபூரணம்.

1876 நான்காவது பட்டமாக இராமசாமி ஞான தேசிக சுவாமிகள் அருளாட்சி ஏற்றார்கள். அஷ்ட லெட்சுமி மண்டபமும், கோவிலைச் சுற்றிப் புதிதாகத் திருமதிலும், கோவிலூரில் கட்டினார்கள்.

1883 இராமசாமி ஞான தேசிக சுவாமிகள் பரிபூர்ணம்.

1883 ஐந்தாவது பட்டமாக, திருக்களரி ஆண்டவர் என்று பெரும் புகழ் பெற்ற

வீரப்ப சுவாமிகள், வீரசேகர ஞான தேசிக சுவாமிகள் என்ற திரு நாமத்துடன் கோவிலூரில் அருள் ஆட்சி ஏற்றார்கள்.

அடுத்த பத்து ஆண்டுகளில் கோவிலூர் விரிவடைந்தது.

1890 சிருங்கேரியில் கல் திருப்பணிகள்

1890–1910 திருக்களரில் கல் திருப்பணிகள்.

1908 திருநெல்லை நாயகி அம்மனுடன் கூடிய கொற்றவாளீசுவரர் கோயில் குடநீராட்டு விழா (கிலக சித்திரை 11)

1910 பொருள்வைத்தசேரியில் சொர்ணபுரீசுவரர் சௌந்தரநாயகி அம்மன் கோயில் திருப்பணி (அந்நாளில்) ஒன்றே கால் லட்சம் ரூபாய்ச் செலவில் நிறைவேறியது.

1911 திருக்களர் ஆண்டவர் பரிபூரணம்.

1911 அண்ணாமலை ஞான தேசிகர் ஆறுவது பட்டமாக எழுந்தருளினார்கள்.

1918 அண்ணாமலை ஞான தேசிகர் பரிபூரணம்.

1918 ஏழாவது பட்டமாக மகாதேவ ஞான தேசிகர் அருளாட்சி ஏற்றார்கள்.

1927 செப்டம்பர் 11-ல் கோவிலூர் ஆதீனத்தைச் சேர்ந்த சிதம்பரம் கோ.சித. மடாலயத்துக்கு மகாத்மா காந்தியடிகள் வந்து இங்கு ஒரு நாள் தங்கியிருந்தார்கள். காந்தி மகானுக்கு மடாலயத்தின் சார்பில் பரஞ்சோதி சுவாமிகள் பணமுடிப்பும் வரவேற்பும் கொடுத்தார்கள்.

1929 ஏப்ரல் 6-ம் நாளில் கானாடுகாத்தான் சா. ராம. மு. அ. அண்ணாமலைச் செட்டியார் அவர்களுக்கு ஆங்கிலேய அரசாங்கத்தாரால் "செட்டி நாட்டரசர்" என்ற பட்டம் வழங்கப் பெற்றமைக்கு நகரத்தார்கள் கோவிலூரில் பாராட்டு விழா நடத்தினார்கள்.

1929 நகரத்தார்களில் பெண்ணைத் திருமணம் செய்து கொடுப்பதற்கு, பெண் வீட்டார் மாப்பிள்ளை வீட்டாரிடம் பணம் பெற்றுக் கொள்ளும் பழக்கத்திற்கு முற்றுப்புள்ளி வைக்க, திரு. செ. முருகப்பா அவர்களின் முயற்சியால் 96 ஊர்க் கூட்டம் கோவிலூரில் நடைபெற்றது.

1947 ஏழாவது பட்டம் மகாதேவ ஞான தேசிகர் பரிபூரணம். எட்டாவது பட்டமாக சோமசுந்தர ஞான தேசிகர் சுவாமிகள் அருளாட்சி ஏற்றார்கள்.

1948 எறும்பூரில் தத்துவராய சுவாமிகள் சமாதிக்கோயில் குடநீராட்டு விழா.

1954 கோவிலூர் ஆதீனம், இந்து சமய அறநிலையத்துறையின் ஆட்சிக்கு உட்பட்டதில்லை என்று உயர்நீதி மன்றம் தீர்ப்பு அளித்தது.

1961 பொருள்வைத்தசேரி சௌந்தரிய நாயகி அம்மனுடன் கூடிய சொர்ணபுரி ஈஸ்வரர் கோவில் கும்பாபிடேகம்.

1969 ஸ்ரீகாசி முதலிய நகரச் சத்திரங்களின் நிர்வாகம் பர்மாவில் இருந்ததை மாற்றி இந்தியாவில் நிர்வாகச் சபை அமைக்க, கோவிலூரில் 96 ஊர்க் கூட்டம் நடைபெற்றது.

1971 சோமசுந்தர ஞான தேசிகர் பரிபூரணம்

1971 ஒன்பதாவது பட்டமாக இராமநாத ஞான தேசிகர் அருளாட்சி ஏற்றார்கள்.

1972 கோவிலூர் நுழைவாயில் முகப்புக் கோபுரங்கள் புதுப்பிக்கப்பெற்றன ஒரு லட்சம் ரூபாய் செலவில் மடம் புதுப்பிக்கப்பெற்றது.

1972 கோவிலூர் மடாலய ஆண்டவர் மன்றம் என்ற பெயரில் நிர்வாகக்குழு ஏற்படுத்தப்பெற்று, புதுக்கோட்டை மாவட்டப் பதிவாளரிடம், சங்கங்கள் சட்டத்தின் கீழ் எஸ். என். 35/1972 ஆக 26–8–1972ல் பதிவு செய்யப்பெற்றது.

1973 நகரத்தார்களின் திருமணம் முதலிய விசேடச் செலவுகளைக் குறைக்க நட

வடிக்கை எடுக்க, கோவிலூரில் 96-ஊர்க் கூட்டம் ஜூன் 16, 17 இருநாட்களும் நடைபெற்றது. இதை யொட்டி குழிபிறை பெரி. சின்னக்கருப்பன் செட்டியார் அவர்கள் தலைமையில நகரத்தார் மாநாடும், அப்போது பாங்க் ஆப் மதுரை சேர்மனாக இருந்த லெ. கிருஷ்ணன் அவர்கள் தலைமையில் இளைஞர் மாநாடும் கவியரசு கண்ணதாசன் அவர்கள் தலைமையில் கவியரங்கமும் நாட்டரசன் கோட்டை டாக்டர் மணிமேகலை மாதவன் அவர்கள் தலைமையில் மாதர் மாநாடும் நிகழ்ந்தன.

1974 திருப்புவனம் வேதாந்த மடாலயம் கோவிலூர் ஆதீனத்துடன் இணைக்கப் பெற்றது.

1975 இராமேசுவரம் நகரச் சத்திரத்திற்கு புதிய நிர்வாகக் குழுவைத் தேர்ந்தெடுக்கக் கோவிலூரில் 96-ஊர்க் கூட்டம் நடைபெற்றது.

1976 காளையார் கோவில் மடாதிபதி ஸ்ரீ அரு. இராமநாத சுவாமிகள், கோவிலூர் ஆதீனத்தின் இளவரசாக நியமிக்கப் பெற்றார்கள்.

1977 ஆதீனகர்த்தர் ஸ்ரீ இராமநாத ஞான தேசிக சுவாமிகள் காசியாத்திரை மேற்கொண்டு, அலகாபாத் — பிரயாகைக் கும்பமேளாவுக்கும் சென்றுவந்தார்கள்.

1977 கோவிலூரில் சிவன் கோவில் திருப்பணி தொடங்கப் பெற்றது.

1977 காஞ்சி காமகோடிபீடம் புதுப்பெரியவர்கள் ஜெயந்திர சரசுவதி சுவாமிகள் கோவிலூருக்கு வருகை.

1977 கோவிலூரில் ஸ்ரீ சங்கர் குருகுலம் தொடங்கப்பெற்றது.

1978 கொற்றவாளீசுவரர் திருநெல்லை நாயகி அம்மன் கோவில் குடநீராட்டு விழா. ஏப்ரல் 21 (சித்திரை 8)

# An Artistic Temple in Chettinad

**M. K. Rangaswami Aiyangar**

With the passing away of the Hindu Kings, the art of temple construction lost its patronage and the sthapathies were obliged to seek other occupations. It was at this juncture that Nagarathars stepped in and enabled them to continue their refined sacred art by undertaking the renovation of old temples; retaining intact the original architectural effect, in contrast to the renovation now being made. They also constructed several small temples, one of which in Koiloor is a standing monument of how well the artisans kept up their skill and tradition.

In Koiloor, a small village three miles from Karaikudi, there was a tiny Siva temple with the Deity "Kotravaleeswarar". About a hundred and fifty years ago, Muthu Ramalinga Swamigal, the head of a mutt in the village, built the temple and constructed a sanctum for the Goddess "Tirunellai Nayaki". His successor Chidambara Swamigal added a very picturesque tank (Theppakulam) with a graceful central pavilion. A few years later Veerappa Gnana Desikar converted the Amman temple into a granite structure with fine sculptures and effected several other improvements to the temple, besides laying broad streets around it. Institutions were also started and maintained for teaching the vedas and the holy scriptures.

This artistic temple in Chettinad with its picturesque tank is well worth a visit by all lovers of art.

—THE HINDU, MADRAS, Sunday Dec. 10, 1960

# உதவிய நூல்கள்


கோவிலூர்ப் புராணமென்னுஞ் சமிவன க்ஷேத்திர மான்மிய வசனம். (பிச்சு சாஸ்திரி மொழிபெயர்ப்பு)

கவிஞர் அரு. சோமசுந்தரன் —கோவிலூர் ஸ்ரீ. துறவு ஆண்டவர் என வழங்கும் ஸ்ரீ. ல. ஸ்ரீ. அருணாசல ஞான தேசிக சுவாமிகள் சரித்திரமும் பிள்ளைத் தமிழும்.

திருக்களர்ப் புராணம் (ஆதியப்பனார் இயற்றியது) அ. நாராயணசாமி அய்யர் பதிப்பு 1932.

ஸ்ரீ குட்டய ஞான தேசிக சுவாமி அவர்கள் மீது இளையான்குடி வேதாந்த மடம் ஸ்ரீ. சிவானந்த சுவாமி அவர்கள் பாடிய தோத்திரப் பாடல்கள்.

திருவண்ணாமலை ஸ்ரீ. ஈசான்ய ஞான தேசிகர் — ஈசான்ய மடம் வெளியீடு.

அருணாசல மகிமை—பரணிதரன்.

மதுரை அருள்மிகு மீனாட்சி அம்மன் கோவில் கும்பாபிஷேக மலர் 1963

சோமலெ — இராமநாதபுர மாவட்டம்
,, — செட்டிநாடும் தமிழும்
,, — திருவண்ணாமலை கும்பாபிஷேக மலர், 1976.

கு. செ. இராமசாமி — வெள்ளோட்டம் (பாகனேரி அருள்தரும் புல்வாய் நாயகி அம்மன் திருத்தேர் திருப்பணிச் சிறப்புமலர்) அரு. கதி. ராம. வெளியீடு.

ஸ்ரீ. பொன்னம்பல ஞான தேசிகர் சரித்திரச் சுருக்கம் (மேற்படி மடாலய வெளியீடு)

ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகள் சரித்திரம் நா. பெ. நா. மு. முத்துராமய்யா இயற்றிய நேரிசை ஆசிரியப்பா, 1910.

பிரார்த்தனை மாலையும் பத்திப் பாடல்களும்.— தவத்திரு இராமசாமி சுவாமிகள் ஏழாவது குருபூசை விழா வெளியீடு.

கோவிலூர் சமாதி ஆலய விளக்கமும் திரு நட்சத்திரங்களும்—வேம்பத்தூர் அம்பிகாபதி பாரதி.

மகாத்மா சரிதாமிருதம்—காசி கானந்த ஞானச்சாரிய சுவாமிகள் (பூவண நாதர் புத்தகாலயம், மதுரை)

காளையார் கோவில் மடத்தின் குரு முதல்வர் செல்லப்ப சுவாமிகள் மீது இளையான்குடி சிவானந்த சுவாமிகள் பாடிய சப்தரச மஞ்சரி.

கோவிலூர் மடத்தின் அத்புதா மகிமா அகூபாரம் காசிகாநந்த ஞானாசாரிய சுவாமிகள், 1967.

ஸ்ரீதத்துவராய சுவாமிகள் அருளிச் செய்த பாடுதுறை

கோவிலூர் ஸ்ரீ முத்துராமலிங்க தேசிகர் என்னும் ஆண்டவர் சரித்திரச் சுருக்கம் (காரைக்குடி மேலமடம் சேவு. பழநியப்ப அய்யா அவர்களால் இயற்றப்பட்டு மதராஸ் ரிப்பன் அச்சியந்திர சாலையில் 1900 இல் பதிப்பிக்கப்பட்டது.)

சேவாஸ்ரமம் சிறப்பு மலர், திருவண்ணாமலை 1967.

திருக்களர் ஆண்டவர் ஸ்ரீ வீரசேகர ஞானதேசிக சுவாமிகளின் அறுபதாவது ஆண்டு நிறைவு குருபூஜை வைர விழா மலர் (ம. கா. கோவிந்த சுவாமி)

திருக்களர் வீரசேகர ஞானதேசிக சுவாமிகள் புராணம், திருக்களர் ஆண்டவர் சரித்திர வசனம் திருப்பூவணம் காசிகானந்த ஞானசாரிய சுவாமிகள். 1932

ஆத்ம சோதனை கவியோகி சுத்தானந்த பாரதியார் (சுத்த நிலையம். சென்னை) 1950

திரு அண்ணாமலைத் தீபவிழா — பி. ஸ்ரீ (ஸ்ரீ தங்கம் பதிப்பகம், 25, டாக்டர் நடேசன் சாலை, சென்னை 5) 1970.

கோவிலூர் மடாலயம் ஆண்டவர் மன்றம் நோக்கங்களும் விதிகளும்.

சோமசுந்தர ஞான தேசிகரவர்கள் சரித்திரச் சுருக்கம்—சோம இராமலிங்க சுவாமிகள் இயற்றியது, 1972.

சிவத்திரு மெய்யப்ப சுவாமிகள் (ஆக்கம் ஸ்ரீ சொக்கலிங்க ஐயா)

ஸ்ரீ சச்சிதாநந்த சிவ அபிநவ நரசிம்ம பாரதி சுவாமிகள் சரித்திரம்—கிருஷ்ணசாமி ஐயர்.

சீடாசார முலமும் பாலபோதினி உரையும் காசிகாநந்த ஞாநாசார்ய சுவாமிகள்

ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகர். புகழ் உரை ரச மஞ்சரி —திருக்களர் ம. கிருஷ்ணநந்த சுவாமிகள், 1961

ஆண்டவனும் ஆண்டவரும்— சொ. சொ. மீ. சுந்தரம்—1978

திருக்களர் ஸ்ரீ—ல—ஸ்ரீ வீரசேகர ஞான தேசிக சுவாமிகள் புராணம்: சிவானந்த சுவாமிகள். திருப்பூவணம் மடாதிபதி காசிகானந்த சுவாமிகள். வெளியீடு1932. பக்கம்—149

திருக்களர் ஆண்டவர்மீது 1500 செய்யுள்கள் (திருப்பூவணம் காசிகாநந்த சுவாமிகள் இயற்றியது)

திருக்களர் ஆண்டவர்மீது பிள்ளைத் தமிழும் தோத்திரப் பாடல்களும்.

கோவிலூர் நால்வர் நான்மணிமாலை— கோட்டையூர் க. வீ. சொ. சி. அழகப்ப ஐயா வெளியிட்டது.

நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு வயிநாகரம் அ. இராமநாதன் செட்டியார் 1953ல் வெளியிட்டது.

திருக்களர் ஆண்டவர் வரலாறு: எழுதியவர்: ஏ. கே. செட்டியார். 1—1—1974ல் சிா. நா. அ. அழ. அ. அழகப்ப செட்டியார் வெளியிட்டது. 24 பக்கம்.

நாநா ஜீவவாதக் கட்டளை—வெளியீடு கோவிலூர் ஆதீனம்

சுவாநுபவத் திருவாக்கு (கோவிலூர் ஆண்டவர் இயற்றியது)

கோவிலூர்த் திருநெல்லையம்மை பிள்ளை தமிழ்

கைவல்லிய நவநீதம்.






